# SCHOOL-HYMNBOOK.

# ஞானப்பாட்டு மாலை



இதிலே

## ஞானப்பாட்டுகளோடு இராகங்கள்

சேர்க்கப்பட்டிருக்கிறது.

வாலிபரும் கன்னிகைகளும் முதிர்ந்த
வயதும் இளவயதுள்ளவர்களும், கர்த்த
ரின் நாமத்தைத் துதிப்பார்களாக.

*9. Stereotype Edition, Revised & Enlarged.*

Tranquebar.

PRINTED BY E. MAENNIG AT THE EV. LUTH. MISSION PRESS.

1898.

# அட்டவணை.

# இயேசுகிறிஸ்து இரட்சகராக வந்த வருகையின பாட்டுகள்.

## ௧. Wie soll ich dich empfangen. (2.)

உலகின் வாஞ்சையான - என் சுவாமி இயேசுவே, - நான் உம்மை ஏற்றதான - வணக்கத்துடனே - சந்திக்கச்செய்வதென்ன, - நான் தேவரீருக்கு - செலுத்த உமக்கென்ன - பிரியமானது.

௨. நீர் சேருகில் களிக்கும் - சீயோன் கிளைகளை - வழியிலே தெளிக்கும்; - நான் உமதுண்மையை - சங்கீதத்தால் துதிப்பேன், - மகிழ்ச்சியுடனே - நான் உம்மைத் தோத்திரிப்பேன், - பெரிய கர்த்தரே.

௩. நான் சகல கெதியும் - இல்லாதே போனேனாய் - நிர்ப்பந்தமுங் கெடியும் - நிறைந்தவனுமாய் - இருந்தபோதன்பாக - நீர் என்னை நோக்கினீர். - நீரே என் மீட்புக்காக - வெளிப்படுகிறீர்.

௪. கட்டுண்டு நான் கிடந்தேன், - நீர் கட்டவிழ்க்கிறீர்; - இகழ்ச்சியைச் சுமந்தேன், - நீர் அதை நீக்கிறீர். - நீர் என்னை மேன்மையாக்கி - என் ஆத்துமத்திலே - ஐசுவரியவனாக்கி - ரட்சிக்க வாறீரே.

௫. மகா நிர்ப்பந்தத்தாலே - அழிவதாகிய - உலகைத் தயவாலே - நீர் பார்த்திருக்கிற - சிநேகந் தேவரீரை - அடியாரண்டைக்கு - வந்தெங்கள் கெட்ட சீரை - திருத்த ஏவிற்று.

௬. வியாகுலம் அடைந்த - சனத்தின் கூட்டமே, - இக்கட்டினால் நிறைந்த - ஆதாமின் சாதியே, - இதோ, சகா

யர் வாறார்; — ஏர்த்தார் கெட்டோருக்கு — இரட்சகரைத் தாறார்; — அத்தால் மகிழ்ந்திரு.

௭. இங்கிந்தத் தேவ பிள்ளை — இறங்க அவரை — இழுக்கத் தேவையில்லை; — தாம்தானே உங்களை — அன்பாய்ச் சந்திப்பதற்கு — இறங்கி வாறாரே; — ரட்சிப்பவரவர்க்கு — சமீபமாகவே.

௮. சுமந்த குற்றத்தாலே — கலங்கினோருக்கு — இம்மானுவேலினாலே — கிலேசம் ஆறுது. — கடன்களைச் செலுத்தி — நரரைத் தம்மிலே — ஆரோக்கியப்படுத்தி — தற்காக்க வாறாரே.

௯. நெஞ்சே, துன்மார்க்கருக்கும் — பகைஞர் உனக்கு — உண்டாக்குந் துன்பத்துக்கும் — பயப்படாதிரு; — உன் மீட்பர் ராசாவாக — வருகிறாரல்லோ, — அவருக்கு முன்பாக — பேய்க் கூட்டம் நிற்குமோ.

௰. பொல்லாதவர்களுக்கு — மா ஆக்கினைகளும் — நல்லோரின் கூட்டத்துக்கு — அனந்த பூரிப்பும் — முடிவிலே உண்டாக — அந்நாளும் வாறாரே. — ஆம், எங்கள் மீட்புக்காக — நீர் வாரும், இயேசுவே.

*P. Gerhardt*, † 1676.

## ௩. Gott sei Dank in aller Welt. (3.)



கர்த்தருக்கிஸ்தோத்திரம்; — மீட்போமென்ற வாசகம் — பிசகாமல் சுவாமியார் — மீட்பரை அனுப்பினார்.

௨. முற்பிதாக்கள் யாவரும் — தீர்க்கதரிசிகளும் — சொல்லி ஆசைப்பட்டது — வந்து நிறைவேறிற்று.

௩. ஆபிரகாமுடை பலன் — இஸ்ரவேலின் சூரியன் — என்ற கன்னி மைந்தனே — வந்தார், சீயோன், உனக்கே.

௪. வாழ, என் வெளிச்சமே, — ஓசியன்னா, சீவனே, — என் இருதயத்திலும் — தயவாய்ப் பிரவேசியும்.

௫. உள்ளே சேரும், ராயரே, — அது உம்முடையதே; — பாவழுக்கனைத்தையும் — அதில் நீரே நீக்கவும்.

௬. நீர் சாதுள்ள தயவாய் - வந்தீர்; அந்த வண்ணமாய் - இப்போதென்மேல் மெத்தவும் - நீண்டசாந்தமாயிரும்.

௭. சாத்தான் வெகு சர்ப்பனை - பண்ணியும், என் மனதை - நீர் எல்லாப் பயத்திலும் - ஆற்றித் தேற்றிக் கொண்டிரும்.

௮. நான் பலத்த உம்முட - மீட்பினால் செம்பீரிக்க - சர்ப்பத்தின் தலையை நீர் - வென்றுடைக்கக் கடவீர்.

௯. நீர் திரும்ப வருகில், - ஜீவாதிபதி, எனனில் - உம தந்தஞ் சாயலும் - காணக் கட்டளையிடும்.

*H. Held*, † um 1643.

## ௪. Mit Ernst, o Menschenkinder. (4.)



குணம் அடை, சீர்கெட்ட - ஆதாமின் சந்ததியே. - தெளிந்து போ, நீ மெத்த - இருண்ட லோகமே. - என், வானராச்சியம் - சமீபமாய்க் கிட்டிற்று. - ஓய், இது கவனித்து - விழிக்குஞ் சமயம்.

௨. பூலோகத்துக்கன்பாக - நர தயாபரர் - உயிர் கதியுமாக - கொடுத்த ரட்சகர் - உங்களிடத்திலும் - இறங்கிறதுக்காக - மிகுந்த கருத்தாக - இருங்கள், யாவரும்.

௩. இருதயக் கெபியை - சுத்திகரியுங்கள், - ராசாவுக்கு வழியை - சரிப்படுத்துங்கள். - நிரம்பு, பள்ளமே; - மேடானதே, நீ தாழு; - போ, முரடே, நீ மாறு; - திருந்து கோணலே.

௪. நொறுங்கப்பட்ட ஆவி - கர்த்தாவுக்கானது. - ஆனால் கொழுத்த பாவி - கெடும் நாள் கிட்டுது. - தேவேவுதலுக்கு - கீழ்ப்பட்ட செம்மையான - மனந்தான் கிறிஸ்துக்கான - கூடாரமாகுது.

௫. ஆ, என்னை நீரே முற்றும் - இக்கடாட்ச நாளிலே - நல்லாயத்தப்படுத்தும், - என சுவாமி இயேசுவே. - நீர் முன்னணையிலே - இருந்தென் நெஞ்சில் வாரும், - நான் உம்மை நித்தம் பாடும் - மகிழ்வுண்டாகவே. **V. Thilo**, † 1662.

## ௫. Nun jauchzet all, ihr Frommen. (5.)



சந்தோஷத்தோடிருங்கள், — எல்லாச் சன்மார்க்கரே, — துதி பலியிடுங்கள்; — ராசாதி ராசாவே — ரட்சிப்புண்டாக் குவார், — பொல்லாங்கனை நன்றாக — செயிக்க ஏழையாக — பிரசன்னமாகிறார்.

௨. எளியோராய் வந்தேறி — பிரவேசம் பண்ணினார். — ஏன், லோக வாழ்வைத் தேடி — பகிர வந்திரார். — நமக்கு வானவர் — சுதந்தரமுண்டாக — அவர் பலியாய்ச் சாக — பிரவேசம் பண்ணினர்.

௩. பரங்களுக்கும் ஏற — உயர்ந்த சுவாமியார் — செங் கோல் கிரீடந் தேட — இப்பூமியில் வரார். — அவர் மகத் துவம் — இங்கவர் நமக்காக — மரிக்கும் நாள்மட்டாக — மகா ஒளிப்பிடம்.

௪. துரைகளே, நற்புத்தி — உணர்ந்து, இவர்க்கே — கன மெல்லாஞ் செலுத்தி, — நடுக்கத்துடனே — இருந்தால் பாக் கியம். — ஏன், கீழ்ப்படாதோர்மீது — இனி இறங்குந் தீது — மகா பயங்கரம்.

௫. இப்போதும் இங்குமங்கும் — உபத்திரத்திலே — இக் கட்டினால் கலங்கும் — எளியவர்களே, — பயம் மறந்தோர் போல் — களித்து, இவர்தாமே — எல்லாக் கதியுமாமே — என்றாடிப் பாடுங்கள்.

௬. இனிப் பிரஸ்தாபமாக — வெளிப்படுகிறார். — அப்போ மா பூரிப்பாக — துக்கிப்பை மாற்றுவார். — கண்ணீர் துடைக்கிறார். — தீபட்டியைப் பிடித்து — செபத்திலே விழித்து — இருங்கள், வருவார்.

*M. Schirmer*, † 1673.

## ௮ Nun komm, der Heiden Heiland. (8.)



வாரும், லோக மீட்பரே, - கன்னிபெற்ற மைந்தனே, -
நீர் பிதாவின் காணிக்கை, - உலகத்தின் அருமை.

௨. தாய் திவ்விய ஆவியால் - கர்ப்பவதியானதால் -
ஆதி வார்த்தை நமக்கு - ஒத்த சென்மமாயிற்று.

௩. கற்புடைய சுத்தத்தின் - சீர்கலங்காக் கன்னியின் -
கர்ப்பத்தில் மா சுவாமியார் - உற்பவித்துச் சென்மித்தார்.

௪. சூரியோதயத்துக்கு - சாயலாக நமது - பொழுதான
ரட்சகர் - தாழ்விலே உதித்தவர்.

௫. ஆனால் உன்னதத்திலே - தான் இருந்து வந்தாரே; -
பேயை வென்றிறங்கினார், - மீண்டும் வானம் ஏறினார்.

௬. நித்திய பிதாவுக்கே - ஒத்த சுவாமி, உம்மிலே - நீர்
பிறந்த சாதியும் - வெல்ல வெற்றியாயிரும்.

௭. உம்முடைய முன்னணை - மின்னி ராவில் ஒளிவை -
காட்டும், எங்கள் நெஞ்சிலும் - பிரகாசித்தேயிரும்.

௮. உன்னத பிதா சுதன் - ஆவியை அவனவன் - தய
வுள்ள தம்பிரான் - என்று போற்றக் கடவான்.

*M. Luther, † 1546.*



# கிறிஸ்து பிறப்பின் பாட்டுகள்.

## ம. In dulci Jubilo. (10.)



அறப்பிருக்கும்போல் - மகிழ்ந்து பாடுங்கள், - நம்மை ஆறறும் நன்மை - இம்முன்னணையிலே - மா சூரியன் அத் தன்மை - விளங்கும் பிள்ளையே, - ஆதியந்தமே.::

உ. தெய்வீக பிள்ளையே, - அன்புள்ள இயேசுவே, - உம் மால் நான் களிக்க - என் நெஞ்சைத் தேற்றுமேன்; - நீர் என்னை ஆதரிக்க - நான் உம்மை அண்டினேன். - என்னைச் சேருமென.::

ௗ. பிதாவின் தயவும் - குமாரன் பட்சமும் - பாவத் தைக் கழிக்கும். - நாம் கெட்டோர், திக்கில்லார். - ஆனால் எல்லாக் கதிக்கும் - வழியைச் சுவாமியார் - உண்டுபண் ணினார்.::

ச. மெய்யாய் மகிழுவே - வாழ்வேது, மோட்சமே. - அங்கே வானோர் பாடும் - சங்கீதம் இன்பமே. - ராசாவின் ஊரில் ஆடும் - மணிகள் ஓசையே, - வா, வா, மோட் சமே.::

*Petrus Dresdensis*, † 1440.

## ௰௨. Gelobet seist du, Jesu Christ. (12.)



இரக்கமுள்ள இயேசுவே, - மனுச் சென்மமாய்த் தானே - பிறந்த உம்மைப் பாடுவோம், - வானோரும் பாடக் கேட்கிறோம. - இரக்கமே.

௨. ஒன்றான தேவபுத்திரர் - எங்கள் ரூபமானவர். - ஓர் முன்னணையிலே, இதோ, - படுத்திருக்கிறார் இப்போ. - இரக்கமே.

௩. அளவில்லாத வல்லவர், - உலகத்தைத் தாங்கினர், - சிறு குழந்தையாய்த் தாயார் - மடியிலே கிடக்கிறார். - இரக்கமே.

௪. அனாதி சோதி பூமிக்கு - புது ஒளி வீசுது, - அதே இராவிருளிலும் - உதித்துப் பிரகாசிக்கும். - இரக்கமே.

௫. இந்நீசருக்கு மோட்சத்து - வாழ்வுண்டாகிறதுக்கு - புவியில் தேவபுத்திரர் - மா பரதேசியானவர். - இரக்கமே.

௬. நமக்கிரங்கி வானத்தில் - நம்மை மாளா ஆஸ்தியில் - சம்பன்னராக்க ரட்சகர் - மகா எளியோரானவர். - இரக்கமே.

௭. மட்டற்ற தமதன்புட - உட் கருத்தைக் காண்பிக்க - பிறந்த கிறிஸ்துக்குத் துதி; - கிறிஸ்தோரின் கூட்டமே, களி. - இரக்கமே.

*M. Luther*, † 1546.

## ௰௪. Wir singen dir, Immanuel. (14.)



கர்த்தாதி கர்த்தராகிய - புவியின் பொழுதென்கிற - இம்மானுவேலே, உமக்கு - துதி வரக்கடவது. - அல்லேலூயா.

௨. ஆசிக்கப்பட்ட தேவரீர் - அன்பாக வந்திருக்கிறீர் - என்றும்மை பாடி நாங்களும் - வானோருடன் துதிக்கவும். - அல்லேலூயா.

௩. உலகுண்டான நாள்முதல் - பிதா பிதாக்களின் திரள் - உமக்கு வாஞ்சையுடனே - காத்திருந்தார்கள், சீவனே. - அல்லேலூயா.

௪. சங்கீதங்களில் உம்முட - அதிசயத்தைப் பாடின - தாவீத் விசேஷமாகத்தான் - நீர் வருவதை ஆசித்தான். - அல்லேலூயா.

௫. ஆ, சீயோனிலிருந்துண்டாம் - ரட்சிப்பு வந்தால் வாசியாம், - சிறையிருப்பைக் கர்த்தர்தான் - அப்போ திருப்பாரோ என்றான். - அல்லேலூயா.

௬. இப்போதும் வந்தீர், மீட்பரே, - அங்கே ஓர் முன்னணையிலே - அடியார் வாழ்வதற்கு நீர் - எளியோராய்க் கிடக்கிறீர். - அல்லேலூயா.

௭. பரங்களைவிட்டிங்கே நீர் - மா பரதேசியாகிறீர், - வானோர் வணங்கும் உமக்கு - முலைப்பால் தேவையாயிற்று. - அல்லேலூயா.

௮. கடலுக்கெல்லையை வைத்தீர், - இப்போ கர்த்தாவாந் தேவரீர் - துணியில் சுற்றிப்புல்லிலே - படுக்க வைக்கப்பட்டீரே. - அல்லேலூயா.

௯. எத்தீங்கையும் நரருட - நிமித்தியஞ் சகிக்கிற - உம்மாலே ஆறுதலெல்லாம் - விழுந்த எங்களுக்குண்டாம். - அல்லேலூயா.

௰. எரோதேயைப்போல் உமக்கே — அநேகர் உலகத்திலே — விரோதமான துர்க்குணர், — நீரோ நரர் சிநேகிதர். — அல்லேலூயா.

௰௧. ஆ, தேவரீரை அடியேன் — சிநேகித்தேயிருக்கிறேன்; — ஆனால் இந்நேசம் மிகவும் — வளரப்பண்ணியருளும். — அல்லேலூயா.

௰௨. அது போதாது, ஆகிலும் — நீர் என்னை அன்பாய்ப் பார்த்திரும்; — என்னிலுண்டானதுமக்கு — ஒப்புக்கொடுத்திருக்குது. — அல்லேலூயா.

௰௩. என் பலவீனத்துக்கு நீர் — அனுக்கிரகிக்கத் தேவரீர் — தாமே இவ்வுலகத்திலே — பலட்சய ரூபானீரே. — அல்லேலூயா.

௰௪. ஆ, அந்தமாட்டுக்கொட்டிலும் — புல்லென்கிற படுக்கையும் — அடியார்க்காக உமக்கு — பிரியமாயிருந்தது. — அல்லேலூயா.

௰௫. இந்நீசப்பாவியையும் நீர் — இரக்கமாய்க் கண்ணோக்குவீர் — என்றதினாலே எனக்கு — மனத்திடன் இருக்குது. — அல்லேலூயா.

௰௬. நான் மெத்த அவசுத்தனாயும் — பாவியுமாயிருந்தாலும் — பயப்படேன்; பாவியையே — அழைக்கிறீர், என் இயேசுவே. — அல்லேலூயா.

௰௭. நான் ஆக்கினைக்கென் பாவத்தால் — நேரஸ்தனாயிராவிட்டால் — நீர் இந்தச் சிறுமையிலே — பிறக்கத் தேவையில்லையே. — அல்லேலூயா.

௰௮. திடன்கொண்டும்மைப்பற்றினேன், — உம்மால் ரட்சிக்கப்படுவேன், — உம்மால் என் பாவஞ் சாபமும் — எல்லா இக்கட்டும் போய்விடும். — அல்லேலூயா.

௰௯. நீர் என் தலை, நான் உமது — அவயவம், நான் உமக்கு — தேவாவியின் சகாயத்தால் — கீழ்ப்பட்டிருக்கும் வேலையாள். — அல்லேலூயா.

௨௰. இம்மையில் நித்தநித்தமும் — மறுமையில் என்றென்றைக்கும் — துதியை உமக்கடியேன் — மா பூரிப்பாய்ச் செலுத்துவேன். — அல்லேலூயா.

*P. Gerhardt*, † 1676.

## ௰௫. Freuet euch, ihr Christen alle. (15.)



கிறிஸ்தவர்களே, களித்து - தமது குமாரனை - ஈவாய்த் தந்த கர்த்தரை - இனிதாயிஸ்தோத்திரித்து - போற்றுங்கள், பராபரர் - நமக்குறவானவர். - மா சந்தோஷம், தெய்வபிள்ளை - மீட்பரானார். பயமில்லை. - பூரிப்பாவோம், அவர்தாமே - கிருபை பகலோனுமே.

௨. ஆ, என் மனதே, நன்றாக - பார், உன் மீட்பர் எத்தனை - பட்சமாக உன்னண்டை - வந்திறங்கி உனக்காக - ஏழையாய்ப் பிறக்கிறார், - அவர் முன்னணையைப் பார். - மா சந்தோஷம், மு.

௩. உம்மை என்னமாய்த் துதிப்பேன், - இயேசுவே, உம்மாலே நான் - மீட்கப்பட்டேன் என்றுதான் - செய்கையாலே அறிவிப்பேன். - உம்மால் தேற உம்மிலே - தாபரிப்பேன் சீவனே. - மா சந்தோஷம். மு.

௪. நீர் பிறந்த சாதியான - மனிதரின் கேட்டுக்கு - நீர் இரங்கி, உமது - மந்தைக்கு மகிழ்ச்சியான - புது வருஷத்தையும், - சுவாமி, கட்டளையிடும். - மா சந்தோஷம். மு.

*Christ. Keymann*, † 1662.

## ௰௭. Lobt Gott, ihr Christen allzugleich. (17.)



சபையே, இன்று வானத்தை - திறந்து தமது - சுதனை ஈயுஞ் சுவாமியை - துதித்துக்கொண்டிரு.::

௨. பிதாவோடொத்த இவரே - குழந்தையாகிறார். - திக்கற்று முன்னணையிலே - கிடக்கவும் வெட்கார்.::

௩. சிறியோராக ஆண்டவர் - பலத்தை மாற்றினார். - பண்செய்வன் ரூபைச் சிஷ்டிகர் - தாமே எடுக்கிறார். :,:

௪. தூதர்க்களின அதிபதி - முலைப்பால உண்கிறார். - எளிய கன்னியாஸ்திரி - கர்த்தாவுட தாயார். :,:

௫. புவியில் அவர் பரம - இராச்சியத்தையே - உண்டாக்க வந்தோராகிய - தாவீதின் மைந்தனே. :,:

௬. தெய்வீக சுபாவம் நம்மிலே - உண்டாக்கச் சுவாமியார் - நரரின் சுபாவமாய் இங்கே - பிறந்திருக்கிறார். :,:

௭. தாழ்ந்தோர் அவர். உயர்ந்தோன் நான், - இதென்ன மாறுதல்; - இதுன்னத சிநேகந்தான், - இதன்பின ஆழங்கள். :,:

௮. திரும்பப் பரதீசுக்கு - வழிதிறந்துபோம், - கேருபின் காவல் வாங்கிறது; - மகிழ்ந்து பாடுவோம். :

*N. Hermann*, † 1561.

## ௰௮. Fröhlich soll mein Herze springen. (18.)*



தூதர்கள் சந்தோஷமாக - பாடச்சே - என்னிலே - நெஞ்சு துள்வதாக. - கேளுங்கள், ஆகாசமெங்கும் - கிறிஸ்துவின் - சென்மத்தின் - கீதங்கள் முழங்கும்.

௨. இன்று ரட்சகர் சென்மித்தார், - நமது - மீட்புக்கு - மீட்பராய் உதித்தார். - தேவ மைந்தன் தாழ வந்தார், - மா கர்த்தா - நம்முட - சாதியாய்ப் பிறந்தார்.

௩. கேட்டை நம்மை விட்டகற்ற, - இன்றைக்கு - நமக்கு - தாம் பிரியப்பட்ட - மைந்தனைக் கொடுத்த நல்ல - ஆண்டவர் - மனிதர் - சத்துராதியல்ல.

௪. தம்மை நமக்கீவாய்த் தந்து - நம்முட - சகல - தீங்கை நீக்கவந்து - மீட்பரான தேவ பிள்ளை - நேசமும் - தயவும் - அற்றிருப்பதில்லை.

௫. தாம் நராள்களைப் பகைத்தால் - அல்லது - கேட்டுக்கு - தீர்த்துக்கொண்டு வைத்தால் - ஏன் இச்சென்மமாய்ப்பிறப்பார், - ஏன் அவர் - மனிதர் - பாரத்தைச் சுமப்பார்.

சு. கெட்டுப்போன நமக்காக - கஸ்தியாய் - நோவுமாய் - உத்தரித்துச் சாக - ஆட்டுக்குட்டியாகத் தாமே - தாழ்மையாய் - சாதுமாய் - இங்கே வந்தோராமே.

எ. அவர் வெகு பட்சத்தோடே - ஏழையை - நீசனை - பார்த்து அவனோடே, - என் சகோதரா, என்னாலே - நோய்க்கெல்லாம் - முகிவாம் - என்கிறார் அன்பாலே.

அ. ஆகையால் அனைவராக - துக்கத்தை - தீர்ப்பரை - அண்டிக்கொள்வோமாக, - நரநேசர் இவர்தாமே. - கடாட்சமும் - சீவனும் - இவரால் உண்டாமே.

கூ. தன்பத்தால் வதைந்தபேரே - சகல - ஆனந்த - செல்வத்துக்கும் நேரே - போகும் வாசலும் வழியும் - கிறிஸ்தல்லோ; - பாடிப்போ - மிஞ்சியும் முகியும்.

௰. எவனைத் தன் பாவங் குத்தி - இரவும் - பகலும் - கவலைப்படுத்தி - வருதோ, அவனுக்காக - ரட்சகர் - வந்தவர் - மத்தியஸ்தராக.

௰க. ஏழைகள் தாராளமாக - கிறிஸ்தண்டை - கைகளை - நீட்டுவார்களாக. - இங்கே ஆத்துமம் பிழைக்கும், - சகல - பூரண - நன்மைகள் கிடைக்கும்.

௰உ. உம்மைக் கொம்பாய் நான் பிடிப்பேன், - மீட்பரே, - உம்மிலே - என்றைக்குந்தரிப்பேன்; - நீர் என் சீவன், சாவைக் காணேன்; - சாபமே, - துக்கிலே, - போ, நான் நீங்கலானேன்.

௰ங. என் கடன் என்மேல் நிற்காது, - என் திரள - பாவங்கள் - அப்புறங் காணாது. - யாவையுஞ் சுமந்து தீர்ப்பர், - சுவாமி நீர், - தேவரீர் - மா பலத்த மீட்பர்.

௰ச. உம்மால் சுத்தமாயிருப்பேன், - உம்முட - பூரண - நீதியை உடுப்பேன், - உமமை மனதில் அடைப்பேன், - உம்மையே - அதிலே - ஆஸ்தியாக வைப்பேன்.

௰ரு. இங்கே உமக்குப் பிழைப்பேன், - உம்மையே - சாவிலே - பற்றிக்கொண்டணைப்பேன். - அங்கே எனக்கென்றென்றைக்கும் - உம்முட - பாக்கிய - சமுகங் கிடைக்கும்.

*P. Gerhardt*, † 1676.

## உ௰ Vom Himmel hoch. (20.)





தெய்வ தூதன சொல்லுகிறது.

பரத்திலேயிருந்துதான் - அனுப்பப்பட்ட தூதன் நான் - நற்செய்தி அறிவிக்கிறேன், - பயப்படாதிருங்களேன்.

உ. இதோ, எல்லாச் சனத்துக்கும் - பெரிய நன்மையாய் வரும் - சந்தோஷத்தைக் களிப்புடன் - நான் கூறுஞ் சுவிசேஷகன்.

௩. இன்றுங்கள் கர்த்தரானவர், - மேசியா உங்கள் ரட்சகர், - தாவீதின் ஊரில் திக்கில்லார் - ரட்சிப்புக்காகச் சென்மித்தார்.

௪. பரத்திலே நாம் ஏகமாய் - இனி இருக்கத்தக்கதாய் - இக்கட்டும் பாவமுமெல்லாம் - இம்மீட்பரால் நிவிர்த்தியாம்.

௫. குறிப்பைச் சொல்வேன்: ஏழையாய் - துணியில் சுற்றப்பட்டதாய் - இப்பிள்ளை முன்னணையிலே - படுக்கும்; ஆர், கர்த்தர்தாமே.

விசுவாசிகள் சொல்லுகிறது.

௬. களிப்பாய் நாமும் மேய்ப்பரின் - பிறகாலே சென்று சுவாமியின் - ஈவானதை நாம் கேட்ட சொல் - படியே பார்ப்போம், வாருங்கள்.

௭. ஆர் அங்கே முன்னணையிலே - கிடக்கிறார், என் மனதே, - இப்பிள்ளையை நீ உற்றுப் பார். - இதே உன் இயேசு சுவாமியார்.

௮. என் சுவாமி வாழ, பாவியை - நீர் கைவிடாமல் இத்தனை - தாழ்வாய் என்னண்டை வந்தது - அளவில்லாத தயவு.

௯. எல்லாஞ் சிஷ்டித்த தேவரீர் - இம்மட்டுக்கும் இறங்கினீர்; - இங்கே இப்புல்லின்மேல், ஐயோ, - நீர், சுவாமி, வைக்கப்பட்டீரோ.

௰. பூலோகம் வெகுவத்தனை - விஸ்தாரம் நேத்தி மகிமை - ஆனாலும் உம்மைக் கொள்ளுமோ, - அதுமக கொரு தொட்டிலோ.

௰௧. மகா இராசா, உமது - பொற்சரிகை சிங்காரிப்பு - விலூதிப்பட்டுமேதெனில் - துணியின் துண்டு, காய்ந்த புல்.

௰௨. பூலோகத்துப் பிரஸ்தாபமும் — மினுக்கு செல்வம் ஆஸ்தியும் — அனைத்தும் மாய்கை என்று நீ — இத்தால் நன்றாகக் காண்பித்தீர்.

௰௩. ஆ, இன்பமான இயேசுவே, — மெய் ஆஸ்தியான உம்மையே — நான் பெற்றிருக்க என்றைக்கும் — என் நெஞ்சில் வாசமாயிரும்.

௰௪. அதினால் நான் நித்தம் பூரிப்பாய் — இருந்து மா சந்தோஷமாய் — இம்மாய்கையை வெறுக்கிறேன், — கதியாம் உம்மைப் பார்ப்பேன்.

௰௫. பிரிய ஏக மைந்தனை — பாராமல் தந்த சுவாமியை — இஸ்தோத்திரிப்போம், பூமிக்கு — ரட்சிப்பின் நாள் உதித்தது.

*M. Luther*, † 1546.

## ௨௧. Herr Christ, der ein'ge. (21.)



பிதாவுட ஒன்றான — சேயா, அவருட — தற்சுபாவ அச்சமான — அருணி சூரியா, — வானோரனைவராலும் — பணியப்பட்டன்பாலும் — நிறைந்த கிறிஸ்துவே,

௨. அடியார் நன்மைக்காக — குறித்த காலத்தில் — நீர் நரசென்மமாக — எளிய கன்னியில் — பிறந்து சாவை வென்று, — உயிரைத் தாறேமென்று — ரட்சிப்பைக் கூறினீர்.

௩. நற்பத்தியில் பதைத்து — நற்சீரில் பெருகி — உம்மால் நிரப்பப்பட்டு — மா வாஞ்சையாயினி — தேவறிவில் வளர — தேவன்பையும் உணர — சகாயராயிரும்,

௪. எல்லாத்தையுஞ் சிஷ்டித்த — பிதாவின் சத்தியே, — நராட்களை ரட்சித்த — தெய்வீக மீட்பரே, — உம்மோடே ஐக்கமாக — நீர் எங்களை நன்றாக — திருப்பும், இயேசுவே.

௫. நீர் எங்களில் உண்டான — பொல்லாப்பை முற்றிலும் — அழித்து, நவமான — குணத்தைச் சிஷ்டியும். — எப்போதும் உம்மைத் தேட — நீர் எங்கள் நெஞ்சை ஏற — இழுத்துக்கொள்ளுமேன்

*E. Creutzigerin*, † 1535.



# வருஷப்பிறப்பின் பாட்டுகள்.

௨௬. Nun lasst uns gehn und treten. (26.)



இம்மட்டுஞ் சீவன் தந்த — கர்த்தாவை அத்தியந்த — பணி
வாய் உண்மையாக — ஸ்தோத்திரிப்போமாக.

௨. நாள் பேச்சைப் போல் கழியும். — தண்ணீரைப்
போல் வடியும். — ஆனால் இந்நாள் வரைக்கும் — இவ்வேழை
மண் பிழைக்கும்.

௩. அநேக விதமான — இக்கட்டையும் உண்டான —
திகிலையுங் கடந்தோம், — கர்த்தாவின் மீட்பைக் கண்டோம்.

௪. புசலை வரக் கண்ட — தாய் தன்னுடை உகந்த — குழந்
தையை நன்றாக — தற்காக்கும் வண்ணமாக,

௫. கர்த்தாவின் கை தன்னில் — இரட்சகரின் காலில் —
விழுந்தண்ணார்ந்து பார்க்கும் — சன்மார்க்கரைத் தற்காக்
கும்.

௬. ஆம், எங்கள் எச்சரிப்பும் — விசாரிப்பும் விழிப்பும், —
தயாபரா, நீர்தாமே — காக்காவிட்டால் வீணே.

௭. தினமும் நவமான — அன்பாய் நீர் செய்துதான —
அனுக்கிரகத்துக்காக — துதி உண்டாவதாக.

௮. இனியும் நீர் நேரிட்டு, — அடியாரை ரட்சித்து, —
எல்லா இக்கட்டிலேயும் — அன்பாய்ச் சகாயஞ் செய்யும்.

௯. துன்னாளில் நாங்கள் தாழ்ந்து — மிரண்டும் உம்மைச்
சார்ந்து — நிலைக்கிறதுக்காக — திடன் அளிப்பீராக.

௰. மா சனச் சேதத்துக்கு — உண்டான போர்களுக்கு —
ஓர் முகிவு வரட்டும், — நெருங்கினதைக் கட்டும்.

௰௧. சபையை ஆதரித்து — அன்பாய் ஆசீர்வதித்து —
எல்லாரின் மேல் அன்றன்றும் — அருள் உதிக்கப்பண்ணும்.

௰௨. பொல்லாரைத் தயவாக — திருப்பிக்கொள்வீராக, —
இருளிலே திரியும் — சனத்துக்கொளிவீயும்.

௰௩. திக்கற்றவரைக் காரும், — நோவாளிகளைப் பா
ரும், — துக்கித்தவரைத் தேற்றும், — சாவாரைக் கரையேற்
றும்.

௰௪. பாத்துக்கு நேராக — நடக்கிறதுக்காக — அடியாரை எந்நாளும் — தேவாவியாலே ஆளும்.

௰௫. அடியார் அத்தியந்த — பணிவாய்க் கேட்டுவந்த — வரங்களை அன்பாக — தந்தருளுவீராக.

*P. Gerhardt*, † 1676.

## ௨௭. Hilf, Herr Jesu! lass gelingen. (27.)



வருஷப்பிறப்புண்டென்று — புதுப் பத்தியுடனே — தேவரீரை நான் பின்சென்று — வர நீர்தான், இயேசுவே, — எனக்கும் என் வேலைக்கும் — வழிகாட்டியாயிரும்; — எனக்கிப்போதும் இனியும் — ஆசீர்வாதத்தை அளியும்.

௨. இது கிருபை பொழியும் — வருஷமாகட்டுமேன்; — என்னை நீர் பிரகாசிப்பியும்; — என் அழுக்கை அடியேன் — மனஸ்தாபத்துடனே — பார்த்தருவருக்கவே; — நற் குணத்தையும் அளியும், — பாவம் யாவையும் மன்னியும்.

௩. நீர் என் அழுகையைக் கண்டு — துக்கத்தால் கலங்கின — அடியேனைத் தேற்றிவந்து — நித்தம் நித்தம் உம்முட — கையால் என்னைத் தாங்கவும் — பாவத்துக்குங் கேட்டுக்கும் — தப்புவிக்கவும் அன்பாக — தயவருளுவீராக.

௪. மாயமற்ற கிறிஸ்தோனாக — இந்த வருஷத்திலே — நான் நடக்கத்தக்கதாக — ஈவளியும், கர்த்தரே. — யாவர் மேலும் பட்சத்தை — வைத்துத் தேவ பத்தியை — எனக்கு ரட்சிப்புண்டாக — காண்பித்தேயிருப்பேனாக.

௫. பூரிப்பாய் இவ்வருஷத்தை — நான் முடிக்க என்னை நீர் — தாங்கி உமது கரத்தை — என்மேல் வைக்கக் கடவீர். — சகல இக்கட்டிலும் — என்னை ஆதரித்திரும். — உம்மைப் பற்றிச் சுகமாக — சாவிலுங் கெலிப்பேனாக.

*J. Rist*, † 1667.



# இயேசுவின் நாமங்களின்பேரில் பாடுகிற பாட்டுகள்.

## உ௮. Ach Jesu, dessen Treu. (28.)



ஆ, இயேசு, உமது - சிநேகம் ஒப்பில்லாது, - விண்மண்ணிலுள்ளவர் - துதிப்புக்கும் எட்டாது. - நீர் நரசென்மத்தை - எடுத்தென் சாபத்தை - சுமந்துகொண்டது - மட்டற்ற கிருபை.

௨. நீர் பெற்ற நாமமே - குளிர்ந்ததாயிருக்கும்; - அதென் வியாகுலம் - எல்லாத்தையும் எடுக்கும். - நீர் இயேசு என்றதாய் - அழைக்கப்பட்டது - மா இன்பம், அதினால் - என் துக்கம் நீங்கிற்று.

௩. அன்புள்ள இயேசுவே, - நீர் என்னுட களிப்பு. - நீர் கொண்ட நாமமும் - எல்லாத்திலுந் தித்திப்பு. - நான் துயரப்படேன்; - ஏன், இயேசு என்பவர் - வியார்த்தியின்படி - பலத்த ரட்சகர்.

௪. பிசாசு மனதை - தன் தீவினைகளாலே - கலக்கப்பார்க்கையில், - இம்மேன்மை நாமத்தாலே - திரும்ப ஆறுதல் - வெளிச்சம் ஞானமும் - உண்டாகி, சகல - மந்தாரம் போய்விடும்.

௫. என் மீறுதல்களால் - நான் மெத்த குற்றவாளி, - நீர் இயேசு ஆகையால் - நான் மோட்சத்தின் பங்காளி. - என் பாவக் குற்றத்தை - நிவர்த்தி பண்ணினீர், - பிதாவின் தயவை - என்மேல் விரிக்கிறீர்.

௬. என் பாவத் தீழ்ப்பை நீர் - பரிகரிப்பீராக. - அசுத்தனான நான் - மாசற்றுப் போவேனாக. - உம்மால் என் சாபமும் - என் குஷ்டரோகமும் - போய், ஆசீர்வாதமும் - சுகமுங் காணவும்.

௭. நீர் இயேசு என்பது - மகிழ்ச்சியைக் கொடுக்கும், - வறட்சியில் அது - மழையைப்போல் இருக்கும். - ஆ, உம்முடைய பேர் - என் தாவுங் கோட்டையும் - கனமுஞ் செல்வமும் - கதியுமாகவும்.

அ. நீர் மோட்சத்தின் வழி, - நீர் சத்தியம் உயிரும். - உம்மால் இப்பூமியில் - என் ஆத்துமம் மகிழும். - நான் சாகப் போகையில் - உம்மால் என் முடிவும் - நறபாக்கி யத்துடன் - இருக்கக் கற்பியும்.

கூ. ஆனால் இருக்கிற - நாள்மட்டும் உண்மையாக - நடக்க எனக்கு - ஒத்தாசை செய்வீராக. - நான் செய்யவேண் டிய - என் ஊழியத்துக்கும் - நீர் உமதாவியின் - வரத்தைத் தரவும்.

௰. நான் இயேசு நாமத்தில் - தினம் எழுந்திருந்து, - நான் இயேசு நாமத்தில் - என் வேலைக்குட் புகுந்து, - நான் இயேசு நாமத்தில் - எப்போதும் யாவையும் - துவக்கிக் கொள்ளவும் - முடித்துப் போடவும்.

௰க. நான் தேவரீருக்கு - இவ்வுலகில் பிழைப்பேன, - நான் தேவரீரையே - மரிக்கும்போதணைப்பேன். - உம் மாலே மோட்சத்தில் - நான் உட்பிரவேசிப்பேன், - அங் கும்மை என்றைக்கும் - துதித்துப் போற்றுவேன்.

*J. Heermann,* † 1647.

உகூ. Jesu, frommer Menschenheerden. (29.)



ஆடுகளின் உண்மையான - மேய்ப்பரே, இரங்குமேன். - நானும் உம்மைச் சேர்ந்ததான - உமதாடாகட்டுமேன். - ஆடுகளுக்காய் அன்பாலே - சீவனை நீர் தந்ததாலே - என் னையும் மீட்டீரல்லோ, - அந்த அன்புக்கொப்புண்டோ.

உ. மந்தைக்கும் நல்மேய்ப்பனுக்கும் - ஒன்றுக்கொன்று அன்புண்டே, - அப்படி இங்கேயிருக்கும். - என்மேல் நேசத் தை நீரே - வைக்கக்கொள்ள உம்மை நானும் - என் கர்த் தாவும் எசமானும் - என்று பற்றி உம்மையே - நேசிப் பேன், என் நேசரே.

ங. தங்கள் மேய்ப்பனை நன்றாக - ஆடுகள் அறியுமே. - மேய்ப்பனும் மா திட்டமாக - தனது மந்தையிலே - எந்த

ஆட்டையும் அறிந்து — காக்கும்போல், ஓனாய் திரிந்து — பீறப் பார்த்த என்னை நீர் — காத்துக்கொண்டிருக்கிறீர்.

௪. மேய்ப்பன் காட்டுஞ் சத்தத்துக்கு — ஆடுகள் செவி தரும், — ஆடு கூப்பிட்டால் அதுக்கு — மேய்ப்பன் கவனிப்பதும் — உண்டு. ஆ. நீர் சத்தமிட்டால் — கேட்பேன்; என்னை நீர் கண்டித்தால் — சீர் அடைவேன்; எனக்கும் — அன்பாய் நீர் செவிகொடும்.

௫. ஆம், நான் கூப்பிட்டால் நீர் கேளும், — உண்மையுள்ள மேய்ப்பரே, — மந்தையில் ஒவ்வொன்றின் மேலும் — மூர்க்கமாந் தோண்டானுக்கே — தப்ப உம்மைக் கருத்தாக — நான் மன்றாடுவதற்காக — என்னை ஏவும், என்னை நீர் — அப்போதாற்றித் தேற்றுவீர்.

௬. எனதாவி உம்மைப் பற்றும், — கர்த்தரான இயேசுவே, — வேண்டிக்கொண்டு தேடித்தட்டும் — என்னைத் தயவுடனே — கேட்டு ஆதரிப்பீரென்றும் — உம்மால் நான் சுகிப்பேனென்றும், — இயேசுவே, நான் நம்பினேன், — நம்பி ஆமென் என்கிறேன்.

*Sigmund v. Birken*, † 1681.

## ௫௨. Mein Herzens-Jesu, meine Lust. (32.)



பிரியமான இயேசுவே, — என் நெஞ்சைத் தயவாக — நீர் பூரிப்பாக்கி, என்னிலே — பலத்த தேற்றலாக — தெய்வீக அன்பை ஊற்றிய — படியினால், நான் உம்முட — துதியைச் சொல்வேனாக.

௨. என் நெஞ்சில் உம்மால் பற்றின — சிநேகத் தீ எரியும். — என் மனதும்மால் உத்தம — மகிழ்ச்சியை அறியும். — நான் உம்மை நோக்கும்போதெல்லாம் — என் துக்கம் உம்மிலே உண்டாம் — அருளினால் தெளியும்.

௩. நீர் என் வெளிச்சம், உம்மால் நான் — திறந்த முகமாக — பிதாவின் இன்ப நெஞ்சைத்தான் — என் ஆறுதலுக்

காக - சண்ணுக்கிறேன். ஆ, தயவாய் - நீர் என்னை வரங் காச் சோதியாய் - பிரகாசிப்பிப்பீராக.

ச. நீர மோட்சத்துக்குப் போம்வழி, - இதற்குள்ளான ஆரும் - தப்பாய்ப்போகான், இதேசரி. - விலகினுரெல் லாரும் - அழிந்துபோறவர்கள்தான். - வழியாஞ் சுவாமி, உம்மில் நான் - நிலைக்க என்னைக் காரும்.

ரு. நீர் சத்தியம், நான் உம்மையே - தெரிந்துகொண் டிருப்பேன்; - பொருளுஞ் சாரமும் நீரே, - வீண் மாய் கையை வெறுப்பேன். - உம்மாலே பாக்கியம் வரும். - மெய்யே, என் நெஞ்சை என்றைக்கும் - நான் உமக்கே கொடுப்பேன்.

சு. நீர் ஜீவன், என்னை நீர், நீரே - தரும் பலம் ஏவட் டும். - திடனில்லா அந்நேரமே - என் நெஞ்சை நீர் திடத் தும். - அப்போது வாழ்ந்து தேறுமே. - இத்தேவ ஜீவன் என்னிலே - மென்மேல் பலங்கொள்ளட்டும்.

எ. நீர் வானத்தப்பம், பஞ்சத்தில் - பசி உம்மாலே ஆறும். - நான் போம் வனாந்தரங்களில் - என் மனதும்மை நாடும். - பிதாவின் ஈவாம் மன்னாவே, - நீர் என்னை வேறே இச்சைக்கே - விலக்கமாகக் காரும்.

அ. நீர் ஜீவஊற்று, உம்மிலே - குடித்தால் தாகந்தீரும். - நீர் தாற ஈவு நித்தமே - சுரக்கிற தண்ணீரும். - ஆ, என்னை ரப்பிக்கட்டாட்சித்து - இரும், அத்தால் உண்டாவது - ஆரோக்கியம் நற்சீரும்.

கூ. நீர் என்னைச் சோடிக்கும் உடை, - நீர் என் அலங் காிப்பு. - நான் உம்முடைய நீதியை - அணிவதென் இச் சிப்பு. - பூலோகத்தின் சிங்காரமாம் - விநோத சம்பிரமம் எல்லாம் - கனமில்லாத்தரிப்பு.

௰. நீர் நான் சுகித்துத் தங்கிற - அரண்மனையும் வீடும்; - புசல் அடித்தும் விருதா, - பேய் வீணாய் என்னைச் சீறும். - நான் உம்மில் நிற்பேன், ஆகையால் - கெடேன்; பொல் லார் எழும்பினால் - நீர் என் வழக்கைத் தீரும்.

௰க. என் மேய்ப்பராயிருக்கிறீர், - என் மேய்ச்சலும் நீர்தாமே. - காணமல் போன என்னை நீர் - மா அன்பாய்

மீட்டோராமே. - இனி இவ்வாட்டை என்றைக்கும் - நீர் சிதற ஒட்டாதேயும். - நான் உம்முடையோனுமே.

௰௨. நீர் என்றைக்கும் நான் வாஞ்சையாய் - பணிந்து கொள்ளும் பத்தா; - நீர் என் ஆசாரியருமாய் - பலிபோல் மாண்ட கர்த்தா. - நீர் என்னை ஆளும் ராசாவும், - உம் மாலே எந்தப்போரிலும் - செயிப்பேன், மா சமர்த்தா.

௰௩. நீர் உத்தம சிநேகிதர், - என் நெஞ்சம்மண்டை சாயும்; - நீர் உண்மையாஞ் சகோதரர், - நீர் என்னைப் பார்க்குந் தாயும். - நீர் நோயில் பரிகாரியே, - உம்மாலே ஆறிப்போகுதே, - என் காயமும் விடாயும்.

௰௪. படையில் நீர் சேனாபதி, - வில் கேடயஞ் சீராவும், - கருங் கடலில் நீர் வழி - காண்பிக்குஞ் சமுக்காவும், - எழும்புங் கொந்தளிப்பிலே - நீர் என் நங்கூரம், இயேசுவே, - நான் உட்படுங் குடாவும்.

௰௫. நீர் ராவில் என நட்சத்திரம், - இருளில் என் தீவட்டி, - குறைவில் என் ஐசுவரியம், - என் தாழ்வில் என் உயர்த்தி, - கசப்பிலே என் மதுரம், - நான் தொய்ந்தால் மீண்டும் என் மனம் - பலக்க நீர் என் சத்தி.

௰௬. நீர் சீவனின் விருட்சமும், - நீர் செல்வங்கள் பொழியும் - பூங்காவனமும், என்றைக்கும் - சுகந் தருங் கனியும். - முள்ளுள்ள பள்ளத்தாக்கிலே - என் ஆவிக்கு நீர், இயேசுவே, - குளிர்ந்த பூஞ்செடியும்.

௰௭. நீர் துக்கத்தில் என் ஆறுதல், - நீர் வாழ்வில் என் களிப்பு, - நீர் வேலையில் என் அலுவல், - பகலில் என் சிந்திப்பு, - நீர் ராவில் என் அடைக்கலம், - நீர் தூக்கத்தில் என் சொப்பனம், - விழிப்பில் என் குறிப்பு.

௰௮. ஆ, ஒப்பில்லாத அழகே, - நான் எத்தனை சொன்னாலும் - என் நாவினால் முடியாதே. - நான் என்ன வாஞ்சித்தாலும் - அதெல்லாம் நீரே, இயேசுவே; - ஆ, தயவுள்ள நேசரே, - நீர் என்றும் என்னை ஆளும்.

*J. Ch. Lange*, † 1756.

## ௩௪. Wer ist wohl wie du. (34.)



இயேசு கிறிஸ்துவே, – உலகத்திலே – கெட்டுப்போன வருக்கான – ஒளிவும் உயிருமான – ரட்சகர் நீரே, – இயேசு கிறிஸ்துவே.

உ. என்னை மீட்க நீர் – சீவனை விட்டீர். – குற்றத்தை எல்லாம் அடக்க, – தீங்கை எனக்கு விலக்க, – எனக்காக நீர் – சீவனை விட்டீர்.

௩. எங்கள் மீட்புக்கு – லோகத் தோற்றத்து – நாளின் முன்னே வார்த்தைதந்தீர்; – காலமாகையில் பிறந்தீர், – பாவிகளுக்கு – மீட்புண்டாச்சுது.

௪. வெற்றி வேந்தரே, – பாவஞ் சாபம் பேய் – நரகத்தையுஞ் செயித்தீர். – நாங்கள் வாழ நீர் மரித்தீர். – உம்மால் துஷ்டப் பேய் – வெல்லப்பட்டதே.

௫. மா இராசாவே, – பணிவுடனே – தேவரீருக்குக் கீழ்ப்பட்டு, – உமது மொழியைக் கற்று, – அதை நெஞ்சிலே – வைப்பேன், இயேசுவே.

௬. தேவ ஆவியால் – தெளிவாங் கண்ணால் – உம்மை நோக்கி, உம்முடைய – நேசத்தாலே நான் நிறைய – வேண்டும், ஏனென்றால் – நான் நீர் கொண்ட ஆள்.

௭. என்னை முழுதும் – உமக்குள்ளிழும். – நேசத்தால் நான் வாஞ்சையாக – உம்மோடொட்டிக்கொள்வேனாக, – என்னை முழுதும் உமக்குள்ளிழும்.

௮. உம்மால் சாந்தமும் – மனத்தாழ்மையும் – என்னிலே உண்டாவதாக, – கோபமும் இடும்புஞ்சாக – உம்மை என்றைக்கும் – நான் பின்பற்றவும்.

௯. லோக வாழ்வுக்கு – சாயும் எனது – மனதை நீர் சீர்திருத்தும். – நீர் என் வாழ்வும் நீர் என் முத்தும். – லோகங் கேட்டுக்கு – நேராய்ப்போகுது.

௰. சாத்தானனது – வைக்குங் கண்ணிக்கு – தப்பி, மோட்சத்துக்குப்போற – பாதையில் ஓயாமல் ஓட – கண்ணின் தெளிவு – தேவையானது.

௰௪. நான் விழிக்கவும், - நித்தம் நித்தமும் - கெஞ்சவும், நீரே அன்பாலே - உமது நல்லாவியாலே - என்னை நித்தமும் - ஏவியருளும்.

௰௫. கொந்தளிப்பிலே - காரும், கர்த்தரே. - படவை அலைகள் மோதி - மூடும்போது, புறச்சோதி - காணக் கையையே - நீட்டும், கர்த்தரே.

௰௬. ஆஸ்தி சீவனும் - சகலத்தையும் - உமக்காக நான் வெறுக்க - தைரியம் உண்டாயிருக்க, - என்னை மிகவும் - நீர் திடத்தவும்.

௰௭. சாகும் வேளையில் - நீரே அண்டையில் - நின்று, என்னை நீர் இருக்கும் - வாழ்வுக்குஞ் சந்தோஷத்துக்கும் - கொண்டுபோய், அங்கே - தேற்றும், இயேசுவே.

*J. A. Freylinghausen*, † 1739.



# கிறிஸ்துவின் மகிமை விளங்கின பண்டிகையின் பாட்டுகள்.

௯௬. Ein Kind geborn zu Bethlehem. (36.)



ராசா பிறப்பூர் பெத்லகேம், - பெத்லகேம், - மகிழ்ந்து கொள், எருசலேம். - அல்லே அல்லேலூயா.

உ. அவர் படுக்கை முன்னணை, - முன்னணை, - செங் கோலோ தேவவல்லமை. - அல்லே அல்லேலூயா.

௩. இச்செனனம் மா அற்புதம், - அற்புதம், - வானோருக்கும் அதிசயம். - அல்லே அல்லேலூயா.

௪. வணங்க வந்து கண்டோர் ஆர், - கண்டோர் ஆர், - ஊர் மேய்ப்பர், தூர சாஸ்திரிமார். - அல்லே அல்லேலூயா.

௫. பொன் தூபம் போளம் இவர்கள், - இவர்கள், - பணிந்து வைத்த ஈவுகள். - அல்லே அல்லேலூயா.

௬. இப்பிள்ளை கன்னி புத்திரர், - புத்திரர், - மகா கர்த்தாவுமானவர். - அல்லே அல்லேலூயா.

எ. புவியில் இவர் ஒருத்தர், – ஒருத்தர். – விலகிநீண் டாத மனிதர். – அல்லே அல்லேலூயா.

அ. நாம் அவர் ஏக மாமிசம், – மாமிசம்., – ஆனாலும் அவர் நற்குணம். – அல்லே அல்லேலூயா.

கூ. தாம் கேட்டை நீக்கி, நமக்கு – நமக்கு – குணந் தர இதாச்சுது. – அல்லே அல்லேலூயா.

ம. ஆர் இதை நன்றாய்ப் பாடுவர், – பாடுவர்; – திரியேக சுவாமிக்குப் புகழ். – அல்லே அல்லேலூயா.

*Petrus Dresdensis*, † 1440.

நஎ. Lobet den Herrn, ihr Heiden all. (37.)



கர்த்தாவைப் போற்றுங்கள், எல்லா – உலகின் சாதி யாரே; – கர்த்தாவைப் பாடுங்கள், மகா – திரள் பூலோ கத்தாரே; – இதோ, பிரியமைந்தனை – தந்திவராலே உங் களை – அன்பாய்ச் சந்தித்து வாருர்.

உ. அதேனென்றால் அவருட – இரக்கமுந் தயையும – திவ்விய உண்மையும் மகா – உயர்ந்த கிருபையும் – அடியார் மேலே மிகவும் – பெரியதாகி, என்றைக்கும் – நிலைக்கும். அல்லேலூயா.



## கிறிஸ்துவினுடைய பாடுகள் மரணத்தின் பேரில் பாடுகிற பாட்டுகள்.

சக. O Welt, sieh hier dein Leben. (41.)



இதோ, மரத்தில் சாக – உன் சீவன் உனக்காக – பலி யாம், லோகமே. – பொல்லாப்படிமிகையை – சகிக்கும் மா துரையை – கண்ணோக்குங்கள், நராட்களே.

உ. இதோ, மா துருசோடும் – வடியும் ரத்தம் ஓடும் – எல்லா இடத்திலும். – நல்நெஞ்சிலே துடிப்பும் – தவிப் பின்மேல் தவிப்பும் – வியாகுலத்தால் பெருகும்.

ங. ஆர் உம்மை, பட்சமான – கர்த்தா, இத்தன்மை யான – வதைப்பாய் வாதித்தான். – நீர் பாவியாயிரீரே, – பொல்லாப்பை அறியீரே; – ஆர் இந்தக்கேடுண்டாக்கினன்.

ச. ஆ, இதைச் செய்தோன் நானும் – என் அக்கிர மங்கள்தானும்; – கடற்கரைமணல் – அத்தன்மையாய்க் குவிந்த – என் பாதகங்கள் இந்த – வதைப்புக்காதிமூலங் கள்.

ரு. நானே கை கால் கட்டுண்டு, – பாதாளத்தில் தள் ளுண்டு – கிடக்க ஞாயமே; – நானே முடிவில்லாமல் – சந்தோஷத்தைக் காணமல் – வதைக்கப்பட நீதியே.

சு. ஆனல் என்மேல் உண்டான – அழுந்த பாரமான – சுமை சுமந்தோர் நீர். – ஆசீர்வதிக்க நீரே – போய்ச் சாபமாகிறீரே; – நான் தப்ப நீர் படுகிறீர்.

எ. நீர் என் கடனைத் தீர்க்க – பிணையாய் என்னை மீட்க – மரத்தில் ஏறினீர்; – ஆ, சாந்தமான சிந்தை, – நீர் முள் முடியின் நிந்தை – எத்தீங்கையும் பொறுக்கிறீர்.

அ. நான் சாவின் வாய்க்குத் தப்ப – நீரே அதை நிரப்ப – அதில் விழுகிறீர்; – நான் நீங்க நீர் முன்னிற்பீர், – நான் வாழ நீர் மரிப்பீர், – அத்தன்மை என்னை நேசித்தீர்.

க. நீர் என்னை மீட்டதாலே – நான் சுவாமி, உமதானே; – என் ஆவி தேகமும் – எந்நாழியும் நிமையும் – நான் மரணம் அடையும் – நாள்மட்டும் உம்மைப் போற்றவும்.

௰. நான் ஏழையாயிருக்க – வதிலுக்குக் கொடுக்க – கூடாதே போகியும், – என் நெஞ்செப்போதுமாக – நீர், சுவாமி, எனக்காக – சகித்ததை நினைக்கவும்.

௰க. அதே நான் என்றென்றைக்கும் – என் கண் முன் பாக வைக்கும் – கண்ணாடியாவது; – அத்தால் விளங்கப் பட்ட – மெய் நேசமும் மாசற்ற – சன்மார்க்கமும் என் யோசிப்பு.

௰உ. என் பாவத்தால் எரியும் - கர்த்தாவின் கோபத் தீயும் - தாம் செய்யும் நீதியும் - தாம் தண்டிக்குங் கண்டிப்பும் - அழிக்கிற அழிப்பும் - ஏதென்றிப்பாடு காண்பிக்கும்.

௰ங. நீர் சாந்தத்தோடும் பட்டு - பொல்லார் மேல் கோபமற்று - எல்லா அநியாயமும் - சகித்ததை நான் நோக்கி, - என் பேய்க்குணத்தைப் போக்கி, - தெய்வீக சாந்தமாகவும்.

௰ச. துன்நாக்குகள் வைதாலும், - என்மேல் மிகை சொன்னாலும், - நான் சாதைப் பூணுவேன். - அநியாயத்தைச் சகித்து, - நல்மனதாய் மன்னித்து, - பகைஞர்மேல் இரங்குவேன்.

௰ரு. கர்த்தாவே, நீர் பகைக்கும் - பொல்லாப்பை என்றென்றைக்கும் - வெறுத்துரோசிப்பேன். - என் இச்சையை நாள்தோறும் - ஆகாத சிந்தையோடும் - நான் சிலுவையில் கடாவுவேன்.

௰சா. ஆ, உமது செபமும் - அவஸ்தையுந் தவமும் - கண்ணீருங் கிலேசமும் - நான் செத்தால் பரலோக - சந்தோஷத்துக்குப் போக - வழித்துணைக்கிருக்கவும்.

*P. Gerhardt*, † 1676.

## சஉ. O Haupt voll Blut und Wunden. (42.)



இரத்தங் காயங் குத்தும் - நிறைந்து, நிந்தைக்கே - முள்ளின் கிரீடத்தாலே சுற்றும் - சூடுண்ட சிரசே, - முன் கனமேன்மைகொண்ட - நீ லச்சை காணபானேன்; - ஐயோ, வதைந்து நொந்த - உன்முன் பணிகிறேன்.

உ. பூலோகமும் பணியும் - முகத்தின் மேனியே, - ஏன் உன்னைத்தான் உமியும் - தீழ்ப்பாச்சுதந்தமே. - ஐயோ, நீ வேறுபட்டாய், - பரவெளிச்சமாம் - கண்சோதி மாஇக்கட்டாய் - இருண்டு மங்கலாம்.

௩. அன்புள்ள நன்ன ரூபும் – உதட்டு வர்ணமும் – வெட்டுண்ட புல்லும் பூவும் – படும்போல் உலரும். – மா கீர்த்தரே, நீர்தானே – மடிய வேணுமோ, – அழிக்கப்பட நானே – நேரஸ்தன் அல்லவோ.

௪. நீர் பட்ட வாதை யாவும் – என் பாவப்பாரமே, – இத்திங்கும் நோவுஞ் சாவும் – என் குற்றம், கர்த்தரே. – இதோ, நான் என்றுஞ் சாக – நிதானம் என்கிறேன்; – ஆனால் என்மேல் அன்பாக – கண்பார்வையாகுமேன்.

௫. நீர் என்னை உமதாடாய் – அறியும், மேய்ப்பரே. – முன் சீவன் ஊற்றாம் ஆறாய் – என் தாகந் தீர்த்திரே. – நீர் என்னைப் போதிவிக்க – அமிர்தமுண்டேனே, – நீர் தேற்றரவளிக்க – பேரின்பமாச்சுதே.

௬. உம்மண்டை இங்கே நிற்பேன், – என்மேல் இரங்குமேன். – விண்ணப்பத்தில் தரிப்பேன், – என் கர்த்தரை விடேன். – இதோ, நான் உம்மைப்பற்றி – கண்ணீர்விட்டண்டினேன்; – மரிக்கும் உம்மைக் கட்டி – அணைத்துக் கொள்ளுவேன்.

௭. என் ஏழை மனதுக்கு – நீர் பாடுபட்டதே – மா சந்தோஷத்துக்கு – பலிக்கும், மீட்பரே. – என் சீவனே, நான் கூடி – இச்சிலுவையிலே – உம்மோடென் கண்ணை மூடி – மரித்தால் வாசியே.

௮. நான் உம்மைத் தாழ்மையாக – வணங்கி, நித்தமே – நீர் பட்ட கஸ்திக்காக – துதிப்பேன், இயேசுவே. – நான் உம்மில் ஊன்றி நிற்க – சகாயமாயிரும்; – நான் உம்மிலே மரிக்க – நீர் கட்டளையிடும்.

௯. நான் மாளுங் காலம் வந்தால் – பிரிந்திராதேயும், – நான் தொய்ந்துபோய்க் கிடந்தால் – தரிசனை கொடும். – என் மனக் கிலேசம் மெத்த – பாடாம் எந்நேரமும் – நீர் சிந்தின இரத்த – பலத்தால் ரட்சியும்.

௰. என் மூச்சொடுங்கும் அந்த – கடை இக்கட்டிலும் – நீர் எனக்காய் இறந்த – ரூபாகக் காண்பியும். – அப்போ நான் உம்மைப் பார்த்து – கண்ணோக்கி, நெஞ்சிலே – அணைத்துக்கொண்டு காத்து – தூங்கட்டும், இயேசுவே.

*P. Gerhardt*, † 1676.

## ௪௩. Ach, wir armen Sünder. (43.)



எத்தனை நிர்ப்பந்த – பாவ சாதி நாம, – பாவத்தாலே வந்த – கேடு மிச்சமாம். – நம்மை என்றுங் கொல்லும் – மரணம் அல்லோ – தேவ வாக்குச் சொல்லும் – ஆக்கினை, ஐயோ. – சுவாமி, இரங்கும், – கிறிஸ்தே, இரங்கும், – சுவாமி, இரங்கும்.

உ. பாவத்தால் பலத்த – சாவை நீக்க நாம் – என்றுஞ் சத்தியற்ற – ஏழைக் கூட்டமாம். – தப்பி நீங்கலாக – தேவமைந்தன் தாம – தாழ்ந்து நமக்காக – சாகத் தேவையாம். – சுவாமி, இரங்கும், மு.

௩. கிறிஸ்து இங்கே வந்து – நல்ல மனதால் – ஏழையாய்ப் பிறந்து – செத்திராவிட்டால், – நாம் எல்லாருமாக – முடிவன்றியே – சாபத்துக்குள்ளாக – போய்க் கிடப்போமே. – சுவாமி, மு.

௪. மோட்ச வாழ்வைத் தேடி – தர வாஞ்சையால் – சிலுவையில் ஏறி – மாண்ட மைந்தனால் – சுத்த தயவான – அன்பாய்ச் சுவாமியார் – இந்த மேன்மையான – மீட்புண்டாக்கினார். – சுவாமி, மு.

ரு. பாவஞ் சாவு சாபம் – என்றதுகளால் – தோன்றும் மனஸ்தாபம் – போச்சுதேனென்றால் – இயேசுநாதராலே – கேடுகளெல்லாந் – தீர்ந்தபடியாலே – ஆறுதலுண்டாம். – சுவாமி, மு.

௬. இந்த அன்புக்காக – நம்மால் சுவாமிக்கு – மகிமையுண்டாக – தாமே தயவு – செய்து, நல்ல மார்க்க – சீரை நமக்கு – உண்டுபண்ணிக் காக்க – நம்முடமனு. – சுவாமி, மு.

*H. Bonnus*, † 1548.

## சச. Wenn meine Sünd mich. (44.)



என் பாவங்களினாலே – உண்டாந் திகிலிலே – நீரே இரக்கத்தாலே, – என் சுவாமி இயேசுவே, – என் பாவப் பாரம் யாவையும் – சுமந்து மாண்ட அன்பு – என் நெஞ்சைத் தேற்றவும்.

உ. இத்தயவை நன்றாக – ஆராய்பவர்கள் ஆர்; – கர்த்தர் அடியார்க்காக – பாடுத்தரிக்கிறார். – மா அற்புதம், பராபரர் – சீர்கெட்ட பாவிக்காக – உயிரைத் தந்தவர்.

ங. என் பாவச் சேனையாலே – இனி பயம் உண்டோ, – கர்த்தாவின் ரத்தத்தாலே – நான் நீதிமான்அல்லோ. – நான் கிறிஸ்துக்குள் ஒதுங்கினேன்; – நான் நரகாக்கினைக்கு – இனிப் பயப்படேன்.

ச. ஆ, உமது மிகுந்த – உபாதி சஞ்சலம் – கண்ணீர் செபஞ் சிந்துண்ட – இரத்தந் துயரம் – அவஸ்தை சர்வுக்காகவும், – கர்த்தாவே, உமக்கென்றும் – துதி புகழ்ச்சியும்.

ரு. நீர் பட்ட மா அகோர – பாடென்னை நித்தமே – துரிச்சையை விட்டோட – ஏவட்டும், இயேசுவே. – மகா உயர் விலையாய் நான் – ரட்சிக்கப்பட்டேனென்று – நன்றாய் நினைக்கத்தான்.

சு. என் சிலுவையை நித்தம் – இகழ்ச்சி யாவையும் – நான் தாங்கி, தேவ சித்தம் – ஆகட்டும் என்கவும் – எல்லாம் வெறுத்து, உம்மையே – பின்பற்றவும் பலத்தை – அளியும், கர்த்தரே.

எ. என்மேல் நீர் வைத்திருக்கும் – அன்பாய் அடுத்தோனை – நான் நேசித்தெவனுக்கும் – தகுஞ் சகாயத்தை – ஆகாத நாட்டம் மாயமும் – இல்லாமல் மனதார – இரங்கிச் செய்யவும்.

அ. செத்தால் உம்மண்டை சென்று, – அனந்த ஆறுதல் – உம்மால் அடைவேனென்று – நீர் பட்ட காயங்கள் – பலமாய் என்னைத் தேற்றவும், – நான் உம்மையே கொம்பாக – பிடித்தேன், ரட்சியும்.

*Justus Gesenius, † 1671.*

## ௪௰. Jesu, meines Lebens Leben. (45.)



என்னுடைய சாவின் சாவே, - என் உயிரின் ஜீவனே, - என்னை மீட்க நீர், கர்த்தாவே, - தேவ கோபத்தீயிலே - பாய்ந்து, மா அவஸ்தையாக - பட்ட கனவாதைக்காக - உமக்காயிரந்தரம், - இயேசுவே, சங்கீர்த்தனம்.

௨. கேட்டின் சங்கிலிகளுக்கு - என்னை நீங்கலாக்கவே, - உம்மைத்தீயோர் துஷ்டத்துக்கு - நீரே, தேவமைந்தனே, - சூறையிட்டு, கள்ளனாக - கட்டப்பட்ட நிந்தைக்காக - உமக்காயிரந்தரம், மு.

௩. நான் சுகிக்க நீர் இக்கட்டு - துன்பம் வாதை நோவிடர், - குட்டறை பொல்லாப்பும்பட்டு - வாரடியும் உண்டவர். - ஆசீர்வாதமே உண்டாக - சாபமானீர் எனக்காக; - உமக்காயிரந்தரம், மு.

௪. ஜீவக்கிரீடம் நான் தரித்து, - வாழவும் உயரவும் - தூஷணமெல்லாஞ் சகித்து, - நிந்தை துப்புதலையும் - ஏற்றுக்கொண்டு எண்ணமற்ற - முள்முடி சூடுண்கப்பட்ட - உமக்காயிரந்தரம், மு.

௫. நான், நான் ஆக்கினைப்படாமலே - பூரிப்பாய் மகிழவே - சுயதேகத்தைப் பாராமல், - வாதிப்பாரின் இச்சைக்கே - அதைவிட்டு, கள்ளர்கிட்ட - தூக்கப்பட்டோராய்த் தவித்த - உமக்காயிரந்தரம், மு.

௬. என் அநியாயத்தைக்கழித்து, - என்னை மீட்டுவிடவே - நோவையாவும் உத்தரித்து, - நல்ல மனதுடனே - ரத்தஞ்சிந்தி, மா நிர்ப்பந்த - சிலுவையிலே இறந்த - உமக்காயிரந்தரம், மு.

௭. உம்முடைய பணிவாலே - என் இடும்பின் ஆக்கினை, - உம்முடைய நிந்தையாலே - என்னுடைய சிறுமை - தீரும்; உம்முடைய சாவு - சாவில் எனக்கான தாவு; - உமக்காயிரந்தரம், மு.

௮. இயேசுவே, நீர் சாந்தமாக - உள்ளேயும் புறம்பேயும் - ஜீவன் போகுமளவாக - பட்டபாடனைத்துக்கும் -

என்னசொல்வேன், எனக்காக – பட்டீரென்று தாழ்மையாக – உம்மை நான வணங்கிறேன், – என்றென்றைக்கும் போற்றுவேன்.

*E. Ch. Homburg*, † 1681.

சுர. Ein Lämmlein geht und trägt die Schuld. (46.)



ஓர் ஆட்டுக்குட்டி யீட்குதல் – உண்டாக்க இங்கேவந்து, – பூலோகத்தாரின் பாவங்களை – எல்லாத்தையுஞ் சுமந்து, – இளைப்பையுந் தவிப்பையும் – அடைந்து, எந்த நோவுக்கும் – உபாதிக்கும் அடிக்கும் – கீழாகி, தூஷணத்தையும் – நீட்பான சாவைக் கூடவும் – சாநாய் அநுபவிக்கும்.

உ. இவ்வாட்டுக்குட்டி என்னுட – இரக்கமுள்ள மீடபர். – சுதனும் இவரே பிதா – குறித்த சாபந் தீர்ப்பார். – என் பிள்ளையே, நான் தண்டிக்க – நேரஸ்தரான சகல – நரரை மீட்பாயாக; – கோபாக்கினை பெரியது, – நீயோ எல்லாஞ் சகித்திரு – என்றார் இரக்கமாக.

ங. ஆம், என் பிதாவே, படுவேன், – நான் நல்லமனதாக – எவ்வாதைக்குங் கீழாகிறேன் – என்றார் உத்தாரமாக. – ஆ, நேசத்தின் அதிசயம், – இத்தன்மையாக உலகம் – நேசிக்கப்பட்டிருக்கும். – சிநேகந் தேவமைந்தனை – பொல்லாதவர்கள் சாபத்தை – சுமப்பதற்கிழுக்கும்.

ச. மரத்தில் ஆணிகளினால் – கடாவப்பட்டுத் தொங்கி, – உள்ளே வியாகுலங்களால் – நிறையப்பட்டுப் பொங்கி, – புறம்பே ரத்த ஊற்றானார். – எத்தால் இக்கேட்டுக்குட் பட்டார், – சிநேகத்தாலே தானே. – ஆ, உமதன்புக்கேற்றதாம் – துதியை ஆர் செலுத்தலாம், – மகா இரக்கவானே.

ரு. இவ்வன்பைச் சீவனுள்ளநாள் - எல்லாம் மறக்க மாட்டேன்; - இத்தால் ஒழிய வேறொன்றால் - இனி என் நெஞ்சை ஆற்றேன். - நீர் என் வெளிச்சம், என் பலம், - நான் மாளும்போதும் என் திடம், - என் கன்மலையும் பங்கும். - ஆ, என் மனமகிழ்ச்சியே. - நான் உமக்குப் பிழைக்கவே - ஒத்தாசை செய்திரங்கும்.

சு. நான் உம்மை ராவும் பகலும், - அன்புள்ள சுவாமி, பாடி, - பலியாய் உமக்கென்னையும் - தினம் படைக்க நாடி, - கருத்தாய் உம்மை நித்தமும் - எல்லா நடக்கையாலேயும் - இஸ்தோத்திரிக்கப் பார்ப்பேன். - எப்போதைக்கும் இப்பாவியை - நீர் மீட்ட உபகாரத்தை - என் ஞாபகத்தில் காப்பேன்.

எ. என் நெஞ்சே, இப்போ நீ விரி, - எப்பொக்கிஷங்களுக்கும் - மேற்பொக்கிஷத்தையேபிடி, - இதொப்பில்லாதிருக்கும். - மண்ணுஸ்தியாம் பொன்வெள்ளியும் - பூலோக உச்சிதங்களும் - எல்லாம் வீணாய் ஒழியும்; - என் மீட்பரான இயேசுவே, - நீர் சிந்தின இரத்தமே - என் பொக்கிஷங் கதியும்.

அ. அதெனக்கெந்தவேளைக்கும் - தகுஞ் சகாயங் காட்டும். - பசியிலே செயந்தரும், - சலிப்பில் துக்கமாற்றும். - அத்தாலே மெய்ச்சந்தோஷமும் - குறைகாணாத் திருப்தியும் - என் ஆவிக்குக் கிடைக்கும். - அத்தால் என் தாகந்தீருது, - அதென் கடனை நீக்கிற்று, - என் குற்றத்தைக் குலைக்கும்.

கூ. வியாகுலத்தின் பாரத்தில் - அதென்னை ஆதரிக்கும், - உபத்திரத்தின் வெய்யிலில் - குளிர்த்தியை அளிக்கும். - பகைஞர் தங்கள் மூர்க்கத்தால் - விரோதமாகப் பேசினால் - அதெனக்காய்ப் பரியும். - சாவென்னைக் கொல்ல அணுகில் - அத்தாலே என் அவஸ்தையில் - பயமெல்லாந் தெளியும்.

ய. அப்போது இந்த ரத்தமே - அடியேன் பரலோக - கதியாம் பரதீசிலே - மகிழ்ச்சியோடேபோக - பிரவேசம் உண்டுபண்ணுமே. - அத்தால் ஓர் மாசுமன்றியே - பிதாவின்முன்னே நிற்பேன். - அத்தால் பொற்கிரீடம் பெற்றோனாய் - திரியேகரைச் சந்தோஷமாய் - எப்போதுந் தோத்திரிப்பேன்.

*P. Gerhardt, † 1676.*

சஅ. Meine Seel, ermuntre dich. (48.)



என் இதயமே, விழி, – இயேசு தம்மை உனக்காக – தாற அன்பைக் கவனி, – அதையே தியானமாக – பார்; இதோ, எக்கேடுந் தீங்கும் – அவர் மீட்பினாலே நீங்கும்.

உ. முள்முடி சூடுண்டிதோ, – சிலுவையில் கடாவப் பட்டார்; – தேவமைந்தன்தான் அல்லோ – காயப்பட்டு எண் ணமற்றார். – அவர் உன்னை மீட்கச்சாகும் – நேசம் ஒப் பில்லாததாகும்.

ங. கெட்ட பாவியாகிய – நீதான் குற்றவாளியாமே, – என்றும் வாதிக்கப்பட – நீ அல்லோ நேரஸ்தனாமே. – ஆனால் இயேசு உன்னை மீட்டார், – உன் கடனை அவர் தீர்த் தார்.

ச. அவர் பாடுபட்டதால் – தேவகோபம் ஆற்றப்பட்டு, – நீதி தீர்ந்ததாகையால் – பேயின் அடிமைத்தனத்து – லச் சையை அவர் முறித்தார், – சீவனை உனக்களித்தார்.

ரு. மனதே, இப்போதும் நீ – என்ன செய்ய ஏற்றிருக் கும், – பட்ட அவருக்கு நீ – அந்த எல்லா நேசத்துக்கும் – என்னத்தைச் செலுத்தவாரய், – அவருக்கு என்னதாரய்.

சா. ஆ, நான் ஒரு காலமும் – அவர் என் ரட்சிப்புக் காக – பட்ட நோவனைத்துக்கும் – ஏதையாகிலும் ஈடாக – செய்ய என்னாலாவதில்லை; – நான் ஆதாமின் கெட்ட பிள்ளை.

எ. ஆனால் பாவத்தை எல்லாம் – நான்இனி அருவருப் பேன், – இயேசுவுக்குத் துக்கமாம் – சகலத்தையும் வெறுப்பேன்; – அவர் பேரில் பத்தியாக – நல் வழியில் போவேனாக.

அ. பாவமே, துன் மார்க்கமே, – என்னை விட்டுப்போ, – உன்னாலே – யாவுங் கெட்டுப் போகுதே. – உனது மயக் கத்தாலே – ஆவி என்னில் செத்ததாகும், – எந்தத் தீமை யும் உண்டாகும்.

௯. இயேசுவே, நான் உமக்கே – முழுதும் ஆதீனமாவேன்; – உம்மைப்பற்றி, உம்மையே – நான் பின்செல்லுஞ் சிஷனாவேன், – உம்மில் என்றும் நிலை நிற்பேன், – உம்மில் சாவிலுந்தரிப்பேன்.

௰. எனக்கும்மைத் தந்தீரே, – உமக்கென்னை நானுந் தாறேன். – உம்மைப் பற்றி உமக்கே – ஏற்றதை நான் செய்துவாறேன்; – ஏற்றிராததைப் பகைப்பேன், – இயேசுவே, உம்மில் நிலைப்பேன்.

௰௪. உமது நடத்தைக்கும் – சொல்லுக்குங் கீழ்ப்பட்டிருப்பேன். – நான் என் சிலுவையையும் – நல்லமனதாய் எடுப்பேன். – எனக்குமதாவிதாமே – மோட்சத்தின் அச்சாரமாமே.

௰உ. நீர், நீரே என் பொக்கிஷம், – உமமை எனறும் விடமாட்டேன்; – உமதைக்கமே நலம், – வேறென்றாலும் என்னை ஆற்றேன். – நான் நீர் மீட்ட ஏழைப்பிள்ளை; – ஆ, நீர் என்னைத்தள்வதில்லை.

௰௩. விசுவாசத்தாலே நான் – உம்மைப் பற்றிகமக்ாண்டதாலே – எனக்கு இம்மையில்தான் – பூரிப்புண்டு, ஆகையாலே – மறுமையல என்றென்றைக்கும் – வெகுவத்தனை கிடைக்கும்.

௰௪. போரின் பின்பு எத்தனை – பாக்கியங்கள் என்றென்றைக்கும் – அங்குண்டாகும், எத்தனை – செல்வங்கள் அப்போ கிடைக்கும். – என்றும் அங்கே நான களிப்பேன், – என்றுங் கர்த்தரைத் துதிப்பேன்.

௰௫. இயேசுவே, நீர் எனக்கு – தேடின அவ்வாழ்வின் மேலே – மிகவும் என் மனது – வாஞ்சையாம், இம்மானு வேலே, – அதில் நான் பங்காளனாக – நீர் சகாயஞ் செய்வீராக.

**Joh. Kasp. Schade, † 1698.**

## ௪௯. Christe, du Lamm Gottes. (49.)



**பா**வத்தைச் சுமந்த – தேவ ஆட்டுக்குட்டி, – அடியார் மேல் இரங்கும்.

௨. பாவத்தைச் சுமந்த – தேவ ஆட்டுக்குட்டி, – அடியார்மேல் இரங்கும்.

௩. பாவத்தைச் சுமந்த – தேவ ஆட்டுக்குட்டி, – நீர் சமாதானந் தாரும். ஆமேன்.

## ௫௰. Die Seele Christi heil'ge mich. (50.)



**ம**ரிக்குங் கிறிஸ்தின் ஆவியும் – வதைக்கப்பட்ட தேகமும் – என் தேகம் ஆவியாவையும் – நன்றாய்க் குணப்படுத்தவும்.

௨. அவர் விலாவால் மிகவும் – பொழிந்த ரத்தந் தண்ணீரும் – என் ஸ்நானமாகி, எனக்கு – உயிர் தரக் கடவது.

௩. அவர் முகத்தின் வேர்வையும் – கண்ணீர் அவஸ்தை துக்கமும் – அந்நாளின் தீர்ப்பழிப்புக்கும் – இப்பாவியை விலக்கவும்.

௪. ஆ, இயேசு கிறிஸ்தே. உம்மண்டை – ஒதுக்கைத் தேடும் ஏழையை – நீர்பட்ட காயங்களிலே – மறையும், நீர் என் மீட்பரே.

௫. என மரண அவஸ்தையில் – நீர் என்னைத் தேற்றி, மோட்சத்தில் – நான் என்றும் உம்மைத் தொழவே – வரவழையும், கர்த்தரே.

Joh. Scheffler, † 1677.

## ௫௧. O Lamm Gottes, unschuldig. (51.)



மாசற்ற ஆட்டுக்குட்டி, - நீர் சிலுவையில் தொங்கி, - எல்லார் கடன் செலுத்தி, - இரக்கத்தாலே பொங்கி, - பொல்லாப்பைச் சாதால் வென்றீர், - பொல்லாருக்காகச் சென்றீர். - அடியார் மேல் இரங்கும்.

௨. மாசற்ற ஆட்டுக்குட்டி, மு. அடியார் மு.

௩. மாசற்ற ஆட்டுக்குட்டி, மு. நீர் சமாதானந் தாரும்.

*Nic. Decius*, † 1529.

## ௫௩. Jesu, meiner Seelen Licht. (53.)



இயேசுவே, என் சீவனே, - என் கதியுமான - நித்திய வெளிச்சமே, - நீசப்பாவியான - நான் நீர் பட்டவாதையை - நோக்கிக்கொண்டு சொல்லும் - ஏழைத் தோத்திரங்களை - அன்பாய் ஏற்றுக்கொள்ளும்.

௨. ஆ, நீர்தானே மெத்தவும் - பாடும் நோவுமான - வேதனை அனைத்தையும் - வெகு நிந்தையான - சாவையும் அடைந்தது - என்ன, ஏதுதானே - அதுக்கும்மை ஏவிற்று, - பரிசுத்தவானே.

௩. ஆ, தன் மனச்சாட்சியில் - குற்றவாளியாக - தீர்க்கப்பட்டோன் உள்ளத்தில் - ஆறுதலுண்டாக, - நீரே தேவ அன்பினால் - மீட்பராக வந்தீர், - எனக்காய் இரக்கத்தால் - சீவனையுந் தந்தீர்.

ச. இது யாவர் புத்திக்கும் – ஆச்சரியமான – தயவும் இரக்கமும். – நாங்கள் செய்ததான – பாவங்கள் கணக்குக்கு – மிகவும் விஸ்தாரம், – ஆனால் அது உமது – மேல் சுமந்த பாரம்.

ரு. என் பொல்லாத இச்சையால் – உம்முடமேல் தீது – வந்தது, என் பாவத்தால் – தேவரீரின் மீது – கனவாதைகளையே – உண்டுபண்ணுவித்தேன், – உம்மைச் சிலுவையிலே – அதினால் அடித்தேன்.

சா. எங்கள் ஆக்கினைகளை – நீர் சுமந்ததாலே – ஆண்டவரின் கிருபை – எங்களுக்கும்மாலே – தேடிவைக்கப்பட்டது. – நித்தநித்தமாக – இதுக்காக உமக்கு – தோத்திரமுண்டாக.

எ. இப்போதும் என் மனதின் – பயத்தை அகற்றும், – தத்தளிக்கும் ஆவியின் – ஆகுலம் நீங்கட்டும். – நோவைப்பட்ட இயேசுவே, – திகிலால் கலங்கும் – ஆத்துமத்தின் பேரிலே – தேவரீர் இரங்கும்.

அ. தேவ அன்பின் ஆறுதல் – எனக்கு நேராக – வந்ததால் என் துக்கங்கள் – மாறும்படியாக – நீர் இரங்கியாவையும் – எனக்கு மன்னியும்; – தேற்றரவும் பூரிப்பும் – அதினால் அளியும்.

கூ. இப்போதும் என் நம்பிக்கை, – இயேசுவே, நீர் தாமே, – நீர் துக்கித்தபாவியை – தேற்றுபவராமே; – ஆகையால் என்னில் பயம் – பேயினாலே வந்தும், – எனதாவி உம்மிடம் – சேர்ந்து, உம்மை அண்டும்.

ம. நீர், அன்புள்ள இயேசுவே, – ஏறுகடைசியில் – என்னை உம்மிடத்திலே – பரமகதியில் – சேர்த்துக்கொள்ளும்மட்டுகும் – உம்மை நான் நன்றாக – பற்றவும் பின் செல்லவும் – ஈவளிப்பீராக.

*H. Held,* † *um* 1643.

## ௫௪. Jesu, deine heil’gen Wunden. (54.)



இயேசு, உமதைந்துகாயம் - நோவுஞ் சாவும் எனக்கு - எந்தப் போரிலுஞ் சகாயம் - ஆறுதலுமாவது. - உம்முடைய வாதையின் - நினைவு என் மனதின் - இச்சை மாளுவதற்காக - என்னிலே தரிப்பதாக.

௨. தனக்கின்பமான வாழ்வை - மாமிசம் இச்சிக்கச்சே - எனக்கும்முடைய தாழ்வை - நினைப்பூட்டும், இயேசுவே. - சாத்தான் என்னைச் சுற்றுகில் - உம்முடைய கைகளில் - உள்ள அச்சை நான் நம்பட்டும், - இயேசுவே, அதைத் துரத்தும்.

௩. லோகந் தன் சந்தோஷமான - நரகவழியிலே - என்னைக் கூட்டிக் கொள்வதான - மோசத்தில் நான், இயேசுவே, - உமது வியாகுல - பாரத்தைத் தியானிக்க - என் இதயத்தை அசையும், - அப்போ மோசங்கள் கலையும்.

௪. எந்தச் சமயத்திலேயும் - உம்முடைய காயங்கள் - எனக்கனுகூலஞ் செய்யும் - என்பதே என் ஆறுதல்; - ஏனெனில் நீர் எனக்கு - பதிலாய் மரித்தது - என்னை எந்த அவதிக்கும் - நீங்கலாக்கி விடுவிக்கும்.

௫. நீர் மரித்தீர், ஆகையாலே - சாவை ருசி பாரேனே, - இதை முழு மனதாலே - நான் நம்பட்டும், இயேசுவே. - உமது அவஸ்தையும் - சாவின் வேதனைகளும் - நான் பிழைக்கிறதற்காக - எனக்குப் பலிப்பதாக.

௬. இயேசு, உமதைந்துகாயம் - நோவுஞ் சாவும் எனக்கு - எந்தப்போரிலுஞ் சகாயம் - ஆறுதலுமாவது. - முடிவில் விசேஷமாய் - என்னை மீட்ட மீட்பராய் - என்னை ஆதரித்தன்பாக - அங்கே சேர்த்துக்கொள்வீராக.

## ருரு. Christus, der uns selig macht. (55.)



ராத்திரியில் கிறிஸ்துவின் - ஆத்தும இக்கட்டு - தோட்டத்தில் முடிந்தபின் - அவர் கட்டபபட்டு, - குற்றம் ஒன்றில்லாமலும் - சாகத் தீர்க்கப்பட்டார்; - வெகு நிந்தையாலேயும் - மெத்த எண்ணமறறார்.

உ. அதிகாலம் அவரை - குற்றவாளியாக - கொண்டு போய்ப் பிலாத்தண்டை - மிகுதியுமாக - கூப்பிட்டும் புளுகியும் - குரோதங் காண்பித்தார்கள், - போய் எரோதேகிட்டவும் - பிராதுபண்ணினார்கள்.

ங. ஒரு சாமஞ் சென்றபின் - வாரடிகளாலும் - முள்முடியால் சேர்வையின் - பரியாசத்தாலும் - துன்பப்பட்டார்; மெத்தவும் - உத்தரித்து வந்தார்; - பாரச் சிலுவையையும் - அவர்தான் சுமந்தார்.

ச. அதில் கள்ளர் நடுவில் - அவர் கடாவப்பட்டு, - தூஷணிக்கப்படுகில் - அன்பாய்க் குரோதமற்று - ரத்தஞ் சிந்தி, நல் மனு - பாவிகளுக்காக - கேட்டார். பகல் மாறிற்று - அந்தகாரமாக.

ரு. மூன்றும் மணியில் மகா - துக்கச் சத்தமிட்டார்; - யாவும் நிறைவேறின - போதுயிரை விட்டார். - தேவ சந்நிதி திரை - ரண்டு துண்டுமாச்சு. - மண்ணிலும் அந் நாழிகை - மா அசைவுண்டாச்சு.

சு. அந்தி நேரமாகிய - போது ஈட்டியாலே - இயேசுவினுட விலா - குத்தப்பட்டதாலே - நம்முடைய நன்மைக்கு - ரத்தமுந் தண்ணீரும் - பாய்ந்ததத்தால் நமது - பாவக் குஷ்டந் தீரும்.

எ. யோசேப் சாயுங் காலத்தில் - கூச்சத்தை விலக்கி, - போய் எல்லாரும் பார்க்கையில் - இயேசுவை இறக்கி, - வெகு பத்தியுடனே - கல்லறையில் வைத்தான்; - கல்லை வாசல்பேரிலே - போட்டதை அடைத்தான்.

௮. ஏன் மரித்தீர் என்பதை - யோசிப்பாய் நினைத்து, உ பாவத் துர்க்குணங்களை - யாவையும் பகைத்து, - உம்மைத் தேவமைந்தனே, - நித்த நித்தமாக - போற்றிப் பற்றிக்கொள்ளவே - ஈவளிப்பீராக.

*Böhmische Brüder.*



## கிறிஸ்து அடக்கம்பண்ணப்பட்டதின் பேரிலே பாடுகிறபாட்டு.

௫௬. O Traurigkeit, o Herzeleid. (56.)



என் மனது - துடிக்குது - குலை பதைத்து நோகும். - தேவமைந்தனின் சவம் - கல்லறைக்குப் போகும்.

௨. ஆ, அவரே - மரத்திலே - அறையப்பட்டிறந்தார். - கர்த்தர்தாமே பாவியின் - சாபத்தைச் சுமந்தார்.

௩. என் பாவத்தால் - என் தீங்கினால் - இக்கேடுண்டாயிருக்கும், - ஆகையால் என்னுள்ளத்தில் - தத்தளிப்பெடுக்கும்.

௪. ஏன் ஆண்டவர், - என் ரட்சகர் - வதைந்த மேனியாக - ரத்தமாய்க் கிடக்கிறார் - என் ரட்சிப்புக்காக.

௫. வெட்டுண்டோரே, - ஆ, உம்மையே - பணிந்தென் ஆவி பேணும், - ஆனால் என் நிமித்தியம் - நான் புலம்ப வேணும்.

௬. குற்றமில்லா - கர்த்தாவுடை - அனலாம் ரத்தம் ஊறும், - மனஸ்தாபமன்றி ஆர் - அதைப் பார்க்கக் கூடும்.

௭. ஆ, இயேசுவே, - என் ஜீவனே, - நீர் கல்லறைக்குள்ளாக - வைக்கப்பட்டதைத்தினம் - நான் சிந்திப்பேனாக.

௮. நான் மிகவும் - எந்நேரமும் - என் மரணநாள்மட்டும், - என் கதியாம் இயேசுவே, - உம்மை வாஞ்சிக்கட்டும்.

*Joh. Rist, † 1667.*



# கிறிஸ்து உயிரோடெழுந்த பண்டிகையின் பாட்டுகள்.

## ருஅ. Heut triumphiret Gottes Sohn. (58.)



இந்நாளில் இயேசு சுவாமியார் - பிரஸ்தாபமாய்க் கெலிக்கிறார். - அல்லேலூயா, அல்லேலூயா. - எழுந்த அவர் என்றைக்கும் - இஸ்தோத்திரிக்கப்படவும். - அல்லேலூயா, அல்லேலூயா.

உ. பிசாசின் சத்தியை அவர் - முறித்துப்போட்ட பராக்கிரமர். - அல்லே. அல்லே. - அனைவரும் அதற்குண்டாம் - கொரேக் கைக்கு நீங்கலாம். - அல்லே. அல்லே.

ந. ஆ, பாவிகளின் மீட்பரே, - செயித்த இயேசுகிறிஸ்துவே, - அல்லே. அல்லே. - பிசாசின் கீழே நாங்களும் - இராப்படிக்கிரட்சியும். - அல்லே. அல்லே.

ச. புவி இக்கட்டால் ரம்புது, - நீரோ அடியார் பூரிப்பு. - அல்லே. அல்லே. - நீர் மோட்சத்துக்கு வாசலே, - அங்கே அழையும், இயேசுவே. - அல்லே. அல்லே.

ரு. பகைஞர் யாவரும் இப்போ - முறுமுறுத்தும் அச்சமோ. - அல்லே. அல்லே. - பொல்லாத சத்துருவுக்கு - கேடான தோர்வை வந்தது. - அல்லே. அல்லே.

சா. அதின் அகந்தைக்கு எல்லாம் - அனந்த வெட்கங்களுண்டாம். - அல்லே. அல்லே. - ஆனால் சேர்பட்டமனிதர் - கர்த்தாவுடைய புத்திரர். - அல்லே. அல்லே.

எ. இத்தால் சந்தோஷமாகிறோம், - இத்தயவைப் புகழுவோம். - அல்லே. அல்லே. - திரியேகரே, எப்போதும் நீர் - துதிக்கப்படக்கடவீர். - அல்லே. அல்லேலூயா.

*Barthol. Gesius*, † 1601.

## ருகூ. Erschienen ist der herrlich Tag. (59.)



இந்நாளே கிறிஸ்து வெற்றியை - சிறந்தெல்லாப்பகைஞரை - சிறைபிடித்துக் கொண்டுபோம் - செய நாளென்று பாடுவோம். - அல்லேலூயா.

உ. பேய் பாவஞ் சாவு நரகம் - எக்கேடும் இன்றையத்தினம் - எழுந்த கிறிஸ்தின் காலுக்கு - கீழாய் விழுந்து கெட்டது. - அல்லேலூயா.

ஙு. இஸ்திரீகள் ஞாயிற்றுக்கிழமை - விடியற்காலங் கர்த்தரை - கெபியில் பார்க்க வரச்சே - முன்தான் எழுந்திருந்தாரே. - அல்லேலூயா.

ச. கெபியைத் தூதன் காண்பித்து, - இங்கில்லை, வெற்றியாச்சுது, - உயிர்த்தெழுந்தாரென்றுதான் - போய் அறிவியுங்கள் என்றான். - அல்லேலூயா.

ரு. இரண்டு சீஷரோடன்றே - வழியில் கர்த்தர் பேசச்சே - பேரின்பம் மூண்டு பிறகு - ஆரென்றறியலாச்சுது. - அல்லேலூயா.

சு. அந்நாளில் சீஷர் கர்த்தரின் - தரிசனையைப்பார்த்தபின் - துக்கித்தவர்கள் நெஞ்சுக்கு - சந்தோஷப் பூரிப்பாச்சுது. - அல்லேலூயா.

எ. இச்சிம்சோன் துஷ்டசிங்கத்தை - செயித்ததின் அரண்களை - தகர்த்துப்போட்ட பராக்கிரமர், - அத்தால் நாம் நீங்கலானவர். - அல்லேலூயா.

அ. மூன்றேநாளாய் மீன் யோனாவை - பிடித்திருந்ததிவரை - அதிகக்காலமாய்க் குழி - அடைத்திருப்பதெப்படி. - அல்லேலூயா.

கூ. சாவால் விழுங்கப்பட்டபின் - அவர் தெய்வீக சீவனின் - பலத்தால் சாவைப் போக்கினார், - செத்தோருக்கும் உயிர்தானார். - அல்லேலூயா.

ய. எகிப்துக்கின்று நீங்கிறோம், - சிறையிருப்பு தீர்ந்துபோம்; - ராப்போசனத்தில் கிறிஸ்துதாம் - நாம் உண்கிற மெய்ப்பஷாவாம். - அல்லேலூயா.

௰௪. புளிப்பில்லாத அப்பமாம் - நல்மார்க்கப் போதகத்தை நாம் - வழங்கிக்கொண்டிருக்கிறோம், - புளித்தமாவைத் தள்ளுவோம். - அல்லேலூயா.

௰௫. சங்காரன் கிறிஸ்து தோழத்தில் - உள்ளோரைத்தொடான்; ஏனெனில் - நாம்தப்ப அவர்ரத்தத்து - விளாசம் நம்மைக் காக்குது. - அல்லேலூயா.

௰௬. ஆகாசம் பூமி பொழுதும் - முன் துக்கமாம் எச்சிஷ்டியும் - இந்நாளில் லோகப்பிரபு - விழுந்ததால் மகிழுது. - அல்லேலூயா.

௰௭. ஆ, எங்கள் ஆறுதலுக்கே - எழுந்த இயேசுகிறிஸ்துவே, - செயித்த உமக்கென்றைக்கும் - இஸ்தோத்திரம் உண்டாகவும். - அல்லேலூயா.

*N. Hermann*, † 1561.

## சாஉ. Lasset uns den Herren preisen. (62.)



கிறிஸ்தவர்களே, நாம் பாடி, - கர்த்தரை அனைவரும் - மிகுதியுமாய்க்கொண்டாடி, - போற்றவுந் துதிக்கவும் - கடவோம். இதோ, செயித்தார், - அவர் பலசாலியாய் - பரமசிம்சோனுமாய் - மரணக்குழியை விட்டார். - ஆர் எதிர்க்கலாம் இனி, - கிறிஸ்தின் சங்கமே, களி.

உ. சிலுவையில் சீவனற்று - மாண்டு, கல்லறையிலே - வைத்தடக்கம்பண்ணப்பட்டு - போனவர் எழுந்தாரே. - மரணத்தைப்பாழ்க்கடித்தார்; - சாத்தான் காவல்பண்ணின - நம்மை மீட்டதினுட - கோட்டையைத் தகர்த்தழித்தார். - அவரே அதிபதி. - கிறிஸ்தின் மு.

௩. கல்லறையில் நீர் இராமல், - தேவமைந்தனை நீர் - செத்தும் அழிவைக் காணமல், - மீண்டும் வந்திருக்கிறீர். - மண் அதிர்ந்தது களிப்பாய், - அழியாதசீவனே, - சாவைக் கொள்ளை

யிட்டீரே. - நீர் நரருக்கு ரட்சிப்பாய் - வென்ற வெற்றி மிகுதி. - கிறிஸ்தின் மு.

௪. சாவே, உனது முள்ளெங்கே; - நரகபாதாளமே, - உனது செயமும் எங்கே; - பேயின் வில்லுடைந்ததே. - கிறிஸ்து சாவுக்கு நஞ்சாமே; - அவர் நரகத்துக்கும் - பெருவாரிக்காய்ச்சலும் - கேடும் வருவித்தோராமே. - அவர்க்கென்றைக்குந் துதி. - கிறிஸ்தின் மு.

௫. நமது அன்புள்ள கர்த்தர் - நம்முடைய வாதையை - நீக்கிறதுக்குச் சமர்த்தர். - எங்கும் அனுகூலத்தை - நாம் காணாத போதுவாமுர். - மூன்று நாளின் பிறகு - அவர் நம்மைக்கடாட்சித்து, - நமக்குச் சந்தோஷந்தாமுர். - எதிரிக்கவர் கெடி. - கிறிஸ்தின் மு.

௬. தேவசந்திக்குக் கடனை - தீர்த்துயிர்த்த பிறகு - அவர் சீவனின் பலனை - சொல்ல ஆரால் ஆகுது. - கோடிக்குத் தலைக்கல்லானார். - ஞானமுள்ள கர்த்தரே, - இது உம்மால் ஆச்சுதே. - பாவிகளின் நீதியானார்; - மோட்சத்துக்கவர் வழி. - கிறிஸ்தின் மு.

௭. தொயயம் மட்டுக்கும் போரிட்ட - பராக்கிரமன் வழியண்டை - ஓடும் ஆற்றிலே குடித்த - பிறகு தன்சிரசை - ஏறெடுக்கும் வண்ணமாக - இயேசுசுவாமி தம்முட - சிரசை எடுத்தெல்லா - சத்துருக்களை நன்றாக - வெட்டின சேனைபதி. - கிறிஸ்தின் மு.

௮. கர்த்தரே. நீர் வெற்றியாக - உயிரோடெழுந்ததால் - நாங்கள் நீதிமான்களாக - நிற்கலாம்; அதேதென்றால் - சமாதானமும் மன்னிப்பும் - கிருபாகடாட்சமும் - சகலவரங்களும் - வாழ்வும் நித்தியரட்சிப்பும் - நீர் எழுந்ததின்கனி. - கிறிஸ்தின் மு.

௯. இயேசுவே, உம்மால் உண்டான - இந்தச்சமாதானத்தின் - பேரில் நித்தம் வாஞ்சையான - என்னுடைய மனதின் - தாகத்தை நீர் தீர்ப்பீராக. - நீர் போராடினதினால் - தேடின பலன்களால் - இப்போதேழையை நன்றாக - ரப்புந் தயவின் படி. - கிறிஸ்தின் மு.

௰. எங்கள்கேட்டைத் துக்கமாக - நாங்கள்பார்த்து உம்மிலே - செத்துயிர்க்கும்படியாக - ஈவளியும், இயேசுவே. - எங்கள்நெஞ்சில் நீர் உதித்து, - பாவஞ் சாபம் நரகம் - தீமைகள் வியாகுலம் - சகலத்தையுஞ் செயித்து, - எங்களிலிரும் இனி. - கிறிஸ்தின் மு.

௰க. சாவு எனக்குச் சாவல்ல, - தேகம் மண்ணுக்குட்பட்டும்; - ஆனால் என்றென்றைக்குமல்ல, - கர்த்தர் அதை மீளவும் -. தாம இனிப் பிரஸ்தாபத்தோடே - வந்து, செத்தவர்களே, - எழும்புங்கள் என்கவே - உயிர்ப்பிப்பவர், அததோடே - என் இக்கட்டெல்லாஞ்சரி. - கிறிஸ்தின் மு.

௰உ. மண்ணுந் தூளுமாய் அழிந்த - என் அவயங்கள் அன்றே - அழியாமைபெற்று, இந்த - லோகச் சக்கரத்திலே - என்றைக்குங் காணுதிருக்கும் - ஒளிவாய் விளங்குமே. - ஆம், என் தேகம், இயேசுவே. - உம்முடைய தேகத்துக்கும் - ஒப்பாம்; உமக்குத்துதி. - கிறிஸ்தின் மு.

*Joh. Rist*, † 1677.

## கூச. Jesus Christus, unser Heiland. (64.)



௧ கிறிஸ்தென்ற பாவநாசனர் - உயிர்தெழுந்தவர், - பலியாய்ச் சென்ருர். - உயிர்த்துச் சாவை வென்ருர். - ஆமேன், அல்லேலூயா.

உ. மாசற்ருேர் தேவ கோபத்தை - சுமந்து, நீசரை - மா சுவாமியோடே - சிநேகமாக்கினுரே. - ஆமேன், அல்லேலூயா.

௩. பேய் சாபஞ் சாவுயிர் அருள் - எல்லாம் அவர்கைக்குள்; - சேர்வார் அவரை - அனுக்கிரகம் அடைவர். - ஆமேன், அல்லேலூயா.

*D. Martin Luther*, † 1546.

சா அ. Christ lag in Todesbanden. (68.)



நாம் செய்த கன பாவத்தால் - கொரே சாவின் கட்டில் - விழுந் த கிறிஸ்து மூன்றும் நாள் - எழுந்து, நம்மிடத்தில் - ஜீவன் உண்டு பண்ணினர். - மகிழ்வாய் அவரை எல்லார் - துதிததிஸ் தோத்தரிப்போம். - அல்லேலூயா.

உ. புவியில் சாவாராலேயும் - விமோசனமாகாது. - ஏன், பாவத்தாலே முழுதும் - நாம் கெட்டோம், சீர்காணுது. - பா வம் நம்மைச் சாவுக்கு - இரையாய் ஒப்புவித்தது; - கிறிஸ்தோ பலத்த மீட்பர். - அல்லேலூயா.

ங. ஒன்றான தேவ புத்திரன் - நரரை மீட்போமென்று - மரித்துயிர்த்து, நம்முடன் - இருந்தசாவை வென்று, - அதின் நியாயந்தீர்த்தாரே. - அதிப்போ வெறும் வேஷமே, - கூர்நம் மைக் கொல்ல எங்கே. - அல்லேலூயா.

ச. உயிருஞ் சாவும் பண்ணின - போர் எங்குங் கண்ட தில்லை. - அநியாயமாய் எய்யுங்கிற - உயிரே சாவின் வில்லை - தேவ வல்லமையினுல் - முறித்துப் போட்டதாகையால் - இனி நாம் சாவுக்கஞ்சோம். - அல்லேலூயா.

ரு. தேவாட்டுக்குட்டியாகிய - மெய்ப்பஷா கிறிஸ்துவா மே. - அதன்பின் தீயால் உயர - மரத்தில் சுட்டதாமே. - அதின் ரத்த முத்திரை - அடைந்த விசுவாசியை - சங்காரன் தொட மாட்டான். - அல்லேலூயா.

சா. மகிழுவோம், இவ்வுன்னத - பஷாவின் நாள் இன்று மே. - உதித்துக் கடாட்சம் ரம்பிய - பகலோன் கர்த்தர் தா மே - ஒளிவுண்டு பண்ணினர், - மனம் பிரகாசிப்பிக்கிறார். - ராக்காலஞ் சென்று போச்சு. - அல்லேலூயா.

எ. புதிய மாவாகாரமாய் - பஷாவை ஆசரிப்போம்; - அரு ளின் வார்த்தைக்காசையாய் - புளித்ததைக் கழிப்போம். - கிறிஸ்து தாமே போசனம் - வேறேதினுலும் ஆத்துமம் - பிழைக்கவே கூடாது. - அல்லேலூயா.

*D. Martin Luther*, † 1546.

## சாக. Nun ist auferstanden. (69.)



தேவமைந்தனை - இயேசு பலமான - வல்லமையினால் - சாபத்தைச் செயித்து, - கல்லறையை விட்டு, - தாம் எழுந்ததால் - நம்முட பயங்கர - சத்துருக்களைச் செயித்தார், - நம்மையோ ரட்சித்தார்.

உ. நாம் அடையப்போற - மிகவும் அகோர - சாபம் நீங்கவும், - நமக்கு ரட்சிப்பும் - நித்திய கெலிப்பும் - தேடுவதற்கும், - அவரே மரத்திலே - கடாவப்பட்டு, அவர்தாமே - கொல்லப்பட்டோராமே.

ங. பாவங்களுக்காக - இந்தவிதமாக - தேவ நீதிக்கு - தாழ்ச்சி ஒன்றுமன்றி - அவர் சரிபண்ணி, - தீர்ந்த பிறகு - அப்புறம் நாம்தான் இன்னம் - தீர்க்கத்தக்க கடனென்ன, - அதில் மீதி என்ன.

ச. கிருபைக்குள்ளான - நம்மைக் கொல்வதான - எதுவுமுண்டோ; - பேய் மிரட்டினாலும் - அதின் சீறல் மாளும்; - ஏனென்றால், இதோ, - திகிலும் நடுக்கமும் - பேய்க்குண்டாக்குங் கிறிஸ்து தாமே - நம்மைச் சேர்ந்தோராமே.

ரு. உனது கெடியும் - அற்றுப்போய் அவியும், - நரகத்தீயே; - எங்கள் பிணையான - இயேசுவுக்குண்டான - வாதை நீங்கிற்றே. - மிகவும் நீ வாதித்தும் - தீர்ந்ததே, அத்தாலே நாங்கள் - என்றுஞ் சுகவான்கள்.

சா. கொல்ல ஆசையாக - சாவு எதிராக - நின்றும் நம்மிலே - அத்தால் பயமில்லை; - கிறிஸ்து அதின் வில்லை - வாங்கிப்போட்டாரே. - ஆகையால் சாவதினால் - மாறி, நமக்கங்குண்டாகும் - வாழ்வின் பாதையாகும்.

எ. ஆகையால் நான் சாகும் - நாளின் பின் மண்ணாகும் - தேகமானது - இளைப்பாறத்தக்க - தானத்தில் கிடக்க - வேண்டியதற்கு - பயம் ஏன் நான் அடைவேன்; - கல்லறையில் இயேசு தாமே - வைக்கப்பட்டோராமே.

அ. கெட்ட லோகத்துக்கு - செத்து, அவருக்கு - ஐக்கமானோமே. - அவருக்குள்ளான - நாம் அடக்கமான - பின்பு

அவர்க்கே - ஒத்ததாய்ச் செயமுமாய் - நாமும் மண்ணைவிட்டெழுந்து - வாழ்வடைவதுண்டு.

௯. கல்லறைக்குள்ளான - மத்தியஸ்தரான - கிறீசு அல்லோ - அதிலேயிருந்து - உயிரோடெழுந்து - வந்தாரே; இப்போ - சகல அவருட - நல்லவயவங்களுக்கும் - செயமேயிருக்கும்.

௰. இப்படி நாம் சென்ற - பின்பு வாழ்வோமென்ற - நிச்சயமுண்டே. - ஆகையால் பழைய - சட்டையைக் களைய - போறோமென்பதே. - நமது மகிழ்ச்சிக்கு - ஆனது, பிறபாடுண்டாகும் - ரூபம் புதிதாகும்.

*P. J. Spener*, † 1705.



## கிறிஸ்து பரமண்டலங்களுக்கேறின பண்டிகையின் பாட்டுகள்.

௭௪. Zeuch uns nach dir, so kommen wir. (74.)



ஆ, இயேசுவே, - புவியிலே - இருந்திரக்கமாக - அடியாரை - அங்கும்மண்டை - இழுத்துக்கொள்வீராக.

௨. இழும், இழும், - அடியார்க்கும் - பரகதி அளியும்; - அப்போதெல்லா - உபத்திரவ - வருத்தங்கள் முகியும்.

௩. ஆ, எங்களை - நீர் உம்மண்டை - போம் பாதையில் நடத்தும்; - அடியார் கால - தப்பாய்ப் போனால், - நீர் மோசத்தை அகற்றும்.

௪. இவ்வுலகம் - ஆகாத்தலம், - இழும்; அடியார் தேடும் - தலம் பரம்; - ஆ, அவ்விடம் - நீர் கொண்டபேரைச் சேரும்.

௫. நீர் ரட்சகர், - நீர் மீட்டவர், - நீரே இம்மானுவேலும். - இரட்சியும், - இழும், இழும்; - இவ்வேண்டுதலைக் கேளும்.

*Ludämilia Elisabeth von Schwarzburg Rudolstadt*, † 1672.

## ௭௫. Gen Himmel aufgefahren ist. (75.)



செயித்த இயேசு சுவாமியார், - அல்லேலூயா, - பரங்களுக்கு ஏறினார். - அல்லேலூயா.

உ. பிதாவின் பாகத்தில் அவர், - அல்லேலூயா, - விண் மண்ணை ஆளும் அரசர். - அல்லேலூயா.

௩. இதே முன் தாவீத் சொன்னது, - அல்லேலூயா, - அதிப்போ நிறைவேறிற்று. - அல்லேலூயா.

௪. பிதாவோடுளுக்கார்ந்தாரே, - அல்லேலூயா, - பகைஞர் கீழ்ப்படத்தானே. - அல்லேலூயா.

௫. அத்தாலே ஆர்ப்பரிக்கிறோம், - அல்லேலூயா, - களிப்பாய்க் கிறிஸ்தைப் போற்றுவோம். - அல்லேலூயா.

௬. திரியேகருக்கிஸ்தோத்திரம், - அல்லேலூயா, - கனம் புகழ்ச்சி கீர்த்தனம். - அல்லேலூயா.

*Melchior Franck*, † 1639.

## ௭௬. Nun freut euch, Gottes Kinder all. (76.)



மகிழ், கர்த்தாவின் மந்தையே, - இதோ, செம்பிரத்துடனே - பரத்துக்குன அதிபதி - போய் ஏறினார், இஸ்தோததிரி. - அல்லேலூயா.

உ. பரத்தின் சேனை ஓசையாய் - கொண்டாடி, மா வணக்கமாய் - பணிந்து இயேசு சுவாமிக்கு - ஆராதனை செலுத்தது. - அல்லேலூயா.

௩. கர்த்தாதி கர்த்தர் நமக்கு - தலைவரானாரென்பது - பரத்தின் தூதருக்கெல்லாம் - விசேஷித்த சந்தோஷமாம். - அல்லேலூயா.

ச. தலத்தையும் நாம் என்றைக்கும் - மகிழும் பாக்கியத் தையும் - பிதாவின் வளவில் அவர் - போய் ஆயத்தப்படுத் தினர். - அல்லேலூயா.

ரு. நாம் மோட்சத்தின் சுதந்தரர் - வானோருக்கொப்பு மானவர்; - இத்தால் மகிழ்ச்சியாய் வானோர் - எல்லாங் கர்த் தாவைப் போற்றுவோர். - அல்லேலூயா.

சா. இனிக் கெடோம், அதேனென்றால் - கிறிஸ்தென்ற ரண் டாம் ஆதாமால் - பொல்லாப்பு பாவஞ் சாவு பேய் - எக் கேடும் வெல்லப்பட்டதே. - அல்லேலூயா.

எ. தேவாவியை அவர் அன்பாய் - அனுப்பி, நல்ல மேய்ப்ப ராய் - சபையைப் பராமரிக்கிறார், - போர் வந்தால் நம்மைக் கை விடார். - அல்லேலூயா.

அ. மோட்ச வழி எல்லாருக்கும் - தெரியக் காண்பிக்கப் படும். - தன் இயேசுவுக்குள்ளானவன் - நல்லறிவுள்ள மனி தன். - அல்லேலூயா.

கூ. திடனாய் விசுவாசித்து - சகித்து நம்ப, நமக்கு - தேவாவி ஈவளிக்கிறார், - இக்கட்டில் நம்மைத் தேற்றுவார். - அல்லே லூயா.

ய. மரிக்கும் கிறிஸ்துவாகிய - இரட்சகர் சம்பாதித்த - வரங்கள் விசுவாசிக்கு - தேவாவியால் பலிக்குது. - அல்லே லூயா.

யக. இவருட வெளிச்சத்தை - அல்லாமல் இயேசுகிறிஸ் துவை - அறியோம்; நம்மை இவர்தாம் - சுத்திகரிப்பவரு மாம். - அல்லேலூயா.

யஉ. இத்தேவ கிருபைகளும் - பெரிய ஆசீர்வாதமும் - கிறிஸ்தென்பவர் செயத்துடன் - பரத்துக்கேறின பலன். - அல்லேலூயா.

யங. ஆகையினால் வானோரைப்போல் - சந்தோஷமாகப் பாடுங்கள். - துதியுந் தோத்திரங்களும் - திரியேகருக்குண் டாகவும். - அல்லேலூயா.

யச. அனாதியாம் பிதாவே. நீர் - இத்தன்மை தயவைச் செய்தீர் - என்றும்மை நித்தநித்தமும் - ரட்சிக்கப்பட்டோர் போற்றவும். - அல்லேலூயா.

யரு. ஆ, இயேசு தேவ மைந்தனே, - கர்த்தா, பத்தா, தலை வரே, - அடியார் நெஞ்சு உமக்கு - ஆதீனமாயிருப்பது. அல்லேலூயா.

௰சா. அன்புள்ள தேவ ஆவியே, - வெளிச்சம் வீசுஞ் சோதியே, - நீர் எங்களாலே என்றைக்கும் - இஸ்தோத்திரிக் கப்படவும். - அல்லேலூயா.

*Erasm. Alberus*, † 1553.




# பரிசுத்த ஆவியின் பேரிலே பாடுகிற பாட்டு கள்.

எஎ. Komm, Gott Schöpfer, heiliger Geist. (77.)



அடியார் நெஞ்சைத் தயவாய் - சந்தித்து ரப்பி, உமக்கே - பொருந்தும் அலங்காரமாய் - படையும், தேவ ஆவியே.

௨. மெய்த் தேற்றரவளிக்கிற - பாரகவாயிருக்கிறீர்; - வானு பிஷேகமாகிய - சீவாறும் நேசத் தீயும் நீர்.

௩. பல வரம் நடத்திய - நீர் தம்பிரானுட விரல்; - தெய் வீக சொல் புறப்பட - உம்மால் படியும் பாஷைகள்.

௪. வெளிச்சந் தாரும், அறிவில் - சூடன்பை நெஞ்சிலே கொடும்; - சதையின் பலவீனத்தில் - பலம் உண்டாக்கியரு ளும்.

௫. அடியார் எச்சரிக்கையாய் - நீர் ஏவும்போல் நடக்க வே - பிசாசின் சூதைத் தூரமாய் - விலக்கும். மனவாசரே.

௬. பிதா சுதனையும் நன்றாய் - அறிந்து அண்டிக்கொள்ள வே - நீர் எங்கள் தேவ வாத்தியாய் - இரும், இருவர் ஆவியே.

௭. திரியேக தெய்வமாகிய - பிதா குமாரன் ஆவிக்கும் - எப்போதென்றைக்குஞ் சகல - புகழ்ச்சியும் உண்டாகவும்.

*D. M Luther*, † 1546.

## ௭௮. O du allersüsste Freude. (78.)



ஆனந்த மகிழ்ச்சிக்கான - இன்பமுள்ள ஒளிவே, - துக்க நாளிலும் அன்பான - ஆறுதலின் சோதியே, - யாவையும் அளவில்லா - பலமாகத் தாங்கிற - ஆவியே, இரக்கமாக - என் செபத்தைக் கேட்பீராக.

௨. யாவிலும் நீர் மேன்மையான - உன்னத வரமாமே; - நீர் இருந்தால் நெஞ்சுக்கான - பரிபூரணம் உண்டே. - ஆ, இறங்கி, நன்மையால் - அதை ரப்பும்; ஏனென்றால் - அது உமக்கு நீர்தாமே - முன்னே நேமித்த வீடாமே.

௩. நீர் பிதா குமாரனாலும் - வந்திறங்கி, எங்களை - சகல வரங்களாலும் - ரப்பும் பரமமழை. - ஆ, என் ஆவி தேகமும் - உம்மால் பங்கிடப்படும் - ஈவுகளினால் நன்றாக - ரப்பப்பட்டுப் போவதாக.

௪. சகலத்தையும் நீர் கண்டு, - யாவையும் அறிகிறீர்; - நீர் கடல்களை அளந்து, - மண்ணின் தூளை எண்ணினீர். - என் இருண்ட நெஞ்சுட - கேட்டையும் அறிகிற - ஆவி, என்னில் ஞானக் கண்ணும் - சற்குணமும் உண்டுபண்ணும்.

௫. பரிசுத்தமாயிருக்கும் - தானத்தில் நீர் தங்குவீர்; - நாறும் பிரேதத்தை வெறுக்கும் - புறாவைப்போலிருக்கிறீர். - சுத்தமான வெள்ளமே, - என்னில் பாய்ந்து, உமக்கே - ஏற்றிராததைக் கழியும், - ஏற்றதைப் பயிராக்குவியும்.

௬. சாந்த சிந்தை உமக்குண்டு, - கெட்ட எங்களுக்கு நீர் - அன்பைக் காண்பித்தேயிருந்து - நன்மை யாவுஞ் செய்கிறீர். - ஆ, நீர் நேசித்தோனை நான் - பகைக்காமல், அன்பைத்தான் - யாவர்மேலுந் தயவாக - வைக்க ஈவளிப்பீராக.

௭. என்னைத் தள்ளிப் போடீராக - என்று கெஞ்சிக் கேட்கிறேன். - எனக்குள்ளே வாசமாக - நீர் நிலைத்தால் தேறுவேன். - உம்முடைய சொந்தம் நான், - உமக்குத் துதியாய்த் தான் - பரிசுத்தனாயிருந்து, - நன்மை செய்ய ஆசையுண்டு.

௪. உமக்கு விரோதமான - யாவையும் வெறுக்கிறேன்; - உமக்கேற்றிருப்பதான - யாவையுந் தொடருவேன். - சாத்தான் வேண்டியதுக்கு - கெட்டியாய் விரோதித்து, - அதின் சூதைக் கவனிப்பேன், - அதின் ஏவலைச் சபிப்பேன்.

௫. ஆனால் உம்மால் நான் பலக்க - என்னைத் தாங்கியருளும்; - என் நிர்ப்பந்தத்துக்குத் தக்க - அனுகூலராயிரும். - பழ நஞ்சனைத்தையும் - என்னில் நீர் முறிக்கவும், - சுவாமிக்கென்மேல் அன்புண்டாக - புதுச் சிஷ்டியாவேனாக.

௬. நான் சிக்குண்டால் விடுவியும், - விழப்போனால் ரட்சியும், - செத்தால் என்னிலே தரியும், - மண்ணானாலும் வைத்திரும். - மீண்டும் நான் எழும்புகில் - என்னைப் பரலோகத்தில் - கிறிஸ்துவின் அவயமாக - சேர்த்தலங்கரிப்பீராக.

*P. Gerhardt*, † 1676.

## எக. Komm, heiliger Geist, Herre Gott. (79.)



இறங்கும், தெய்வ ஆவியே, - அடியார் ஆத்துமத்திலே - பர வரத்திரளை ஊற்றும், - தேவன்பின் தீயை அதில் மூட்டும். - நீர் வீசுஞ் சோதியால் அன்பாய் - எச்சாதியாரையும் ஒன்றாய் - மெய் விசுவாசத்திற்குச் சேர்க்கும் - தயைக்குத் தோத்திரங்கள் ஏற்கும். - அல்லேலூயா, அல்லேலூயா.

௨. பரத்தின் தூய்ய ஒளிவே, - உம்மால் பராபரனையே - அறிந்தப்பா என்றுண்மையாக - அழைக்க நன்றாய்க் கற்போமாக. - அடியார் இயேசு கிறிஸ்துவை - அல்லாமல் வேறே மேய்ப்பரை - தேடாமல், அவர்மேல் எல்லாரும் - மாபத்தியாயிருக்கத்தாரும். - அல்லே. அல்லே.

௩. அனல் பலமுமாக்கிற - நல்லாவி, நாங்கள் உம்முடவசத்தில் திடமனதாக - இக்கட்டிலுந் தரிப்போமாக. - அதற்கொத்தாசையாயிரும்; - பிழைப்பிலும் இறப்பிலும் - அடியார்

வெற்றியாய்ப் போராடும் - மூனையை எங்களுக்குத் தாரும். - அல்லே. அல்லே.

D. M. Luther, † 1546.

## அ௰. O heil'ger Geist, kehr bei uns ein. (80.)



கர்த்தாவின் சுத்த ஆவியே, - நீர் எங்கள் ஆத்துமத்திலே - இறங்கி வாசம் பண்ணும். - பரவெளிச்சமாகிய - உம்மாலே நாங்கள் சீர்பட - தெளிந்த நெஞ்சுங் கண்ணும் - தந்து, வந்து - மெய்ச்செபத்தை நற்குணத்தைப் போதிவியும், - மெய்ச்சந்தோஷத்தை அளியும்.

௨. நீர் போதிவிக்கும் வார்த்தையே - எப்போதும் எங்கள் நெஞ்சிலே - தீயாய் எரிவதாக. - பிதா சுதன் இருவரால் - இறங்கும் உம்மையும் அத்தால் - திரியேக தெய்வமாக - நல்ல வல்ல - பத்தியோடும் பணிவோடும் போற்றிப்பாடும் - வாக்கை எங்களுக்குத் தாரும்.

௩. நல்லோர் அடைகிற எல்லா - மெஞ்ஞானத்துக்குங் காரணு, - நீர் எங்கள்மேலே வாரும். - மற்றோருக்குஞ் சன்மார்க்கத்தை - அன்பாகக் காட்டுங் கல்வியை - நீர் எங்களுக்குத் தாரும். - நாட்டில், காட்டில், - தேசமெங்கும் பொய் அடங்கும் நாள் உண்டாக - உம்மால் மெய் பலப்பதாக.

௪. வழித்துணையாங் கர்த்தரே, - நல்யோசனை அறியோமே, - நீரே வழியைக் காட்டும். - எல்லா உபத்திரவத்திலும் - திடம் நிலைவரத்தையும் - அளித்து முசிப்பாற்றும். - வாரும், பாரும், - கைசலித்துக் கட்டுவிட்டுப் போனயாவும் - சீர்பட நீரே உசாவும்.

௫. பொல்லாத சத்துருக்களை - எப்போதும் வெல்லும் வல்லமை - குறையற உண்டாக - நீர் எங்கள்மேல், நற்றைலமே, - இறங்கி, சேவகத்திலே - முனை கொடுப்பீராக. - தேற ஏற - கண்ணெடுக்கும் யாவருக்கும நவமாக - ஆறுதல் அளிப்பீராக.

௬. சீவாவி, நாங்கள் இயேசுவின் - பிரிய சுவிசேஷத்தின் - பேரின்பத்தால் நிறைந்து, - ரட்சிப்பின் நீளம் அகலம் - சிநேக ஆழம் உயரம் - ஏதென்றுணர்வடைந்து, - பாவம் சாபம் - வென்றகர்த்தா எங்கள்பத்தா என்றறியும் - திடநிச்சயம் அளியும்.

௭. பரத்தின் மதுரப்பனி, - நீர் எங்கள் உள்ளத்துருகி - அன்பால் நிரம்பப்பண்ணும், - சகோதரர் ஒன்றாகிய - சிநேகத்தைக் கெடுக்கிற - பொறாமையும் வன்கண்ணும் - வாடி மாறி, - நல் இணக்கம் மெய் இரக்கம் நேசக்கட்டும் - சாந்தம் அன்பும் வளரட்டும்.

௮. கற்போடே எங்கள் நாட்களை - நடத்த எங்கள் ஆவியை - பலப்படுத்தி வாரும்; - பொல்லாத ஆசை இச்சையை - விலக்கி, அது எங்களை - விஷந்தீண்டாதே காரும். - ஆனவான - வாழ்வைநாடுஞ் சீரைத் தாரும், மோட்சங்காட்டும்; - அத்தால் எங்கள் நெஞ்சை ஆற்றும்.

*Mich. Schirmer*, † **1673.**

## அ௩. Gott Vater, sende deinen Geist. (83.)



பிதாவே, உமதாவியை - அன்பாய் அனுப்பும், அவரை - அடியார்க்கீவாய்த் தாரும். - செபத்தில் உம்மை ரட்சகர் - இவ்வீவைக் கேட்கச் சொன்னவர், - இவர் முகத்தைப் பாரும்.

௨. சகலமான மனிதர் - இவ்வீவுக்கு அபாத்திரர். - நீர் தயவாய்க் கொடுக்கும் - தேவாவியின் வரம் மகா - அன்புள்ள ரட்சகரூடே - சம்பாதிப்பாயிருக்கும்.

௩. பிசாசாதாமின் சாதியை - கெடுத்து, தேவ சாயலை - எல்லாஞ் சமூலமாக - நரருக்குள் அழித்தது; - இவ்வேழைப் பாவிகளுக்கு - இரக்கஞ் செய்வீராக.

௪. கெட்டோம், திரும்பக் கடாட்சித்தீர்; - விழுந்தோம், மீட்புண்டாக்கினீர். - இம்மீட்பை நாங்கள் பற்றும் - மெய்

யான விசுவாசமும் - புதிய நற்குணங்களும் - அடியாரில் வரட்டும்.

௫. இப்புதுச் சீர் திறமில்லா - இந்நீசப் பாவிகளுட - பலத்தால் உண்டாகாது. - நீர் இதை உமதாவியால் - அளித்துக் கொண்டிராவிட்டால் - அடியாரில் இராது.

௬. மெய் விசுவாசம் அவரால் - கொளுத்தப்பட்டதேயானால் - பொல்லாத லோகத்தார்கள் - பேயோடே கூட மிகவும் - அதை அவிக்கத் தேடியும், - வீணாய் எழும்புவார்கள்.

௭. கர்த்தாவின் ஆவி தங்கிற - இடத்தில் பரிபூரண - செயம் உண்டாயிருக்கும். - பிசாசு கட்டிப் போட்டதை - அவருடைய வல்லமை - ஓர் நாழிகையில் நொறுக்கும்.

௮. இருளுட பெலன்களை - முறித்து, ஏழை மனதை - சுகப்படுத்தி வாறார்; - புசலின் மப்பு வருகில் - காப்பாற்றித் தேற்றி, உள்ளத்தில் - நிலை வரத்தைத் தாறார்.

௯. கசப்பைத் தித்திப்பாக்குவார், - இருட்டில் சோதி காண்பிப்பார், - நல்லாறுதலைச் சொல்வார். - மந்தாரமான ராவிலே - நாம் நம்பி, சுகத்துடனே - இருக்கக் காத்துக் கொள்வார்.

௰. கர்த்தாவுக்குப் பயப்பட - எழுப்பி, சுத்தமாகிய - இதயத்தில் தரிப்பார். - பணிந்து தாழ்ந்து மனதை - திருப்பிக் கொள்பவர்களை - தெரிந்தாசீர்வதிப்பார்.

௰௧. தினம் நாம் சாகுமட்டுக்கும் - நம்மோடவர் சகாயரும் - துணையுமாய் நிலைப்பார்; - நாம் சாவின் பள்ளத்தாக்கிலே - உட்படுகில் கேடன்றியே - பரகதிக்கழைப்பார்.

௰௨. இப்போதும், ஆ, தயாபரா, - அடியார் உம்மைக் கேட்கிற - விண்ணப்பத்தை அளியும். - நீர் பரிசுத்த ஆவியை - தந்தவராலே எங்களை - அன்பாய் ஆசீர்வதியும்.

*P. Gerhardt*, † 1676.

## ௮௪. Nun bitten wir den heiligen Geist. (84.)



மெய்யான விசுவாசத்தை - தந்து, வாழ்வில் சாவில் எங்களை - காப்பாற்ற, நாங்களும் உட்கருத்தாக - இப்போ தேவரீரை, வேண்டிக்கொள்வோமாக, - தேவாவியே.

௨. வெளிச்சமே, ஒளிவிடும், - இயேசுவை நன்றாய் அறியும், - மோட்சத்தைத் திறந்த அவர்க்குள்ளாக - நிற்கவும் அடியார் வாத்தியாவீராக, - தேவாவியே.

௩. அன்பான ஆவி, நேசத்தால் - நாங்கள் ஒன்றுக்கொன்று உள்ளநாள் - ஏக சிந்தையாக இருந்தெல்லாரும் - கிறிஸ்துக்குள் ஒன்றாயிருக்கும் அன்பைத் தாரும், - தேவாவியே.

௪. இக்கட்டில் தேற்றும் ஆவியே, - நாங்கள் தீங்குடைய நாளிலே - நம்பி, சாவிலேயும் வதையிலேயும் - பயமற்றிருக்க நீர் சகாயஞ்செய்யும், - தேவாவியே.

*D. M. Luther*, † 1546.

## ௬௮. Komm, o komm, du Geist des Lebens. (87.)



வாரும், தேவஆவி, வாரும், - எங்கள் ஆத்துமத்திலே - எங்களுக்குயிரைத் தாரும், - வாரும், சுத்த ஆவியே. - உம்முடன் வெளிச்சமும் - சீருஞ் சீவனும் வரும்.

௨. எங்கள் நெஞ்சிலே நற்புத்தி - தேவ பயமும் வர - அதை நீர் குணப்படுத்தி, - தப்புநினைவாகிய - யாவையும் அதில் நீரே - நீக்கும், தேவ ஆவியே.

௩. மோட்சத்தின் வழியைக் காட்டி, - சகல தடையையும் - நீக்கி, எங்களைக் காப்பாற்றி, - நல்லோராக்கியருளும். - கால் இடறிற்றேயாகில், - துக்கந் தாரும் மனதில்.

௪. நாங்கள் தேவ மைந்தரென்று - நீரே தீங்கு நாளிலும் - சாட்சிதந்தத்திரை வென்று, - நெஞ்சைத் தேற்றியருளும். - தேவஅன்பின் தண்டிப்பு - எங்களுக்கு நல்லது.

௫. எங்களைப் பிதாவிடத்தில் - முழுப் பத்தியோடேயும் - சேரப்பண்ணி, ஆத்துமத்தில் - நீருங் கூப்பிட்டேயிரும்; - அப்போ கேட்டது வரும், - நம்பிக்கையும் பெருகும்.

௬. மனசெங்களில் கலங்கி, - சுவாமி, எந்தமட்டுக்கும் - என்று செஞ்சும்போதிரங்கி, - அதை ஆற்றிக்கொண்டிரும். - நிற்கவுந் தரிக்கவும் - நீர் சகாயராயிரும்.

௭. ஆ, நிலைவரத்துக்கான - சத்துவத்தின் ஆவியே, - பேயின் சூதுக்கெதிரான - ஆயுதங்களை நீரே - தந்து, நாங்கள் நித்தமும் - வெல்லக் கட்டளையிடும்.

௮. விசுவாசத்தை அவிக்க - சத்துருக்கள் பார்க்கச்சே, - அதை நீர் அதிகரிக்க - பண்ணும், தேவ ஆவியே. - நாங்கள் பொய்யைப் பார்க்கிலும் - தேவவாக்கை நம்பவும்.

௯. சாருங் காலம் வந்தால் நாங்கள் - நித்திய மகிழ்ச்சியாய் - வாழப்போற மோட்சவான்கள் - என்றப்போ விசேஷமாய் - நிச்சயத்தை நெஞ்சிலே - தாரும், நல்ல ஆவியே.

*Joachim Neander*, † 1680.



# தேவசுபாவ மகிமையின் பேரிலே பாடுகிற பாட்டுகள்

௬௯. Allein Gott in der Hoeh sei Ehr. (91.)



தெய்வன்புக்காக உன்னத - கர்த்தாவுக்குப் புகழ்ச்சி; - ஏன், பாவக்கேட்டை நீக்கின - அது மகாதிரட்சி. - மெய்ச்சமாதானம் என்றைக்கும் - நராட்கள்மேல் பிரியமும் - உண்டாம் இரக்கம் பெற்றோம்.

௨. மாறுமல் ஆண்டிருக்கிற - மகத்துவ பிதாவே, - துதியோடும்மைக் கும்பிட - பணிகிறோம், கர்த்தாவே. - அளவில்

லாப் பலமாய் நீர் - நினைத்த யாவுஞ் செய்கிறீர்; - மா பாக்கி யர் அடியார்.

௩. ஆ, இயேசு, தெய்வ மைந்தனே, - கடன்களைச் செலுத்தி - கெட்டோரை மீட்ட மீட்பரே, - மாசற்ற ஆட்டுக்குட்டி, - மா கர்த்தரே, தயாபரா, - நீர் எங்கள் சத்தங் கேட்டெல்லா - சபையின்மேல் இரங்கும்.

௪. மெய்யாகத் தேற்றும் உன்னத - தேவாவி, நீர் அன்பாக - இறங்கி, கிறிஸ்து தம்முட - சாவால் பிரியமாக - மீட்டோரைச் சாத்தான் கண்ணியில் - விழாதே காத்து, துன்பத்தில் - செயிக்கப் பண்ணும், ஆமேன்.

*N. Decius*, † 1529.

௯௨. Gott der Vater wohn uns bei. (92.)



பரம தகப்பனே,
௨. சுவாமி இயேசுகிறிஸ்துவே,
௩. பரிசுத்த ஆவியே,
௪. ஆ, திரியேக சுவாமியே,
} துணை செய்தன்பாய்க்காரும். - பாவம் நீக்கும், கர்த்தரே, - நன்மரணத்தைத் தாரும்; - பேயின் சூதைத் தவிரும், - மெய்விசுவாசமாக - இருக்கிறதற்காக - வரம் அளிப்பீராக. - உம்மை நமபப் போதியும், - பிசாசு அம்பை எய்யும் - எச்சோதனையிலேயும் - நீர் அனுகூலஞ் செய்யும். - ஆமேன், அது நிச்சயம், - தயாபரர்க்கிஸ்தோத்திரம்.

*D. Martin Luther*, † 1546.

## ௯௪. Was alle Weisheit in der Welt. (94.)



மகத்துவமும் நீதியும் - மா கிருபையுமான - உன்னதமான தேவனும் - ரட்சிக்கப் பலமான - பராபரனுமாங் கர்த்தா - ஓர் வஸ்துவும் மூன்றாளும்; - இதைத்தாம் தான் வெளிப்பட - பண்ணாவிட்டால், ஓர்க்காலும் - மனோவாக்குக்கெட்டாது.

௨. பரத்தில் தங்கி நீதியர் - சபையிலும் உலாவி, - எங்கும் இருக்கிற இவர் - பிதா குமாரன் ஆவி. - இப்பரிசுத்த நாமமாய் - விளங்கிய அன்புள்ள - திரியேகர் கோடாகோடியாய் - இருக்குமெங்குமுள்ள - சேனைகளுக்குங் கர்த்தர்.

௩. அனாதியாய்ப் பிதாவிலே - குமாரனார் பிறந்தார்; - இவ்வுலகத்தில் இவரே - நரரை மீட்க வந்தார்; - இருவராலும் ஆவியார் - பளிங்குக்கு ஒப்பான - ஆறாய்ப் புறப்படுகிறார். - இம்மூவர் ஏகமான - மகத்துவமுடையோர்.

௪. இதோ, என் நெஞ்சே, உன்னுட - கதி இக்கர்த்தர் தானே. - உன் வாழ்வைப் பராமரிக்கிற - உன் நேசர் தம்பிரானே. - பார், உன்னை உண்டுபண்ணினார், - உன் பாவததைச் சுமநதார், - மோட்ச வழியைக் காண்பித்தார், - இரக்கஞ் செய்து வந்தார்; - முடியவும் ரட்சிப்பார்.

௫. நீ அவரண்டை அவரை - நன்றாய் அறிய ஏறு, - அவருடைய தயவை - ருசிக்கக் கிட்டிச் சேரு. - திடனுந் தேவநேசமும் - பரகதிக்குப் போக - விருப்பமும் அத்தால் வரும். - ஆ, அந்தப் பரலோக - மோட்சானந்தத்தைத் தேடு.

௬. ஆனால் லௌகீக ஆசையால் - கர்த்தாவை விட்டுவிட்டு, - தன் மனக்கடினத்தினால் - பிசாசைத் தண்டனிட்டு - பின் பற்றுஞ் சேனைக்கு ஐயோ; - அக்குருடர் எண்ணாத - கர்த்தா வெளிப்படும் அப்போ - ரட்சிப்பில் பங்கில்லாத - துன்மார்க்கராய்த் தள்ளுண்போர்.

௭. ஆ, மகிமையின் கர்த்தரே, - உம்மண்டைக்கு எல்லாரும் - திருப்பப்படுவதற்கே - இரக்கமாகப் பாரும்; - நீர் அந்த

கத்தை நீக்குமேன், - தப்பாய்ப் போனோரைத் தேடும். - பேய் யாவரைக் கெடுப்பானேன், - அடிப்பலமும் வேரும் - இல்லாரை ஊன்றக்கட்டும்.

அ. பிதா குமாரன் ஆவியே, - திரியேக கர்த்தரான - உன்னதமான தெய்வமே, - ரட்சிக்கப் பலமான - ராசாதி ராசா, உம்மண்டை - வந்தும்மை என்றும் பாட, - அடியார் நற்போராட்டத்தை - இவ்வுலகில் போராட - அனுக்கிரகம் அளியும்.

P. Gerhardt, † 1676.



## தேவதூதரின்பேரிலே பாடுகிற பாட்டு

கூகா. Es stehn vor Gottes Throne. (96.)



க. கர்த்தாவை நித்தம் பார்க்கும் - தூதாக்கள் பூமியில் - சிறியரையுங் காக்கும் - துணைகள், ஏனெனில் - குமாரன் மீட்டயாவும் - சிறியர் ஆத்துமாவும் - கர்த்தாவுக்கருமை.

உ. கர்த்தாவால் தங்களுக்கு - கற்பிக்கப்பட்டதை - அவர்கள் செய்வதுக்கு - மின்னல்களத்தனை - லேசாய் இறங்குவார்கள், - நற்காவலைக் காப்பார்கள் - இரவும் பகலும்.

ந. மாற்றான்களின் பலத்த - சதியைத் தாங்களாய் - விலக்கத் திராணியற்ற - கிறிஸ்தோர்கள் வாசமாய் - இருக்கிற அகங்கள் - ராத் தங்கிற தலங்கள் - தூதாக்கள் காவல்தான்.

ச. தூதாக்கள் தங்கள் நேசர் - என்றுகார் ஆபிரகாம் - லோத் வீட்டார் எலியேசர் - யாக்கோபும் மற்றுண்டாம் - அநேகரும் நன்றாக - மா ஆறுதலுக்காக - அறிந்துகொண்டவர்.

ரு. எலீயா தூதனாலே - விசாரிக்கப்பட்டான்; - எலீசா தூதராலே - இக்கட்டில் சூழுண்டான். - இரட்சகர் பிறந்த - இராவில் மேய்ப்பர் கண்ட - தூதாக்கள் மிகுதி.

சா. இப்பிள்ளையை அழிக்க - வாறார்கள் என்பதை - யோசேப்புக்கறிவிக்க - ஓர் தூதன் அவனை - எழுப்பி, துஷ்டனுக்கு - இடைந்து போறதுக்கு - வழியைக் காண்பித்தான்,

எ. அன்புள்ள தூதர் கையில் - எளியலாசரு - இறந்த அந்நி மையில் - மோட்சானந்தத்துக்கு - எடுத்துப்போகப்பட்ட - நற்செய்தியும் பலத்த - மகிழ்ச்சிக்கானது.

*L. Helmbold*, † 1598.



# பராபரனுடைய நரசீவதயவின் பேரிலே பாடுகிற பாட்டுகள்.

சக. Sollt ich meinem Gott nicht singen. (99.)



என் கர்த்தாவை நான் பாடாமல் - மௌனமாயிருப்பேனோ; - அவர் உண்மை மாசில்லாமல் - எதிலும் விளங்காதோ. - முகி வன்றி அவர்தாமே - தம்முடையவர்களை - தாங்கி ஆதரிப் பதை - பார்த்தால், வல்லநேசமாமே. - யாவுங் கொஞ்ச நிமி ஷம், - தேவ நேசம் நித்தியம்.

உ. இந்தமட்டுக்கும் இருக்கும் - சீவனைத் தாம் எனக்கு - தாயின் கெர்ப்பத்தில் கொடுக்கும் - நாள் துவக்கித் தமது - செட்டைகளினாலே நித்தம் - அவர் என்னை மூடினார்; - அன்பு மாய் விசாரித்தார்; - நான் பிழைப்பதவர் சித்தம். - யாவுங் மு.

ங. நரகத்தை நான் காணாமல், - வாழவே தயாபரர் - ஏக மைந்தனைப் பாராமல் - வாதைக்கொப்புவித்தவர். - ஆச்சரி யம் என்னை மூடும்; - தேவ அன்பின் ஆழமே, - உன்னை உலகத் திலே - ஆர் அளவறுக்கக் கூடும். - யாவுங் மு.

ச. தேவ வசனத்தினாலே - என்னை உபதேசித்து, - திடவிசு வாசத்தாலே - ரப்ப அவர் எனக்கு - தமதாவியையுந் தாரார். - இவர் என்னைச் சகல - நோவில் தேறறி, உத்தம - பாதையில் நடத்திவாரார். - யாவுங் மு.

ரு. இப்படி என் ஆத்துமத்தை - தயவாய் விசாரித்தார், - என் சரீரத்தின் இக்கட்டை - கூடவுங் கண்ணோக்கிறார். - என்

பலமெல்லாந் தயங்கும் - போதவர் கடாட்சமும் - ஞானம் உண்மை சத்தியும் - தன்னைக் காண்பிக்கத் தொடங்கும். - யாவுங் மு.

ரு. விண் மண் அதுகளிலுள்ள - சேனையாவும் எனக்காம்; - எங்கே பார்த்தும் என்மேலுள்ள - தேவ அன்பைக் காணலாம். - காடுகள் கடல் நதியும் - பள்ளங்கள் மலைகளும் - தோப்பு தோட்டம் வயலும் - எனக்கு ஆகாரம் ஈயும். - யாவுங் மு.

எ. தூங்கும்போது எனக்காக - அவரே விழிக்கிறார்; - காலைமாறும் நவமாக - என்னைக் கடாட்சியாதிரார். - என் பராபரன் ரட்சிக்கும் - கிருபை இல்லாவிட்டால், - என்னைப் பேயின் துஷ்டத்தால் - சேனை துன்பங்கள் அழிக்கும். - யாவுங் மு.

அ. பேயால் எத்தனை கேடான - வாதைகள் நடக்குது; - நானோ அதின் மூர்க்கமான - கைக்குத் தப்ப வானதது - தூதர்கள் துணை செய்தார்கள், - அவர்கள் கர்த்தாவுட - கட்டளையினால் எல்லா - தீதையும் விலக்கினார்கள். - யாவுங் மு.

கூ. பிள்ளை தப்பிதஞ் செய்தாலும் - பெற்றவர்கள் நெஞ்சிலே - உள்ள அன்பு ஒருக்காலும் - முழுதாய் மறையாதே; - அதைப் போல் அவர் மன்னித்தார், - என்னைப் பட்டையங்களால் - அல்லவே, மிலாறினால் - கொஞ்சங் கொஞ்சமாய் அடித்தார். - யாவுங் மு.

ய. ஆண்டவருட அடிகள் - நோவை உண்டு பண்ணியும், - அத்தால் நீதியின் கனிகள் - பிறகாலே காண்பிக்கும். - சுவாமிக்கென்மேல் அன்பிருக்கும், - ஆகையால் நான் கேட்டுக்கு - தப்ப அவர் தண்டிப்பு - நெஞ்சை உயர இழுக்கும். - யாவுங் மு.

யக. கிறிஸ்தவர்களின் இக்கட்டு - வேளைவந்தால் நின்று போம்; - அவதியில் முகிவற்று - என்றைக்கும் நிலைத்திரோம். - மாரிகாலந் தீர்ந்திருக்கும் - போதறுப்புக் காணுது; - காத்திருந்தால் முகிவு - பேரார்ந்த பூரிப்பைக் கொடுக்கும். - யாவுங் மு.

யஉ. தேவ அன்பு மட்டுத்திட்டம் - அற்றதாமே, ஆகையால் - கர்த்தரே, நான் உம்மை நித்தம் - முழு ஆத்துமத்தினால் - அண்டிக் கொண்டிருக்க நீரே - கிருபை அளியுமேன் - என்று கெஞ்சிக் கேட்கிறேன். - நித்தநேசர் தேவரீரே, - உம்மை மகிமையிலும் - என்றைக்கும் நான் பாடவும்.

*P. Gerhardt*, † 1676.

## ௱. Liebe, die du mich zum Bilde. (100.)



என்னைத் தேவசாயலான - சிஷ்டியாக்கி, பின்பு நான் -
கெட்டபோதென் மீட்பரான - கர்த்தரே, நீர் நேசந்தான். -
நேசமே, நான் என்றைக்கும் - உம்முடையோனாகவும்.

௨. என்னை அப்போதான் தெரிந்து, - காலம் நிறைவேறின -
போதென் ரூபையே அணிந்து, - நரசென்மமாகிய - நே
சமே, மு.

௩. எனக்காகப் பாடுபட்டு, - நிந்தையுள்ளதாகிய - சாவால்
பரமண்டலத்து - பாக்கியத்தைத் தேடின - நேசமே, மு.

௪. எனக்கொளிவும் வழியும் - சத்தியமும் நித்திய - சீவ
னும் பரகதியும் - சகலமுமாகிற - நேசமே, மு.

௫. என் துர்ச்சிந்தையை அறுத்து, - என்னை வென்று, என்
னுட - உள்ளத்தை எல்லாம் இழுத்து, - பரவசமாக்கின - நே
சமே, மு.

௬. என்றும் என்னை உண்மையாக - நேசித்து, பிதாவுட -
பாரிசத்தில் எனக்காக - வேண்டிக் கொண்டிருக்கிற - நே
சமே, மு.

௭. என்னை மண் குழியை விட்டு - வரச்சொல்லி, பரம -
சோதியால் அலங்கரித்து - சேர்க்கச் சித்தமாகிய - நே
சமே, மு.

*Joh. Scheffler*, † 1677.

## ௱௨. Nun freut euch, lieben Christen gmein. (102.)



கிறிஸ்தோர்களே, நாம் கர்த்தரின் - மா ஆச்சரியமான - பெ
ரிய உபகாரத்தின் - உயர்த்திக்கேற்றதான - மன மகிழ்ச்சி
யுடனே - இருந்து அதின் பேரிலே - சங்கீதம் பாட வேணும்.

௨. பேயால் கட்டுண்டு சாவுக்கு – நேராய் வழி நடந்தேன், – தினம் என் சென்மப் பாவத்து – உபாதியை நான் கண்டேன். – வரவரக் கேடாச்சுது, – நீங்காத துர்க்குணத்துக்கு – கீழ்ப்பட்டோனாய்க் கிடந்தேன்.

௩. நான் செய்த புண்ணியங்களை – பார்த்தால் அது செல்லாது; – என் சுயமாய்த் துர்க்கிரீயை – ஒழிய நன்றிராது. – மகா திகில் எடுத்தது; – நான் செத்து நரகத்துக்கு – தள்ளுண்பேனென்று தீர்த்தேன்.

௪. ஆனால் அனாதியாய்ப் பிதா – என்மேலே அன்பை வைத்து, – என் கேட்டை நீக்கத் சம்முட – இரக்கத்தை நினைத்து, – எல்லாத்திலும் உகந்ததை – பாராமல், இந்தப் பாவியை – ரட்சிப்பதற்குத் தந்தார்.

௫. ஒன்றான மைந்தனுடனே: – இரங்கக் காலமாமே, – என் நெஞ்சின் நேச கிரீடமே, – போய் ஏழையை நீர்தாமே – மீட்டவன் ஆக்கினைகளை – சுமந்தும்மோடே அவனை – வாழ்வியும் என்று சொன்னார்.

௬. அந்தடவாய் என்னண்டையில் – திவ்விய மைந்தன் வந்தார்; – ஓர் கன்னிகையின் கர்ப்பத்தில் – என் சென்மமாய்ப் பிறந்தார்; – தெய்வீக சோதியை நன்றாய் – மறைத்து, ஏழை ரூபமாய் – திரிந்தார், பேயை வெல்ல.

௭. என்னோடே அவர் சொன்னது: – அஞ்சாதே, நான் முன் நிற்பேன்; – நீ என்னைப் பற்றிக் கொண்டிரு, – நீ தப்ப நான் மரிப்பேன்; – உன்சொந்தம் நான், என்சொந்தம் நீ, – நீ என்னில் பத்தியாய்த் தரி, – அப்போ பிரியோம் என்றும்.

௮. கொலையுண்பேன், என் ரத்தமும் – சிந்துண்டு செலவாகும்; – இப்பாடுகள் அனைத்தையும் – நீ பற்று, உனக்காகும்; – உன் பாவத்தைச் சுமக்கிறேன், – உன்சாவை நான் விழுங்குவேன், – என் நீதியால் பிழைப்பாய்.

௯. பரத்தில் என் பிதாவண்டை – நான் ஏறிப்போயிருப்பேன்; – அங்குன்னை ஆண்டு, ஆவியை – உன் நெஞ்சிலே கொடுப்பேன்; – நீ தேறிக்கொண்டென் அறிவில் – வளர மெய்யின் பாதையில் – உன் காலை நடப்பிப்பார்.

௰. நான் செய்து போதிவித்ததை – நீ செய்து போதிவித்து, – கருத்தாய்த் தேவ அறிவை – புவியில் வர்த்திப்பித்து, – கலப்பாம் போதகத்துக்கு – மா எச்சரிக்கையாயிரு – என்றவர் சொல்லிப் போனார்.

*D. Martin Luther, † 1546.*

## ௱௪. Seelenbräutigam. (104.)



ஞானபத்தாவே, - பாவக் கேட்டிலே - சாகும் என்னைத் தப்புவித்து - சேர்த்த உம்மை நான் துதித்து - போற்ற வேணுமே, - ஞானபத்தாவே.

௨. அன்பின் ரூபு நீர், - என்னைத் தேவரீர் - அன்பாய்ப் பார்த்தால், அதினாலே - என்னை மெய் மகிழ்ச்சியாலே - பூரிப்பாக்கிறீர், - அன்பின் ரூபு நீர்.

௩. ஏற்ற மீட்பர் நீர், - கேட்டை நீக்கிறீர்; - அதுக்கென்றும்மில் தெய்வீக - சுபாவத்தோடே மநுஷீக - சுபாவத்தைச் சேர்த்தீர், - ஏற்ற மீட்பர் நீர்.

௪. உம்மை அண்டினேன், - என்னைத் தேற்றுமேன், - விசுவாசத்தின் திரிக்கு - அது அவியாப்படிக்கு - எண்ணெய் வாருமேன், - உம்மை அண்டினேன்.

௫. நீர் என் கன்மலை, - சேசப்பத்தியை - உம்மில் ஊன்றக் கெட்டியாக்கும், - இது உம்மை நெஞ்சும் வாக்கும் - கேட்குங் கிருபை, - நீர் என் கன்மலை.

௬. பலசாலியே, - நான் தன்னுளிலே - லோகத்தின் சதிக்குத் தப்ப - என்னைப் பலமாய் நிரப்ப - வாரும், இயேசுவே, - பலசாலியே.

௭. தேவனுன நீர் - ஆக்கினையின் கீழ் - உம்மைத் தாழ்த்தி உத்தரித்து, - எங்கள் மீட்புக்காய்த் தவித்து, - தாகம் உண்டென்றீர், - தேவனுன நீர்.

௮. மத்தியஸ்தனே, - நீர் அந்நாளிலே - தேவரீருட பிராணம் - தந்துகொண்ட சமாதானம் - வேணும், இயேசுவே, - மத்தியஸ்தனே.

௯. பரம குணம் - வர உம்மிடம் - சேர்ந்து, லோகத்துக்குச் செத்தோர் - வாழுவர், சாகாதோர் கெட்டோர். - எது பாக்கியம், - பரமகுணம்.

௰. உம்மைப் பற்றினேன், - என்றைக்கும் விடேன், - உம்மை விசுவாசத்தாலே - நான் தரித்தேன், ஆகையாலே - லோகத்தை நாடேன், - உம்மைப் பற்றினேன்.

௰௧. துக்க நாளிலே - என்னை, இயேசுவே, - நீர் அநுப வித்த பாடும் - நோவும பார்த்தன்பாய்த் தற்காரும், - ஆறுதல் நீரே - துக்க நாளிலே.

௰௨. தேறிப் பூரிக்கும் - வேளை இங்கேயும் - உமதன்பிலுல் கிடைக்கும்; - ஆனால் அங்கே என்றென்றைக்கும் - ஆவி தேக மும் - தேறிப் பூரிக்கும்.

௰௩. இங்கே ஈங்கிஷை, - அங்கே மகிமை, - இங்கிருளில் விசுவாசம், - அங்கே பூரண பிரகாசம், - அங்கே மகிமை, - இங்கே ஈங்கிஷை.

௰௪. ஆனால் நீர் துணை, - நீரே லோகத்தை - வென்றீர், ஆனபடியாலே - பொறுமையுடன் உம்மாலே - நானும் லோ கத்தை - வெல்ல நீர் துணை.

௰௫. என் கிரீடமே, - சுவாமி, என்னிலே - உமக்குப் புகழ்ச்சியாக - யாவுஞ் சீர்படுவதாக; - ஆமேன், இயேசு வே, - என் கிரீடமே.

*Adam Drese*, † 1718.

௱௭. Jesus Christus, Gottes Lamm. (106.)



இயேசு கிறிஸ்து என்கிற - ஆட்டுக்குட்டி நம்மை மீட்டார், - சிலுவையில் நம்முட - பாவத்தின் கடனைத் தீர்த்தார், - மனஸ் தாபத்தால் தள்ளாடும் - நெஞ்சு கிறிஸ்தின் சாவால் ஆறும்.

௨. நாம் பகைஞராகச்சே - கிறிஸ்து நமக்காய் மரித்தார்; - இத்தால் தமதன்பையே - தம்பிரான் விளங்குவித்தார், - கிறிஸ்தால் நீதியாக்கப் பட்டோர் - என்றென்றைக்குஞ் சாப மற்றோர்.

௩. நாம் பகைஞராம் அப்போ - சுவாமி அவர் சாவுக் காக - தயவானால், இப்போவோ - எத்தனை அதிகமாக - நாம் சீர்பட்டபின் அப்பாலே - வாழ்வோம், அவர் சீவனாலே.

௪. நாம் அவருக்குள்ளேயும் - அவர் நமக்குள்ளுமாமே, - அவராலே முற்றிலும் - பாவத்தீங்கழிவதாமே, - வெகு மேன்மையை அடைந்தோம், - தேவமைந்தராய் அமைந் தோம்.

௫. ஆ, பிதாவே, உமக்கு - தோத்திரங் களந் துதியும், - இன்னம் பாவமானது - கண்டால் துயரம் அளியும்; - உமதாவியால் நன்ருக - யாவுஞ் சுத்தமாவதாக.

*J. J. Breithaupt*, † 1732.



# தேவபராமரிப்பின் பேரிலே பாடுகிற பாட்டுகள்.

௱௬. Befiehl du deine Wege. (109.)



உன் நெஞ்சிலே உண்டான - விசாரங்களை நீ - கர்த்தாவின் உண்மையான - கரத்துக்கொப்புவி. - விண் மண்ணை ஆண்டிருக்கும் - நரதயாபரர் - உன் காரியங்களுக்கும் - வழி யுண்டாக்குவர்.

௨. செயமடைந்து வாழ - கர்த்தாவைப் பிள்ளைபோல் - நீ நம்பி, மனதார - பணிந்து பற்றிக்கொள். - உன் கவலைகளாலே - பயம் ரட்டிக்குது; - வேண்டாம், செபத்திலே - நீ வேண்டிக்கொண்டிரு.

௩. ஏழை அடியாருக்கு - பிதாவாந் தேவரீர் - இன்னின்னதெங்களுக்கு - ஆம் என்று அறிவீர். - நீர் எதை நல்லதாக - கண்டீரோ, அதை நீர் - ஆம்போது பலமாக - வர விடுகிறீர்.

௪. பல வழி வகையும் - உம்மாலே ஏற்படும், - நீர் செய்வது இசையும், - நீர் சொன்னது வரும். - நீர் வாக்குத்தத்தம் பண்ணி, - மொழிந்தது எல்லாம் - உம்மால் தடையுமன்றி - நற்காலத்தில் உண்டாம்.

ரு. பேய்க் கூட்டம் ஏகமாக - மா வற்மத்துடனே - எதிர்த்தும், அதுக்காக - கர்த்தர் பின்வாங்காரே. - ஏதேது அவராலே - நிர்ணைக்கப்பட்டதோ, - அதற்கு யாதொன்றாலே - மாறுட்டம் வருமோ.

சு. இக்கட்டுகளிலாலே - கலங்கிறேனே, நீ - திடன்கொள், கர்த்தராலே - இக்கட்டின் ராத்திரி - சந்தோஷமாக மாறும், - சற்றே பொறுத்திரு; - நீ பூரிப்பாய்க் கொண்டாடும் - நாள் வரப் போகுது.

எ. உன் கவலைகளுக்கு - இன்றே விடைகொடு, - இனிவிசாரத்துக்கு - இடங் கொடாதிரு. - நீ ஆளுந் தேவனல்ல, - நீ பூச்சி என்றறி, - சருவத்துக்கும் வல்ல - கர்த்தர் அதிபதி.

அ. பராபரன் ஆளட்டும், - திவ்விய கை எல்லாம் - மா ஞானமாய் நடத்தும், - உன் பேரிலே உண்டாம் - மப்பான கவலைக்கு - தெய்வீக செயலாய் - தெளிவுண்டாம் அன்றைக்கு - நன்றாய் மகிழுவாய்.

க. மெய்தானே, சிலநாளும் - தேற்றாமல், உனது - இக்கட்டை ஒருக்காலும் - தாம் நீக்க மனது - இல்லாதோர்போல் ஒளிப்பார், - உன் அவதியிலே - ரட்சிக்கத் தாமதிப்பார்; - ஆனால் திகையாதே.

ய. நீ பத்தியை விடாமல் - பொறுத்திருக்கையில், - கர்த்தர் நீ நினையாமல் - இருக்கும் நேரத்தில் - உன் துக்கத்தை அகற்ற - வெளிச்சங் காண்பிப்பார்; - நீ நன்மைக்காகப் பட்ட - சலிப்பை நீக்குவார்.

யக. அந்தடவாய்ப் பலத்த - செயமும் பூரிப்பும் - ஆசீர்வதிக்கப்பட்ட - தெய்வீக தேற்றலும் - அடைந்து, இன்பமான - மனமகிழ்ச்சியாய் - அன்புள்ள மீட்பரான - கர்த்தாவைப் பாடுவாய்.

யஉ. கர்த்தாவே, எங்களுக்கு - எல்லா இக்கட்டிலும் - ரட்சிப்பளிப்பதுக்கு - நேரிட்டுக் கொண்டிரும். - ஆ, எங்களைத் திடத்தும்; - பரகதிக்குப் போம் - வழியிலும் நடத்தும், - அப்போ பிழைக்கிறோம்.

*P. Gerhardt*, † 1676.

## ளய. In allen meinen Thaten. (110.)



எல்லாங் கர்த்தாவின் கைக்கும் - தெய்வீக ஆளுகைக்கும் - நான் ஒப்புவிக்கிறேன்; - அவர் வழிகாட்டாமல், - அவர் செயந் தராமல் - போனால், வாய்க்காதென்றறிவேன்.

உ. நான் என்னதான் செய்தாலும், - நான கவலைப்பட்டாலும், - அத்தாலே ஆகுமோ. - என் செய்தியைத் தப்பற - விசாரிப்பாய் நடத்த - பிதா இருக்கிறாரல்லோ.

ங. எக்காரியத்திலேயும் - என் நன்மைக்கவர் செய்யும் - செயல் இருக்குதே; - ஆகையினாலே நிதம் - அவருடைய சித்தம் - நடந்தால் பாக்கியமாமே.

ச. எல்லா இரக்கத்தோடும் - இக்கட்டை நீக்கிப்போடும் - கர்த்தாவை நம்புவேன்; - நான் தேவபத்தியாக - நடந்தால், சுகமாக - இருப்பேன், கைவிடப்படேன்.

ரு. என் பாவங்களுடைய - கணக்கெல்லாம் மறைய - விண்ணப்பம் பண்ணினேன். - என் ரட்சகரினாலே - மன்னிப்புண்டாகையாலே - பிழைத்துக்கொண்டிருக்கிறேன்.

சு. படுக்க நான் போனாலும், - நான் வேலையைச் செய்தாலும், - அந்தரப் பாடுகள் - என் மேல் இறங்கினாலும், - நான் அவதிப்பட்டாலும், - கர்த்தாவின் சொல் என் ஆறுதல்.

எ. நான் நன்மையில் வளர - சுமை என் மேல் சுமர - வந்தால் வரட்டுமேன்; - என் மேலே வாற பாரம் - தெய்வீக உபகாரம் - என்றெண்ணிக்கொண்டு தாங்குவேன்.

அ. உயிருடன் வைத்தாலும், - இனி வைக்காவிட்டாலும், - நான் நல்லதே என்பேன். - என் பயணம் முடியும் - நாள் சுவாமிக்குத் தெரியும். - எப்போதும் ஆயத்தமாவேன்.

கூ. இதோ, என் ஆத்துமாவே, - நீ நம்பினோர் கர்த்தாவே, - பயப்படாதிரு. - நீ அவர் கைக்குள்ளாக - இரு, அப்போ நன்றாக - எல்லாம் முடிந்துபோகுது.

*P. Flemming*, † 1640.

## ௱௰௩. Wer nur den lieben Gott lässt walten. (113.)



கர்த்தரை நல்லபக்தியாலே - எப்போதும் நம்பும் நீதிமான் - எத்தீங்கிலேயும் அவராலே - அன்பாய்க் காப்பாற்றப்படுவான்; - உன்னதமான கர்த்தரை - சார்ந்தோருக்கவர் கன்மலை.

௨. அழுத்துங் கவலைகளாலே - பலன் ஏதாகிலும் உண்டோ, - நாம் நித்தஞ் சஞ்சலத்தினாலே - தவிப்பது உதவுமோ; - விசாரத்தாலே நமக்கு - இக்கட்டதிகரிக்குது.

௩. உன் காரியத்தை நலமாக - திருப்ப வல்லவருக்கு - நீ அதை ஒப்புவிப்பாயாக; - விசாரிப்பார், அமர்ந்திரு. - மாதிட்டமாய்த் தயாபரர் - உன தாழ்ச்சியை அறிந்தவர்.

௪. சந்தோஷிப்பிக்கிறதற்கான - நாள் ஏதென்றவர் அறிவார்; - அநேகம் நற்குணங்கள் காண - அந்தந்தவேளை தண்டிப்பார்; - அசுப்பிலே திரும்பவும் - தேவன்பு பூரிப்பைத் தரும்.

௫. நீ கர்த்தரால் கைவிடப்பட்டோன் - என்றுபத்தில் நினையாதே; - எப்போதும் பாடும் நோவுமற்றோன் - பிரியனென்றும் எண்ணாதே. - அநேக காரியத்துக்கு - பின்மாறுதல் உண்டாகுது.

௬. கதியுள்ளோனை ஏழையாக்கி, - மகா எளியவனையோ - திரவிய சம்பன்னனாக்கி - உயர்த்த சுவாமிக்கரிதோ; - தாழ்வாக்குவார், உயர்த்துவார், - அடிக்கிறார், அணைக்கிறார்.

௭. மன்றாடி, பாடி, கிறிஸ்தோனாக - நடந்துகொண்டுன் வேலையை - நீ உண்மையோடே செய்வாயாக, - அப்போ தேவாசீர்வாதத்தை - திரும்பக் காண்பாய்; நீதிமான் - கர்த்தரால் கைவிடப்படான்.

*Georg Neumark*, **† 1681.**



# தேவவசனத்தின்பேரிலே பாடுகிற பாட்டுகள்.

## ௱௰௬. Ach bleib bei uns, Herr Jesu Christ. (116.)



௧, இங்கே எங்களுடனே - இரும், அன்புள்ள இயேசுவே, - மெய் வேதத்தின் விளக்கை நீர் - பேராமல் வைக்கக் கடவீர்.

௨. இக்கடைசித்துன்னாளிலே - இங்கும்முடைய வார்த்தையே - தன் முத்திரைகளோடேயும் - தரிக்கக் கட்டளையிடும்.

*Nic. Selnecker*, † 1592.

## ௱௰௭. Erhalt uns, Herr, bei deinem Wort. (117.)

முந்தின இராகத்தின்படி.

௧, கிறிஸ்துக்கெதிராளியின் - வினையைப் பார்த்து, வேதத்தின - வெளிச்சம் எங்களுடனே - தரிக்கப்பண்ணும், கர்த்தரே.

௨. எழும்பும், தேவமைந்தனே, - ராசாதிராசா, இயேசுவே; - புகழ்ச்சி உமக்கென்றைக்கும் - வர, சபையை ரட்சியும்.

௩. தேவாவி, தொண்டான்களையும் - ஆடுகளாக்கியருளும்; - தன்னாளில் எங்கள் நெஞ்சிலே - இரும், தேற்றரவாளனே.

௪. திரியேகரே, இக்கட்டுக்கு - கீழாஞ்சபையைக் கடாட்சித்து, - திடனைக் கட்டளையிடும், - இக்கட்டை நீக்கியருளும்.

௫. பகைஞர் யோசனையையே - அவத்தமாக்கும், கர்த்தரே. - படுகுழியை வெட்டினோர் - குழியில் விழக்கடவோர்.

௬. அப்போதவர்கள் திகிலாய் - விழித்து, வெட்கப்பட்டோராய் - சபையைக் காக்கிற நீரே - கர்த்தாவென்றறிவார்களே.

1—3. *D. M. Luther*, † 1546.

## ௱௰௮. Herr Jesu Christ, dich zu uns wend. (118.)



ஆ, இயேசுவே, நீர் எங்களை - அன்பாய்ச் சேர்ந்துமதாவியை - அருள் அனுக்கிரகத்தையும் - தந்தெங்கள் மேய்ப்பராயிரும்.

௨. பரத்தில் நாங்கள், சுவாமியே, - நீர் சுத்தசுத்தசுத்தரே - என்றோதி, உம்மை என்றைக்கும் - களிப்பாய்ப் பார்க்குமளவும்,

௩. வாய் உம்மைப் போற்றி, மனது - தேவன்பை நன்றாய் யோசித்து, - உணர்வும் விசுவாசமும் - பலக்கக் கட்டளையிடும்.

௪. ஒன்றாக ஆண்டிருக்கிற - திரியேக தெய்வமாகிய பிதா குமாரன் ஆவிக்கும் - இஸ்தோத்திரம் உண்டாகவும்.

*Wilhelm* II. *Herzog zu Sachsen Weimar*, † 1662.

## ௱௨௰. Der Herr ist mein getreuer Hirt. (120.)



என்மேய்ப்பர் கர்த்தரானவர், - நன்றாகக் காத்து வாறார்; - அனைத்தையும் என் ரட்சகர் - குறைவில்லாமல் தாறார். - எல்லாத்திலும் ருசிகர - தெய்வீக வார்த்தையினுட - நல் மேய்ச்சல் எனக்குண்டு.

௨. சீவாற்றுட கால்வாய்களை - எனக்கு அவர் காட்டி, - என் ஆத்துமத்தின் தாகத்தை - அத்தால் நன்றாக ஆற்றி, - தாம் இயேசு என்னப்பட்டதில் - அடியானை நற்பாதையில் - நேரே நடத்தி வாறார்.

௩. ஓர்வேளை சோதியன்றியே - நான் மரணக் செடியின் - இருண்ட பள்ளத்தாக்கிலே - நடந்தும், அவதியின் - பொல்

லாப்புக்குப் பயப்படேன்; - நீர் நீட்டுங் கோலைப் பற்று வேன், - அது வழியைக் காட்டும்.

ச. அடியேனுக்கோர் பந்தியை - பகைஞர்க்கெதிராக - வைத்தெண்ணெய்யால் என் சிரசை - மகாகடாட்சமாக - நீர் அபிஷேகஞ் செய்கிறீர்; - அடியேனை நீர் மறவீர், - என்பாத் திரம் நிரம்பும்.

ரு. என் சீவனுள்ளமட்டுக்கும் - தேவன்பை நான் உண ரும் - படிக்கு, என்னை நன்மையும் - கடாட்சமுந் தொடரும். - கர்த்தாவின் வீட்டில் இங்கேயும் - பிற்பாடு அங்கே என்றைக் கும் - நிலைத்துக்கொண்டிருப்பேன். *W. Musculus*, † 1563.

## ௱உஉ. Wir Menschen sind zu dem, o Gott. (122.)



கர்த்தாவே, நாங்கள் எங்களில் - மெஞ்ஞானத்துக்காகா தோர், - நீர் அறிவைத் தரீராகில், - அடியார் அறியாதோர்; - நீர் அருளின வேதமும் - அத்தோடே உமதாவியும் - வெளிச் சங் காட்ட வேணும்.

உ. நீர் இதுக்காகக் கிருபை - புரிந்தொத்தாசை பண்ணி, - முன் தீர்க்கதரிசிகளை - அனுப்பினதுமன்றி, - பிற்பாடு நேச மைந்தனை - சீர்கெட்ட ஆத்துமாக்களை - போதிப்பதற்குத் தந்தீர்.

ங. இக்கிருபைக்கிஸ்தோத்திரம், - இவர் சொற் கேட்போ மாக. - திவ்விய வார்த்தையைத் தினம் - அடியார் பத்தியாக - தியானம் பண்ணி யோசித்து, - கைக்கொள்வதற்கு உமது - நல்லாவியை அளியும்.

ச. சக்கந்தக்காரர் வாய்களை - அத்தால் அடக்குவியும்; - அவர்கள் வேலை எத்தனை - நிர்ப்பந்தமாய் முடியும். - ஆ, சுவாமி, உம்முடையசொல் - பலத்த குமுறலைப்போல் - மேல் வட்டமாவதாக.

ரு. அடியாரில் அதினுட - விதை நன்றாய்த் தரித்து, - ஒன் றேநூறாய்க் கனிதர - நீர் கிருபை அளித்து, - அடியார் அதை என்றைக்கும் - நன்றாளிலுந் துன்னாளிலும் - விடாப்படிக்குக் காரும்.

ரு. வழியிலே விதைத்ததை - பேய் கொண்டுபோம், இராது; - கற்பாறைப்பூமியில் விதை - முளைத்தும், வேர் ஊன்றாது; - முள் நடுவில் விழுந்ததோ - பயிராக வேண்டியது தப்போ - நெருக்கப்பட்டவியும்.

எ. பயிர் ஓங்கும் நல்நிலத்துக்கு - அடியார் நெஞ்சொப்பாக - இருப்பதற்கு, உமது - நல்வார்த்தையை நன்றாக - கேட்டேற்றுக்கொண்டு காக்கவும் - எல்லாப் பொறுமையோடேயும் - கனிகொடுப்போமாக.

அ. எப்போதும் பாவிகளுட - வழியை விட்டுவிட்டு, - உபத்திரவத்தில் உத்தம - கிறிஸ்தோர்களாய்த் தரித்து, - துரிச்சையின் முள்ளுக்களை - பிடுங்கி வந்து, சாத்தானை - செபத்தால் வெல்வோமாக.

௯. ஆ, உம்முடைய வார்த்தையை - நீர் சுத்தமானதாக - அடியாருக்குக் காத்ததை - எங்கள் வெளிச்சமாக - இருக்கப் பண்ணி, சாவிலும் - அத்தால் பலந திடனையும் - நற்புத்தியையுந் தாரும்.

௰. பிதாவே, எங்கும் உம்முட, - நல்வார்த்தை சேர்வதாக; - ஆ, இயேசுவே, நீர் காட்டிய - வழியே செல்வோமாக; - தேவாவி, எங்கள் உள்ளத்தில் - நீர் தங்கி, வார்த்தையால் அதில் - நற்சீரை உண்டுபண்ணும்.

D. Denicke, † 1680.

## ௱உ௩. Dies sind die heilgen zehn Gebot. (123.)



நாம்தமக்குப் பயப்பட - சீனைமலையின்மேல் கர்த்தா - கொடுத்தபத்துக்கற்பனை - ஏதென்றுகேட்டுச்சீரடை, - மனிதனே.

உ. உன் தேவனுங் கர்த்தர் நாமே, - வேறொன்றையும் பணியாதே; - நீ விக்கிரகவணக்கத்தை - வீண்பத்தி யாவையும் பகை, - மனிதனே.

௩. கர்த்தாவின் நாமத்தை வீணில் - வழங்காயாக, ஏனெனில் - வீணில் வழங்கும் யாவர்க்கும் - தபபாத ஆக்கினை வரும், - மனிதனே.

௪. நீ ஓய்வுநாளில்சகல - லௌகீக வேலையைவிட - நினைத் தந்நாளைமுழுதும் - நீ பரிசுத்தமாக்கவும், - மனிதனே.

௫. சுகத்துடன் உன் ஆயுசு - நீடித்திருக்கிறதற்கு, - தகப்பனையுந் தாயையும் - நீ எண்ணிச் சங்கை பண்ணவும், - மனிதனே.

௬. கொலைசெய்யாமல், உனக்கு - அடுத்தவனை நேசித்து, - எல்லார் ரட்சிப்பை ஆசையாய் - விரும்பித் தேடக்கடவாய், - மனிதனே.

௭. நீ விபசாரம்பண்ணாதே, - அசுத்த உலகத்திலே - உன் நெஞ்சும் வாக்கும் மார்க்கமும் - சுத்தாங்கமாயிருக்கவும், - மனிதனே.

௮. நீ களவு செய்யாமலும், - திருக்கும் அவநியாயமும் - பண்ணாமலும், கர்த்தாவுக்கு - பயந்து, உண்மையாயிரு, - மனிதனே.

௯. பொய்ச்சாட்சியைப் பிறருக்கு - விரோதமாய்ச் சொல்லாதிரு; - பொய்க்காரரானமனிதர் - பிசாசுடைய புத்திரர், - மனிதனே.

௰. அடுத்தோன் வீடு வஸ்துக்கள் - பெண்சாதி வீட்டாள் சீவன்கள் - உண்டே, அதில் ஒன்றாகிலும் - நீ இச்சியாதிருக்கவும், - மனிதனே.

௰௧. இக்கற்பனைகளாலே நீ, - நீ குற்றவாளி என்றறி; - கிறிஸ்துக்குள்ளாய்க் கிறிஸ்தோனைப்போல் - இந்நூல்படி நடந்துகொள், - மனிதனே.

௰௨. ஆ, இயேசு சுவாமி, தேவரீர் - இதற்கொத்தாசை பண்ணுவீர்; - அடியார் கிரியையெல்லாம் - மகா பிழை குறையுமாம்; - இரங்குமேன்.

*D. M. Luther*, † 1546.

## ௱௨௫. Wohl dem Menschen, der nicht wandelt. (125.)



பாதகரின் தீவினைக்கும் - பாவிகளின் பாதைக்கும் - துர்ச்சனரின் தோழமைக்கும் - மார்க்கத்துக்கும் மிகவும் - தூரமாகி, கர்த்தரை - தேடி, தன் இதயத்தை - அவருக்கொப்புக்கொடுத்தோன் - என்றும் பாக்கியம் பெருத்தோன்.

உ. ஆம், கர்த்தா அன்பாகத் தந்து - போதிவிக்கும் வார்த்தையை - வாஞ்சையாய் ஆராய்ந்து வந்து, - ராவும் பகலும் அதை - யோசித்து உட்கொள்பவன் - மிருதியும் பாக்கியன்; - அவன் ஆவி என்றென்றைக்கும் - அம்மன்னாவினால் பிழைக்கும்.

ந. அவன் ஆற்றுக்காலிடத்தில் - நடப்பட்டு, தன்னுட - நற்கனியைத் தருணத்தில் - தந்து புஷ்டியாகிற - நல்மரத்துக்கொத்தவன், - அவன் நல்ல யோக்கியன்; - அவன் செய்கை நிலைநிற்கும், - அது நன்மையாய்ப் பலிக்கும்.

ச. ஆனால் பாவமனிதர்கள் - காற்றில் ஓடிப்போம் பதர்; - நியாயத்தீர்ப்பிலே அவர்கள் - தள்ளப்பட்டுப்போறவர். - நீதியருட வழி - கர்த்தருக்குப் பிரிதி, - அது ரட்சிப்பாய் முடியும்; - துஷ்டர் மார்க்கமோ அழியும்.

*P. Gerhardt*, † 1676.

## ௱உ௯. Es woll uns Gott genädig sein. (126.)



புவியில் தேவவார்த்தையும் - எல்லா இடமுமாக - ரட்சிப்பின் சுவிசேஷமும் - பயிராகிறதற்காக - கர்த்தா இரங்கி, எங்களை - அன்பாய் ஆசீர்வதித்து, - வனாந்தரமாம் உலகை - திருத்தத் தீவரித்து, - குணம் அளிப்பாராக.

உ. கர்த்தாவே, பொய்மதங்களை - நீர் நியாயந்தீர்த்தழித்து, - நராருக்குமெஞ்ஞானத்தை - நற்சீர்வர அளித்து, - பொல்லாப்பை நீக்கி, உம்முட - நல்வசனத்தினாலே - சனத்தை நீர் மேய்த்தருள; - சனமும் பூரிப்பாலே, - கர்த்தாவே, உம்மைப்போற்ற.

௩. கர்த்தாவே, உம்மைச்சகல - சனங்களும்புகழ, - கர்த்தாவே, உமக்கேற்கிற - பலனைப் பூமி தர. - திரியேக கர்த்தர் எங்களை - ஆசீர்வதிப்பாராக, - எல்லார் திரளும் அவரை - தெய்வீக பயமாக - பணிவதாக, ஆமேன்.

*D. M. Luther*, † 1546.

## ௱௨௭. O Jesu Christe, wahres Licht. (127.)



மெய்ஒளிவான இயேசுவே, - இருளிலுள்ளோர்பேரிலே - இரங்கி, அவர்களுக்கும் - வெளிச்சங் கட்டளையிடும்.

௨. பொய்ப் போதகத்தால் ஆருக்கு - தப்பாயிருக்கும் நினைவு - உண்டோ, அவர்கள் நெஞ்சிலே - மெய் வரப்பண்ணும், இயேசுவே.

௩. காணமல்போன பாவியை - அன்பாய் நீர் தேடி, அவனை - குணப்படுத்தியருளும், - கெடாப்படிக்கு ரட்சியும்.

௪. செவியைச் செவிடருக்கும் - ஊமையருக்கு வாயையும் - நீர் தாரும்; உம்மைத் தான் அப்போ - பின்செல்லுவார்கள் அல்லவோ.

௫. பிரிந்துபோனயாவரை - பார்த்தவர்கள் மயக்கத்தை - தெளியப் பண்ணியருளும், - அந்தகருக்குக் கண் கொடும்.

௬. அடியாரோடவர்களும் - அவ்வன்புக்காக என்றைக்கும் - கர்த்தாவாம் உம்மையே அப்போ - புகழுவார்கள் அல்லவோ.

*J. Heermann*, † 1647.

## ௱௨௯. Liebster Jesu, wir sind hier. (129.)



இயேசு சுவாமி, உமது - வசனத்தின் பாலைத் தேட - வந்தோம், எங்கள்மனது - மண்ணைவிட்டு உம்மைச்சேர, - எங்கள் சிந்தையை நீர் முற்றும் - தேவசொல்லுக்குள்படுத்தும்.

௨. உமதாவி எங்களில் - அந்தகாரத்தை அறுத்து, - ஒளிவைவீசாராகில், - புத்தி கண்ணெல்லாம் இருட்டு. - சீர் உண்டாகும் நற்சிந்திப்பு - உம்முடைய நடப்பிப்பு.

௩. மகிமையின் சோதியே, - சுவாமி, நாங்கள்மாயமற - பாடிக்கெஞ்சி, நெஞ்சிலே - வசனத்தைக் கேட்டுணர, - வாய்செவி மனமுங்கண்ணும் - திறவுண்டுபோகப் பண்ணும்.

*Tobias Clausnitzer*, † 1684.



# ஞானஸ்நானத்தின் பேரில் பாடுகிற பாட்டுகள்.

**௱௩௰.** O Gott, da ich gar keinen Rath. (130.)



ஆ, சுவாமி, என் பிறப்பினால் - உமக்குத் தூரமான - நான் மீண்டும் ஞானஸ்நானத்தால் - உமக்குப்பிள்ளையான - சீர்மாறுதல்மாபாக்கியம்; - ஆ, உமக்கென்றுந் தோத்திரம், - பிதா குமாரன் ஆவி.

௨. நீர் என்னைத்தள்ளிப்போடவும் - தண்டிக்கவும் என்பாவம் - என்னை நேரஸ்தனாக்கியும், - நீர் என்மேல்பரதாபம் - வைத்தென்னை உம்மண்டையிலே - அன்பாகச் சேர்த்துக் கொண்டீரே; - ஆ, தயவுள்ளசுவாமி.

௩. இத்தாலே என் பிதா நீரே, - நான் உம்முடையபிள்ளை, - பலட்சயத்தை என்னிலே - நீர் கண்டும், மோசமில்லை; - நான் பத்தியாய் என்தாழ்மையில் - மன்னிப்புக் கேட்டுக்கொள்ளுகில், - நீர் என் செபத்தைக் கேட்பீர்.

௪. திரியேகரான உம்மையே - நான் முழு பத்தியாக - பணிந்து, உமக்கேற்கவே - நடப்பேன்என்றதாக - இஸ்நானத்

சாலே அடியேன் - உடன்படிக்கைபண்ணினேன், - இதை
நினைப்பேனாக.
ரு. பிசாசை நான் சமூலமாய் - என் மனதால் வெறுத்
தேன் - என்றப்போதுமக்குமுன்பாய் - நான் வார்த்தையைக்
கொடுத்தேன். - ஆ, அதின் தந்திரங்களை - நான் வெல்ல என்
இதயத்தை - நான் உமக்கொப்புவிப்பேன்.
சா. பொல்லாத மாமிசத்துட - துரிச்சைக்கும் நான் சாக -
கடன் என்மேல் இருக்கிற - படியால், நான்நன்றாக - போ
ராடி, சிலுவையிலே - அதை அறைகிறதற்கே - நீர் பலத்தை
அளியும்.
எ. பிதா குமாரன் ஆவியே, - நான் உம்மைப் பற்றிவந்து, -
நான் அன்று தந்த வார்த்தைக்கே - இசைவாய்த் தான்
நடந்து, - முடியப் பாவத்துக்கென்னில் - இடங்கொடா
மல், மோட்சத்தில் - உம்மண்டைசேர்வேனாக.

*Nach J. Bornschürer*, † 1677.

௱௩௨. Christ, unser Herr, zum Jordan kam. (132.)



தெய்வீக நீதி யாவுக்கும் - சரிசெலுத்தவந்த - இரட்சகர்
இஸ்நானமும் - யோர்தானில் பெற்றனந்த - உயிர் உண்டாக்
குஞ் சாவுக்கே - அமிழ்ந்தார், நமக்காக. - முழுக்குட பலனி
லே - நமக்குப் பங்குண்டாக - இஸ்நானத்தை அர்ச்சித்தார்.
உ. இப்போதும் ஞானஸ்நானத்தை - குறித்துக் கர்த்தர் தா
மே - கொடுத்த தேவசாட்சியை - நாம் நம்ப நியாயமாமே. -
இது தெய்வீகவசனம் - உண்டான தண்ணீர் என்றும், - தே
வாவி என்கிற வரம் - அத்தோடேற்றுண்குதென்றும், - கர்த்
தாவின் வார்த்தை சொல்லும்.
ங. அந்நாளிலும் நடந்ததை - நினைத்துக்கொள்வோமாக; -
யோர்தானில் நிற்கும் இயேசுவை - பிதா மகா அன்பாக - கண்

ஞேக்கி: இவர் நமது - பிரிய மைந்தனுண - சுதன்என்றூர்; அந்தடவு - நாமும்இவர்க்குள்ளான - ஸ்நானத்தால்பிரியர்.

ச. புறருபமாய்த் தேவாவியார் - நதியில் இயேசுநிற்க, - வந்திவர்மேல் இறங்கிஞர். - மூன்றூளும்ஒருமிக்க - நாமும் இஸ்நானம்பெறுகில் - சமீபமாஞேமென்றும், - இத்தாலே நமதுள்ளத்தில் - குணந்தாறூர்களென்றும், - நாம் நன்றுய் நம்பத்தானே.

ரு. இரட்சகர் உரைத்தது: - போய், நரசீவனுன - எல்லாருக்கும் நம்மண்டைக்கு - திரும்புவதறகான - நற்போதகஞ் சொல்லுங்களே, - மெய்விசுவாசமாக - இஸ்நானம் பெற்றோர் மீட்பிலே - உள்ளாகி, என்றஞ்சாக - கூடாமல் பிழைப்பார்கள்.

சா. ரட்சிப்பின் தேவதயவை - ஆர் விசுவாசியாமல் - போறுஞே, அவன் மோட்சத்தை - அடையவே மாட்டாமல், - கெட்டாக்கினைக்குள்ளாகிறுன், - தன்சுயநீதியாலே - வீணுக அவன் உப்பினுன், - ஆகா மரத்தினுலே - கனிஏதென்றுரைத்தார்.

எ. தண்ணீரைமாத்திரங் கண்ணுல் - கண்டாலும், விசுவாசம் - அத்தோடே கிறிஸ்தின் ரததத்தால் - உண்டான பாவநாசம் - இருக்குதென்றறியுது; - ஆம், ஞானஸ்நானத்தாலே - ரட்சிப்பு யாவும் நமக்கு - பலிக்க, ஆவியாலே - நாம் புதுச் சிஷ்டியாஞேம்.

*D. M. Luther*, † 1546.

**சாகூகூ.** Du Volk, das du getaufet bist. (133.)



நீ ஞானஸ்நானம் பெற்றதால் - நீ கிறிஸ்துவுக்குள்ளான - ஆளாணுய், உனக்கதினுல் - மா அலங்காரமான - பேர் வந்தது; ஆ, உனக்கு - நீ ஞானஸ்நானம்பெற்றது - மா பாக்கியம் என்றெண்ணு.

உ. உன்னதமான கர்த்தரை - விலகிப்போறதான - மகா பொல்லாத சுபாவத்தை - நீ உன்னைப்பெற்றதான - உன் தா

யின் கர்ப்பத்தில்தானே - உற்பத்தியான நாளிலே - அடைந்தது மெய்யாமே.

ங. கர்த்தாவின் சாயல் பாவத்தால் - இல்லாதேபோனதாலே - உன் சுபாவம்யாவும் பேயினால் - பாவ விஷத்தினாலே - கெடுத்துப்போடப்பட்டது, - பிறந்தநாளில் சுவாமிக்கு - அத்தால் நீ பிள்ளை அல்ல.

ச. ஆகையினாலே சாபமும் - கர்த்தாவின்கோபஞ்சாவும் - உன்மேல் இருந்ததிதுவும் - அல்லாமல் உன்னில்யாவும் - பிசாசின் வசமானதால் - நீ என்றும் அதின்கட்டினால் - கட்டுண்க மோசமாச்சு.

ரு. இப்போதும் ஞானஸ்நானத்தில் - கர்த்தாவின் தயவாலே - இக்கேடெல்லாம் மனிதரில் - முறியும்; ஆதாமாலே - கெடுக்கப்பட்டதுக்கெல்லாம் - திரும்பவும் நற்சீருண்டாம்; - ஆ, சுவாமிக்குப் புகழ்ச்சி.

சு. நாம்ஞானஸ்நானம்பெறுகில் - பாவ அழுக்கு நீங்கும், - நமக்குப் பேயின் காவலில் - இருந்த கேடுந் தீங்கும் - அறுந்துபோம்; கர்த்தாவுட - பிரிய மைந்தராகிற - கதி நமக்குண்டாகும்.

எ. ஆம், அது மறுசனன - முழுக்கு, அத்தால் சாவும் - தெய்வீககோபம் நரக - கெடியுங் கேடும்யாவும் - இல்லாதே போறதன்றியே, - கர்த்தாவின் ஆசீர்வாதமே - நமக்கத்தால் உண்டாகும்.

அ. இரட்சகரின் நீதியை - நாம் ஞானஸ்நானத்தாலே - தரிக்கிறோம்; நாம் செய்ததை - தமது மீட்பினாலே - அவர் குலைத்து, தமது - இரத்தத்தாலே நமக்கு - சுத்திகரிப்பைத் தாரார்.

கூ. ஆ, ஞானஸ்நானம் எத்தனை - ஆரோக்கியங் கொடுக்கும்; - இத்தண்ணீர் ஆத்துமங்களை - எல்லா நிர்ப்பந்தத்துக்கும் - விலக்கும்; அந்தப்பலமோ - கர்த்தாவின் வார்த்தையால் அல்லோ - அதுக்குண்டாயிருக்கும்.

ய. அத்தோடேதேவஆவியார் - மிகுந்த தயவாக - நமது மேல் இறங்கிறார்; - மா ஆறுதலுமாக - திரியேகரான உன்னத - கர்த்தாவின்நாமம் நம்முட - இஸ்நானத்தைத் திடத்தும்.

யக. மனிதனே, அத்தால் கர்த்தா - மா உபகாரமாக - உன்மேலே வைத்திருக்கிற - பெரிய அன்புக்காக - நீ அவரை இஸ்தோத்திரி, - அத்தயவுகளை இனி - மா எண்ணமாக எண்ணு.

௰௨. இஸ்நானத்தாலே கிறிஸ்துவில் - புதிய சிஷ்டியான - நீ நன்றாய்க் கிறிஸ்துமார்க்கத்தில் - வளர்ந்து, சுத்தமான - நடக்கையில் நிலைத்திரு, - அப்போதுன் கர்த்தர் உனக்கு - கிரீடத்தைக் கொடுப்பார்.

*P. Gerhardt*, † 1676.



## பரிசுத்த இராப்போசனத்தின்பேரில் பாடுகிற பாட்டுகள்.

௱௩௪. Schmücke dich, o liebe Seele. (134.)



ஆத்துமாவே, உன்னைச் சோடி, - அந்தகாரத்தை விட்டோடி, - ஒளிவண்டை வந்து சேரு, - மகிமை அடைந்து தேறு; - உனக்கின்று கடாட்சமுள்ள - கர்த்தர் தமது அன்புள்ள - பந்தியில் புசிக்கத் தாரூர், - உன்னண்டைக்குத் தங்க வாரூர்.

௨. பொக்கிஷங்களை அளிக்கும் - தயவாக வந்து நிற்கும் - உன் பத்தாவுக்காசையோடு - சீக்கிரம் எதிர் கொண்டோடு, - நெஞ்சின் வாசலைத் திறந்து, - நேசரே, என் கிட்ட வந்து - வாசம் பண்ணுமென்று சொல்லு, - அவரைப் பணிந்து கொள்ளு.

௩. நற்சரக்கைத் தேடி விற்கும் - போதனேகமாய்ப் பிடிக்கும்; - நீரோ, சுவாமி, ஈட்டைப் பாரீர், - இலவசமாகத் தாறீர்; - லோகமெங்கும் உள்ள நல்ல - பொக்கிஷங்கள் ஈடுமல்ல, - இந்த மன்னு, இந்த ரத்தம், - யாவிலும் உயர்ந்த தத்தம்.

௪. ஆ, இப்போசனத்தின்மேலே - வாஞ்சை உண்டிம்மா ணுவேலே, - நீர் சஞ்சீவியாய்க் கொடுக்கும் - ஊணின்மேல் பசியிருக்கும். - இந்தச் சீவ பானத்தாலே - தாகந் தீர்க்க ஆசையாலே - ஏங்கிறேன்; அத்தால் நன்முக - நான் உம்மோடே ஐக்கமாக.

௫. நான் சந்தோஷத்தால் நிறைந்தேன், - நான் நடுக்கமும் அடைந்தேன், - ரண்டும் இப்போதென்னில் உண்டு; - இந்தப் பரம விருந்து - எந்த அற்புதங்களுக்கும் - மேன்மையானதாயிருக்கும் - உமதன்பு மெத்த ஆழம், - சத்தியும் மகா விஸ்தாரம்.

௬. லட்சம்பேருக்குக் கொடுக்கும் - இந்த ஊண் மாளாதிருக்கும், - ரசத்தோடுங் கிறிஸ்தின் ரத்தம் - தானே ஈயப்பட்ட தத்தம் - என்று சுபாவக் கண் காணாது, - நர புத்திக்குந் தோன்றாது, - தேவ ஆவியால் தெளியும் - கண்ணுக்கே அது தெரியும்.

௭. இயேசுவே, மகிழ்ச்சிக்கான - அன்புங் கிருபையுமான - பகலோனே, வான ராசா, - உண்மையான விசுவாச - பத்தியாய், என் ஆவி தேற, - இந்தப் பந்திக்கு நான் சேர - கடாட்சங் கூரும் என்றதாக - கேட்கிறேன், சாஷ்டாங்கமாக.

௮. வான மகிமையை விட்டு, - சிலுவையிலே மரித்து, - உம்முடைய ரத்தஞ் சிந்த - உம்மில் தீயைப் போல் எரிந்த - அன்பினாலே நான் நிறைய - எனக்கு நீர் உம்முடைய - மாமிசத்தை உண்கத் தாறீர், - ரத்தமும் இறைக்க வாறீர்.

௯. சீவனின் மெய்யப்பமான - இயேசுவே, ரட்சிப்புக்கான - இந்தப் பந்திக்கு வீணாக - அல்லதெனக்குக் கேடாக - நான் சேராமல், இதினாலே - உம்முடைய நேசத்தாலே - ரம்மி வானோரோடினியும் - சாப்பிட எனக்களியும்.

*J. Franck*, † 1677.

## ௱௯௮. O Jesu, du mein Bräutigam. (138.)



ரீன் பாவத்தின் நிவிர்த்தியை - உண்டாக்க, அன்பாய்ச் சிவனை - கொடுத்துச் சிலுவையிலே - மரித்த தேவ மைந்தனே,

௨. அநேக பாவஞ் செய்தோனாய் - மா எழையும் நசலுமாய் - ராப்போசனத்துக்கு வரும் - அடியேனைத் தள்ளாதேயும்.

௩. நீர் பாவிக்கு இரட்சகர், - நீர் யாவையுமுடையவர், - நீர் பரிகாரி, நீர் எல்லாம், - குணந் தர உம்மாலேயாம்.

௪. அதிப்படியிருக்கச்சே - குணம் அளியும், இயேசுவே, - அசுத்தமான யாவையும் - நிவிர்த்தியாக்கியருளும்.

௫. இருண்ட நெஞ்சில் ஒளிவும் - மெய்யான விசுவாசமும் - கொடுத்தென் மாமிசத்தையே - அடங்கப்பண்ணும், கர்த்தரே.

௬. நான் உம்மில், வானத்தப்பமே, - மகா வணக்கத்துடனே - புசித்து, உம்மை என்றைக்கும் - நினைத்துக்கொண்டிருக்கவும்.

௭. பொல்லாத துர்க்குணங்களை - அவித்து, என் இதயத்தை - அன்பாலும் பத்தியாலேயும் - நிரப்பிச் சோடித்தருளும்.

௮. நல் நாற்றை என்னிலே நடும், - ஆகாததைப் பேர்த்தருளும்; - என் நெஞ்சில் வந்து, என்னிலே - எப்போதும் தங்கும், இயேசுவே.

௯. நான் இவ்விருந்தின் நன்மையால் - சுத்தாங்கனாய்ப் பிதாவினால் - மன்னிப்பைக் கிருபையையும் - அடையக் கட்டளையிடும்.

௰. ஆ, இயேசுவே, நான் பண்ணின - நல் நிர்ணயம் பலப்பட - பிசாசை ஓட்டியருளும், - தேவாவி என்னை ஆளவும்.

௰௧. ஆ, உமக்கென்னை யாவிலும் - நீர் எற்றுக்கொண்டருளும்; - தினமும் எனக்கும்மிலே - சுகம் அளியும், கர்த்தரே.

௰௨. நான் சாகும்போதென் ஆவியை - மோட்சானந்தத்தில் உம்மண்டை - சேர்த்தென்னை உம்மால் என்றைக்கும் - திருப்தியாக்கியருளும்.

*J. Heermann*, † 1647.

**௱௩௯. Als Jesus Christus in der Nacht. (139.)**



நல்மேய்ப்பர் ஆடுகளுக்காய் - மரிக்க வந்து, சாவில் - கிடந்த
நம்மைத் தயவாய் - நினைக்கும் அன்றிராவில்,

௨. அன்புள்ள கையில் அப்பத்தை - எடுத்திஸ்தோத்தி
ரித்து, - அதற்குப்பிறகு அதை - சீஷாக்களுக்குப் பிட்டு,

௩. வாங்கிப் புசியுங்கள், இது - உங்களுக்காய்ப்படைத்து -
கொடுக்கப்பட்ட எனது - சரீரம் என்றுரைத்து,

௪. பிற்பாடு பாத்திரத்தையும் - எடுத்துத் தந்தன்பாக -
உரைத்தது: அனைவரும் - இதில் குடிப்பீராக,

௫. இதாக்கினைக்குள்ளாகிற - அனைவர் ரட்சிப்புக்கும் -
சிந்தப்படுவதாகிய - என் ரத்தமாயிருக்கும்.

௬. புது உடன்படிக்கைக்கு, - இதோ, என் சொந்த ரத்
தம் - இறைக்கப்பட்டுப் போகுது, - வேறே பலி அவத்தம்.

௭. முன்னுள்பலி எல்லாம் நிழல், - நானே கடனைத்தீர்ப்பர்;-
என் ரத்தத்தால் ரட்சிக்குதல் - உண்டாகும், நானே மீட்பர்.

௮. இதுகள் அக்கிரமங்களை - குலைக்கிற ஏற்பாடே, - இதற்
குச் சேர்ந்தென் பட்சத்தை - நினையுங்கள் என்றுரே.

௯. ஆ, சுவாமி, உமக்கென்றைக்கும் - துதி உண்டாவதாக, -
இப்பந்தியால் அடியானும் - பிழைத்துக்கொள்வேனாக.

*J. Heermann*, † 1647.



# மெய்யான கிறிஸ்துமார்க்கத்தின் பேரிலே பாடுகிற பாட்டுகள்.

**௱௪௧.** Jesus selbst, mein Licht, mein Leben. (141.)



என்னிடத்திலே படிக்க - வாருங்களென்றென்னுட - சீவனுயிருக்கிற - இயேசுசொல்லிப் போதிவிக்க - வந்திருக்கும் போதகர் - ரட்சகருமானவர்.

௨. ஆ, என்சென்ம பாவத்தாலே - என்னுடைய மனது - கெட்டுப்போயிருக்குது, - யாவும்என்னில் அதினாலே - மாறுபாடாம், என்னிலே - மாமிசக்குணம் உண்டே.

௩. இயேசுவே, என்னில் உண்டான - பொய், அநீதம், பெருமை, - குரோதம்முதலானதை - வேரறுக்கிறதுக்கான - பலத்தைத் தந்தருளும், - சீர் அளித்து ரட்சியும்.

௪. தேவரீருட தயையை, - பட்சம், நீதி, சற்குணம், - பரிசுத்தம், சத்தியம், - மா இரக்கம், பொறுமையை - என் இருதயத்திலே - நட்டு வையும், இயேசுவே.

௫. தேவரீரை நான்பின்சென்று - உமக்குக் கனம்வர - நான் நடந்து, உம்முட - சீஷனாக உமக்கென்று - என்னைத் தந்து, மாய்கைக்கும் - லோகத்துக்குஞ் சாகவும்.

௬. என்னை உமதாவியாலே - நீர்நடத்தி, உமது - நல்வரத்தை எனக்கு - நித்தந்தந்து, அதினாலே - சிந்தைசெய்கையாவையும் - நீர் ஆசீர்வதித்திரும்.

௭. ஆ, என்முடிவுமட்டாக - இந்த அன்பைக் காண்பியும், - பிறகு நான்என்றைக்கும் - உம்மை மனத்தாழ்மையாக - போற்றவுந் துதிக்கவும் - பாக்கியத்தை அருளும்.

*J. Olearius*, † 1684.

ராசகா. Ich danke dir, mein Gott. (146.)



கர்த்தாவே, உமக்கு - நான் கிழ்ப்படிந்தோனாக - நடக்குஞ்சிந்தையை - நீர்தந்த அன்புக்காக - உமக்கிஸ்தோத்திரம்; - இப்போதும் நித்தமும் - நீர் அதுக்கெனக்கு - ஒத்தாசையாயிரும்.

௨. நீர் யாவுங் காண்கிறீர், - இதை நினைப்பேனாக; - உமக்கேற்காததை - நான்செய்தால், அதுக்காக - தண்டிப்பீர், ஆகையால் - எந்நேரக்கால்மும் - நான் தேவரீருக்கு - பயந்திருக்கவும்.

௩. என்செய்கை நியாயமோ, - நான் லோகமார்க்கமாக - நடந்தால் நல்லதோ; - உமக்கு மறைவாக - நடக்குங்காரியம் - உண்டோஎன்றென்னையே - நான் கேட்கும் புத்தியை - அளியும், கர்த்தரே.

௪. அடியேனைநீரே - நடத்திக்கொள்வீராக, - என் மனதின்படி - நான் போனால், மோசமாக - முடியும்; ஆனால்நீர் - என் வேலையிலெல்லாம் - என்னை நடத்தினால், - மாபாக்கியம் உண்டாம்.

௫. நான்சகலத்தையும் - வெறுத்து, உம்மைப்பற்றி - என் மாமிசத்துட - குணத்தையே அகற்றி, - நான் உமதைக்கத்தை - எப்போதுந் தேடவும் - என்முழுமனதை - நீர் உம்மண்டைக்கிழும்.

௬. ஆ, என்னில் உமது - கிருபையே வீணாக - இராப்படிக்கு, நான் - உம்மில்நிலைப்பேனாக; - அப்போதும்மோடே தான் - மோட்சானந்தத்திலும் - இருக்கும் பாக்கியம் - எனக்ககப்படும்.

*J. Olearius*, † 1684.

௱௪௯. Kommt und lasst euch Jesum lehren. (149.)



மறுசென்மமாய்ச்சென்மித்து - தேவ அபிஷேகத்தை - பெற்று,
நற்குணந்தரித்து, - ஒய்வில்லாமல் இயேசுவை - அண்டிக்
கொண்டு, உத்தம - சீருமாய் நடக்கிற - கிறிஸ்தோர்ஆர் என்று
சையாக - கிறிஸ்தின் வாயால் கேட்போமாக.

௨. சுயநன்றைஅறியாமல். - பெற்றது சர்த்தாவுட - ஈவென்
றுப்பசமில்லாமல் - சின்னவர்களாகிய - மனது தரித்திரர் -
தங்கள் தாழ்வில் பாக்கியர்; - இந்த ஏழைகள்அனைவர் - வான
ராச்சியம் அடைவர்.

௩. தேவ மனஸ்தாபமாக - தங்களில் பிறரிலும் - உள்ள பா
வங்களுக்காக - வெட்கி, மனதாரவும் - துயரப்படுபவர் - அழு
வாரும் பாக்கியர்; - தேற்றப்பட்டு வாழுவார்கள், - இங்கும்
அங்கும் பூரிப்பார்கள்.

௪. தீமைக்குச் சரிக்கட்டாமல், - யாவர்க்கும் நல்மன
தாய் - ஒற்றிப்போய், இடும்பில்லாமல் - யாவையும் பொறுத்
தன்பாய் - தாங்கிக்கொள்ளுஞ் சற்குணர் - சாதுள்ளோரும்
பாக்கியர்; - மெத்தனவுடன் சகிப்பர் - பூமியைச் சுதந்தரிப்பர்.

௫. தேவ நீதியினுடைய - துப்புரவின்பேரிலும் - நற்கனி
களால் நிறைய - தக்க நற்சீர்பேரிலும் - பசித்தாகமுள்ளவர் -
அப்பசியில் பாக்கியர்; - திருப்தியாக்கப்படுவார்கள், - பரி
பூரணங் காண்பார்கள்.

௬. பிறத்தியாருட் குறையை - பார்த்து மனதுருகி, - பரதா
பத்தோடே கையை - நீட்டி, கூடினபடி - ஆதரித்திரங்குவர் -
ஆற்றுவாரும் பாக்கியர்; - ஏனெனில் அவர்களுக்கும் - அன்பு
தானே வைத்திருக்கும்.

௭. லோகத்தின் அசுத்தமான - இச்சைகள் எல்லாத்துக்
கும் - நீங்கி ஓடி, துய்யதான் - வாக்கு கண் நடக்கையும் -
சுத்த நெஞ்சுமுள்ளவர் - தங்கள் கற்பில் பாக்கியர்; - இந்தச்
சுத்த மனிதர்கள் - ஆண்டவரைப் பார்ப்பவர்கள்.

அ. மூண்ட வற்மத்தை அமர்த்தி, - சண்டையற்ற நல்மன - உறவாகுதலைக்கட்டி, - நேசமாதிரியாகிய - சமாதான மனிதர் - தங்கள் அன்பில் பாக்கியர்; - தம்பிரானின் புத்திரர்கள் - என்னப்படுவர் அவர்கள்.

௯. சிலுவையையுஞ் சுமந்து, - நீதியின்நிமித்தியம் - தீங்கனுபவித்து வந்து, - துண்டரிக்கந்தூஷணம் - நோவும்பட்ட கிறிஸ்தவர் - வெகுவாகப் பாக்கியர்; - பட்டவர்க்கு என்றென்றைக்கும் - மோட்ச மகிமை கிடைக்கும்.

௰. உங்கள் பேரில் நிந்தையாக - என்னிமித்தியம் நரர் - பொய்நிபங்களை வீணாகப்போட்டால், நீங்கள் பாக்கியர்; - முன் நல்லோருக்கதைப்போல் – வந்ததே, மகிழுங்கள், - மா பலன் என்வசமாக - உண்டென்றார் நற்புத்தியாக.

௰௧. இந்தப் பாக்கியங்களுக்கு - நான் பங்காளியாகவே - உமது அடியானுக்கு - நீர் துணையே, கர்த்தரே. - ஆ, பிதாவே, உம்முட - மைந்தனை நான் உத்தம - பத்தியாய்ப் பின்பற்ற நாடும் - ஆவியின் கருத்தைத் தாரும்.

J. Heermann, † 1647.



# பாவக்கேட்டின் பேரிலே பாடுகிற பாட்டுகள்.

௱௫௯. Durch Adams Fall ist ganz verderbt. (151.)



ஆதாம் விழுந்ததாலே நாம் - சமூலமாகக் கெட்டோம், - சதிக்கும் நன்மைச்கும் எல்லாம் – வேரோடு தானே செத்தோம். - கர்த்தாவுட - அன்பாகிய - மீட்பன்றி எவனுக்கும் - பிசாசுட - விஷக்குண - கடி ஆறு இருக்கும்.

உ. கர்த்தாவின் சொல்லைச் சர்ப்பத்தின் - பொய்க்காகப் புறக்கணித்த - ஏவாளால் சாவனைவரின் - திரளுக்கும் பலித்த - இக்கட்டுண்டே, - திரும்பவே - நரரைக் கர்த்தர்தாமே - குமாரனால் - தாங்காவிட்டால் - நாம் என்றுங்கெட்டோராமே.

ங. இப்போதும் அந்நிய தப்பால் - நாம் சீரில்லாதிருக்கும் - போல், அந்நிய கை அன்பினால் - விழுந்ததை எடுக்கும். - ஆதாமுக்குள் - மகா இருள் - அடைந்தெல்லாருஞ் செத்தோம், - அந்தடவாய் - தாராளமாய் - கிறிஸ்தால் உயிரைப்பெற்றோம்.

ச. பகைஞரான நமக்கும் - பிதா சுதனைத் தந்தார்; - பலியாய் இவர் நமது - நிமித்தியம் இறந்தார். - உயிர்த்த பின் - அனைவரின் - ரட்சிப்புக்குந் தலைவர் - இப்பராக்கிரமன், - இவருடன் - நாம் சீவனை அடைவர்.

ரு. இவர் வழியும் வாசலும் - சீரற்றவர்க்குதித்த - வெளிச்சஞ் சீருஞ் சீவனும், - இவர் பிதா அளித்த - பிசகில்லா - மெய்யாகிய - அருதிவார்த்தையானோர். - இவரையே - நாம் பற்றவே - நாம் மோட்சத்துக்குள்ளானோர்.

சா. கர்த்தாவை அல்ல மாந்தரை - சார்ந்தோன் சபிக்கப்பட்டோன், - அவன் கர்த்தாவின் தயவை - பெறுமல் ரட்சிப்பற்றோன். - போய், வேற்றுமை - துணைகளை - தன்னிச்சையாய்ப் பிடிக்கும் - நின்மூடனை - பேய் தன்னண்டை - இழுத்தலைக் கழிக்கும்.

எ. கர்த்தாவை விசுவாசித்தோன் - வெட்காதோனாய்ச் செலிப்பான்; - இக்கன்மலையில் கட்டினோன் - அசைவில்லாமல் நிற்பான். - தீங்காபத்தும் - அணுகியும், - கர்த்தாவை அண்டும் பிள்ளை - தன் மேன்மையை - இழந்ததை - ஓர்க்காலுங் கண்டேன் இல்லை.

அ. நீர் என்னை உபதேசிக்கும் - மொழி என்வாயை விட்டு பிரியவே ஒட்டாதேயும் - என்றும்மைத தண்டனிட்டு - நான் கேட்கிறேன்; - அப்போ கெடேன், - அததால் மகிழ்ச்சியானேன்; - அவ்வார்த்தையில் - நான் ஊன்றுகில், - நான் மரணத்தைக் காணேன்.

கூ. நீர் தந்த வார்த்தை என்னுட - வழிக்குங் கால்களுககும் - தினம் வெளிச்சங் காட்டிய - தீவட்டியாயிருக்கும். - இவ்வெள்ளியே - எங்களிலே - உதித்தால், கண்தெளியும்; - கர்த்தாவுட - அன்பாகிய - வரங்களுந் தெரியும்.

*Laz. Spengler*, † 1534.

**௱௫௩.** Der Gnadenbrunn fleusst noch. (153.)



குடிக்க யாவரும் - உத்தாரம்பெற்றதான - தெய்வீக தயவின் - ஊற்றின்னம் ஓட்டமான - இச்சமயத்திலே - நீ இயேசுவண்டை போ, - வேறே ஆராகிலும் - ரட்சிக்கக் கூடுமோ.

௨. சீர்கெட்ட உன்னை நீ - ரட்சிப்பது வீணாமே, - நீ பற்ற வேண்டிய - சகாயர் கிறிஸ்துதாமே; - பிதாவை இவரே - ஒப்பரவாக்கினார், - இவர்நிமித்தியம் - பிதா இரங்கிறார்.

௩. உன் பாவக்குற்றங்கள் - உன்னால் நீங்காத கேடு; - மெய் விசுவாசத்தால் - நீ இயேசுவண்டை சேரு; - உன் சுய புத்தியை - நீ பின்பற்றாதேபோ, - வழியைக் காட்டுவர் - தெய்வாவி அல்லவோ.

௪. இப்போதும், கர்த்தரே, - அநேக பாவத்தாலே - திகைத்திருக்கிற - நான் வேட்டைக்காரராலே - துரத்தப்பட்டதாம் - மான்போல் தவிக்கிறேன்; - அருளுட ஊற்றே, - என் தாகந் தீருமேன்.

௫. மனத்தரித்திரர் - விண்ணப்பத்தைத் தள்ளீரே, - அவர்கள் பாவத்தை - மன்னிக்கிறோமென்றீரே; - இப்போதும் உமது - நல்லாவி காண்பிக்கும் - வழிக்குள்ளாகிறேன்; - ஆ, என்னை ரட்சியும்.

௬. என் தவனத்துக்கு - அச்சீவனின் தண்ணீரை - அளியும், கர்த்தரே; - அத்தால் நான் நல்ல சீரை - அடைந்து, புதிதாய் - சிஷ்டிக்கப்படுவேன, - ஆ, இந்தப் பாக்கியம் - என்மேல் வரட்டுமேன்.

*Ch. Knorr v. Rosenroth*, † 1689.

௱௫௬. Ach, mein Jesu, welch Verderben. (156.)



இயேசுவே, எத்தன்மையான - கேடென்னில் இருக்காதோ; - மான் ஆதாமுட வித்தான - துர்க்குணத்தான் அல்லவோ; - பாவி நான் என்றடியேனும் - வெட்கத்தோடே சொல்லவேணும்.

௨. என் வழிகள் தாறுமாறு, - என்குணம் பொல்லாதது, - நன்மைக்கு அது ஆகாது, - தீமைக்கது துருசு; - என் மனம் இத்தால் உண்டாகும் - கேட்டுக்கெப்போ நீங்கலாகும்.

௩. என்னை உமதாவியாலே - நீர்திருப்பி, யாவையும் - உமது இரக்கத்தாலே - என்னில் மாற்றியருளும். - பழ மனுஷனுஞ் சாக - துற் சீர் யாவும் போவதாக.

௪. பாவத்தால் நான் இங்கே தாழ - செத்தோனாய்க் கிடக்கிறேன்; - உயர இருந்து வாற - சீவனுக்கு அடியேன் - ஏங்கிறேன், நீர் தயவாக - என்னை உயிர்ப்பிப்பீராக.

௫. மாமிசத்தின் இச்சையாலே - தீட்டென்மேல் வராமல், நான் - ஆவியின் பலத்தினாலே - அதை வெல்வதற்குத்தான் - புது நெஞ்செனக்குண்டாக்கும், - ஆவியைப் பலமுமாக்கும்.

௬. நான் விழித்துக்கொண்டத்தோடே - வேண்டிக்கொண்டு, நித்தமும் - என் பொல்லாத இச்சையோடே - நான் எதிர்த்து நிற்கவும் - அதைக் கொல்லவும் அன்பாக - திராணியை அளிப்பீராக.

௭. நான் இளக்கரித்திராமல், - சத்துருக்கள் சோதிக்கும் - வேளையில் நான் பின்வாங்காமல் - நிற்க, அங்ககப்படும் - கிரீடம் என்னைப் பெலனாக - ஏவிக்கொண்டிருப்பதாக.

௮. நான் போராடிக்கொண்டிருக்கும் - போரில் ஒருவேளையும் - நான் விழுந்தால், நீர் கொடுக்கும் - திராணியால் திரும்பவும் - வென்று, முடிவு மட்டாக - உம்மிலே நிலைப்பேனாக.

*L. A. Gotter*, † 1735.



# மனந்திரும்புதலின் பேரிலே பாடுகிற பாட்டுகள்.

**௱௫௭.** Herr Jesu Christ, du höchstes Gut. (157.)



அருளின் ஊற்றும் இயேசுவே, - வியாகுலமும் பாடும் - படு கிற என் நெஞ்சிலே - இருக்கும் நோவைப் பாரும். - அநேகம் அம்பு தைத்ததாய் - என் பாவங்கள் அகோரமாய் - என் மனதை வதைக்கும்.

௨. மரத்தில் சாவின் வாதையாய் - நீர் பட்ட நோவைப் பாரும், - என் நோவை நீக்கித் தயவாய் - ரட்சிப்பளிக்க வாரும். - நான் துக்கத்தோடே என்னுடை - இக்கட்டிலே மடிகிற - நிர்ப்பந்தத்தை விலக்கும்.

௩. என் நாட்களில் நான் பண்ணின - பொல்லாப்பென் ஞாபகத்தில் - வந்தால், கறபாரமாகிய - பயம் என் ஆத்துமத்தில் - உண்டாம், நீர் சொன்ன வார்த்தையால் - நல் ஆறுதல் இல்லாவிட்டால், - என் நோவில் கெட்டுப்போவேன்.

௪. நொறுங்கின நெஞ்சுடனே - வந்தும்மைப் பற்றிக் கொள்ளும் - எல்லார் மேல் தாழ்ச்சியன்றியே - அருள் உண்டென்று சொல்லும் - தெய்வீக வார்த்தையோவென்றால் - என் மனதைத் தன் இன்பத்தால் - திரும்ப உயிர்ப்பிக்கும்.

௫. இப்போதும் பாரமாகிய - என் மனச்சாட்சியாலே - வதைந்த நானும் உம்முடை - தெய்வீக ரத்தத்தாலே - மன்னிப்படைய ஆவலாய் - உம்மண்டை வந்து, பணிவாய் - குனியும் ஏழைப்பாவி.

௬. புவியில் சிறு வயதை - துவக்கி இதுமட்டும் - நான் செய்த அக்கிரமங்களை - அன்பாய் மன்னித்தகற்றும் - என்றும்மை என் இக்கட்டிலே - சாஷ்டாங்கபணிவுடனே - விண்ணப்பம்பண்ணச் சேர்ந்தேன்.

௭. ஆ, சுவாமி, நான் பிழைத்தினி - கீழ்ப்பட்ட பிள்ளையாக - நீர் மகிமைப்படும்படி - நடக்கிறதுக்காக - நீர் உம்முடைய தயவின் - படி மன்னித்து, பாவத்தின் - நுகத்தடியை நீக்கும்.

௮. மகிழ்ச்சியுள்ள ஆவியால் - இவ்வேழையைக் காப்பாற்றும், - நீர் பாடுபட்டு மாண்டதால் - என் சாவில் என்னை ஆற்றும்; - என் நெஞ்சில் விசுவாசத்தை - முடியக் காத்தடியேனை - உம்மண்டை சேர்த்துக்கொள்ளும்.

*Barth. Ringwaldt*, † 1598.

## ௱௬௰. Ach, Gott und Herr. (160.)



ஆ, கர்த்தரே, - பொல்லாப்பிலே - அமிழ்ந்த பாவியானேன், - இங்கேகோவெனில் - இவ்வுலகில் - சகாயம் எங்குங் காணேன்.

௨. நாலதிக்கிலும் - மா தூரமும் - போனாலும், என் அழுக்கும் - என் கிலேசமும் - ஆராலேயும் - நீங்காததாயிருக்கும்.

௩. தள்ளுண்க நான் - நேரஸ்தன் தான், - என் கையோ கிறிஸ்தைப் பற்றும். - தயாபரா, - நான் உம்முட - குமாரனால் தப்பட்டும்.

௪. அதிபதி, - கோபாக்கினி - நிதானமாய் எரியும்; - ஆனால் அங்கே - நான் வாழவே - இம்மையிலே அடியும்.

௫. தகப்பனே, - என் நோவிலே - நான் பிள்ளைபோல் அடங்கும் - குணத்தையே - என் நெஞ்சிலே - நீர் தந்தென் மேல் இரங்கும்.

௬. இங்கே எல்லாம் - நீர் உமக்காம் - பிரிய சித்தமாக - நடப்பியும், - தண்டித்திரும், - அங்கென்னைத் தள்ளீராக.

௭. புசலுட - பயங்கர - மப்பால் எல்லாம் மூடுண்கும் - போதெப்படி - ஓர் குருவி - ஆம் பொந்துக்குள் ஒதுங்கும்,

௮. அத்தன்மையே, - என் இயேசுவே, - என்மேல் எப்பயம் வந்தும், - நான் உம்மிலே - ஒதுங்கவே - என் மனதும்மை அண்டும்.

௯. என் தேகமும் - என் ஆவியும் - பிரிந்தும், உம்மில் நிற்பேன்; - அப்போ வரும் - கதியையும் - உம்மோடனுபவிப்பேன்.

௰. திரியேகரே, - என் சுவாமியே, - நான் நம்பினோர் நீரதாமே; - உம்மில் திடன் - உடையவன் - பிழைப்பது மெய்யாமே.

1—6 *M. Rutilius*, † 1618. 7—10 *J. Major*, † 1655.

## ௱௬௨. Allein zu dir, Herr Jesu Christ. (162.)



ஆ, இயேசுவே, இப்பூமியில் - என் தேற்றரவு நீரே, - என் நம்பிக்கை நீர், ஏனெனில் - என் மீட்பர் தேவரீரே. - புவியில் உம்மைத் தவிர - ஓர்க்காலும் ஆரும் என்னுட - இக்கட்டை நீக்கக் கூடாதே; - என் இயேசுவே, - நான் பற்றும் ரட்சகர் நீரே.

உ. என் பாரப்பாவங்களினால் - என் மனது கலங்கும்; - நீர் பாடுபட்டு மாண்டதால் - ரட்சித்தென்மேல் இரங்கும். - பிதாவிடத்தில் இப்போதும் - என் மத்தியஸ்தராயிரும், - அப்போ நான் நீங்கலாகிறேன். - காப்பாற்றுமேன், - நான் தேவரீரை நம்பினேன்.

ங. மெய்யான விசுவாசத்தை - இரக்கமாய் அளியும்; - என் கண்ணைத் தேவதயவை - நான் பார்க்கத் தெளிவியும். - நான் முழு நெஞ்சால் உம்மையும் - பிறரை என்னைப்போலவும் - நேசிப்பேனாக; சாவிலே - என்னண்டை பேய் - சேராதே காரும், இயேசுவே.

ச. திரியேக சுவாமிக்குத் துதி - உண்டாயிருப்பதாக; - தெய்வீக சித்தத்தின்படி - நடக்கிறதுக்காக - பிதாவுடைய தயவும் - குமாரனின் சிநேகமும் - தேவாவியின் துணையுமே - என்னுடனே - இருப்பதாக நித்தமே.

*Joh. Schneesing*, † 1567.

**௱௬௬.** Aus tiefer Noth schrei ich zu dir. (166.)



தாழ்விலிருந்து கூப்பிடும் - என் சத்தங் கேட்டன்பாக - என் அழுகை எல்லாத்துக்கும் - செவி கொடுப்பீராக; - கர்த்தாவே, பாவமானதை - நீர் மன்னியாமல், நீதியை - பார்த்தால், ஆர் நிற்கக்கூடும்.

௨. மன்னிப்பை எவனாகிலும் - தன் புண்ணியங்களாலே - அடையான்; உம்மை யாவரும் - தாழ்வான மனதாலே - பணிந்து பயப்படவே, - மனத் தரித்திரரையே - மன்னிக்கிறீர், கர்த்தாவே.

௩. நான் கர்த்தரைக் கண்ணோக்கிறேன், - என் புண்ணியம் அவத்தம்; - தேவனையே நான் நம்புவேன், - அதற்கு வாக்குத்தத்தம் - மெய்யான வேதவார்த்தையில் - உண்டாமே, நான் என் மனதில் - அதற்குக் காத்திருப்பேன்.

௪. ராச்சாமங் காக்கிறோர்: எப்போ - விடியும் என்பதாக - நிற்பார்களே, என் மனதோ - அதிக ஆசையாக - கர்த்தாவை நோக்கிக் காக்குது; - ஆ, இஸ்ரவேலே, சுவாமிக்கு - காத்தேயிரு, ரட்சிப்பார்.

௫. அஞ்ஞாயம் மெத்தவாகிலும் - தேவன்பதிகமாயே, - கேடெத்தனை பெருகியும், - மீட்பதுக்கு மேலாமே. - ஆம், இஸ்ரவேலின் பாவங்கள் - அனைத்தை நீக்கும் - மீட்குதலை - கர்த்தாவினாலே ஆகும்.

*D. M. Luther*, † 1546.

## ௱௬௭. Wo soll ich fliehen hin. (167.)



நான் எங்கே ஓடுவேன், - மா பாதகனானேன், - தீட்டெங்கும் என்னை மூடும், - ஆர் ஆதரிக்கக்கூடும்; - எல்லா உலகத்தார்கள் - என் திகிலை நீக்கார்கள்.

உ. அன்புள்ள இயேசுவே, - வா என்று சொன்னீரே. - என் மனதும்மைப் பற்றும்; - என் கிலேசமும் இக்கட்டும் - தணிய, நீர் சற்குரு - திடன் அளிப்பீராக.

௩. என் பாவத்தால் உண்டாம் - விசாரத்தோடெல்லாம் - நான் எனக்காய் மடிந்த - உம்மண்டையே பணிந்த - செபத்தியானமாக - வாறேன், ரட்சிப்பீராக.

௪. சிந்துண்ட உம்முட - இரத்தத்தால் எல்லா - அழுக்கை என்னில் வாங்கும், - என் நோயில் என்னைத் தாங்கும்; - கடலின் ஆழமட்டும் - என் பாவங்கள் விழட்டும்.

௫. என் ஆறுதல் நீரே, - உம்மால் மீட்பாச்சுதே. - என் தீட்டெல்லாம் மறைய, - நீர் அதை உம்முடைய - குழியிலே அடைத்தீர், - அங்கே அதைப் புதைத்தீர்.

௬. என் குற்றம் பெரிது, - ஆனாலும் உமது - இரத்தமும் பலியும் - பலிப்பதால் கழியும். - உம்மண்டை வந்துசேரும் - எல்லாரின் நெஞ்சு தேறும்.

௭. அனேகம் எனக்கு - குறைந்தும், உமது - இரத்தத்தாலே நீரே - எல்லாஞ் சம்பாதித்தீரே; - அத்தால் பிசாசைத்தானும் - நான் வெல்லத் திராணி காணும்.

௮. எல்லாப் பேய்க்கூட்டமும் - எதிர்ப்போராடியும், - நான் ஏன் இளக்கரிப்பேன், - உம்மால் அதைச் செயிப்பேன்; - என் மீட்பர் பேர் விளங்கும் - போதே எல்லாம் அடங்கும்.

௯. ஆ, சுவாமீ, உம்முட - இரத்தம் சருவ - உலகையும் ரட்சித்து, - பேய் வாய்க்குத் தப்புவித்து, - எக்கேட்டையுந் தடுக்கும் - பலத்தைப் பெற்றிருக்கும்.

௰. இப்போதும் உம்மையே - நான் சார்ந்தேன், இயேசுவே, • துக்கிப்பாய் முதல் வந்தேன், - உம்மால் மன்னிப்பைக் கண்டேன். - நான் நரகத்தைக் காணேன், - நான் சீவனுக்குள்ளானேன்.

௰௧. இனி நான் உம்மிலே - பிரியலன்றியே - தடையுங் கேடுமற - அவயவமாய்த் தேற - நீர் என்னைச் சாவுமட்டும் - நல்லாவியால் நடத்தும்.

*J. Heermann*, † 1647.

## ௱௬௯. Schaff in mir, Gott, ein reines Herz. (169.)



௧. நான் வாஞ்சையாய் என் மனதை - அண்ணுரப்பண்ணி, பாவத்தை - பகைக்க, சுத்த நெஞ்சை நீர் - என்னில் சிஷ்டிக்கக் கடவீர்.

௨. என்னில் பேயால் பாழானதை - நீர் புதிதாக்கி, மனதை - வெல்லப்படாத கெட்டியும் - பலமுமாக்கியருளும்.

௩. இச்சையின் மோசம் என்னிலே - செய்த பொல்லாப்பைக் கண்டீரே; - என் நெஞ்சு துயரப்படும், - ஆ, கோபமாயிராதேயும்.

௪. ஆ, உம்முடைய ஆவியை - நீர் உமது அடியேனை - விட்டெடுக்காமல், யாவையும் - இரக்கமாய் மன்னிக்கவும்.

௫. அவர் திரும்ப எனக்கு - திடன் அளித்து, உமது - முகத்தின் ஆறுதலையும் - அடியேனுக்குத் தரவும்.

௬. மனக்கலக்கமற்றோனாய் - நான் உமக்கேற்ற பத்தியாய் - இருந்து, நித்த நித்தமும் - சன்மார்க்கமாய் நடக்கவும்.

௭. பிதா குமாரன் ஆவியே, - இரக்கமுள்ள கர்த்தரே, - உமக்கென்றைக்கும் அடியேன் - இஸ்தோத்திரஞ் செலுத்துவேன்.

*J. A. Freylinghausen*, † 1739.

**௱எ௰.** Ich armer Mensch, ich armer Sünder. (170.)



நிர்ப்பந்தமான பாவியான - நான் இங்கே தேவரீருக்கே - முன்பாக மா கலங்கலான - பயமாய் வாறேன், கர்த்தரே. - இரங்குமேன், இரங்குமேன் - என்றும்மைக் கெஞ்சிக் கேட்கிறேன்.

உ. ஆ, என் கொடிய பாவத்தாலே - மகா திகில் இருக்குது; - ஆ, சுவாமி, துயரத்தினாலே - நிறைந்த ஏழைப்பிள்ளைக்கு. - இரங்குமேன், மு.

ங. பிதா இதயமே, மன்னியும்; - என் நோவுக்குந் தவிப்புக்கும் - இரங்கி, ஆறுதல் அளியும்; - ஆ, கோபமாயிராதேயும். - இரங்குமேன், மு.

ச. என் அழுகைக்கு நீர் மறைந்து - போறீரோ, என்னைக் கேளீரோ; - நான் தேவரீரை விட்டலைந்து, - இனி அழியவேணுமோ. - இரங்குமேன், மு.

ரு. மெய்தான், என் புண் உம்மாலொழிய - ஆறுக் கேடாயிருக்குது; - ஆனால் நீர் கிருபை புரிய - விண்ணப்பம்பண்ணும் ஏழைக்கு - இரங்குமேன், மு.

சா. என் குற்றத்துக்குத் தக்கதாக - செய்யாமல் தயவாயிரும்; - பிதாவே, என்னைப் பிள்ளையாக - திரும்ப நோக்கியருளும். - இரங்குமேன், மு.

எ. இனி நீ பாவஞ் செய்யாயாக, - மன்னித்தோம் என்றோர் சொல்லையே - அடியேனுக்குச் சொல்வீராக, - அப்போ பிழைப்பேன், கர்த்தரே. - இரங்குமேன், மு.

அ. என் நெஞ்சிலே திகில் தணியும், - நீர் என்னைக் கேட்டருளுவீர்; - ஆம், சுவாமி, ஆறுதல் அளியும், - பிதாவே, என்னைக் கைவிடீர். - இரங்குமேன், இரங்குமேன், மு.

*Christoph Tietze*, † 1703.



# மெய்விசுவாசத்தின் பேரிலே பாடுகிற பாட்டுகள்.

## ௱எ௪. Zu dir, Herr Jesu, komme ich. (174.)



உம்மண்டை வாறேன், இயேசுவே, - நீர் என்னை உம்மண்டையிலே - அன்பாய் அழைக்கிறீரே. - என் பாவப்பாரம் மிகுதி, - இக்கடின நுகத்தடி - நிலைத்தால். அதின் கீழே - நான் கெட்டுப்போக வேணுமே, - நான் ஆக்கினைக்குள்ளாவேனே; - கர்த்தாவின் முன் விழிக்க நான் - அபாத்திரத் துன்மார்க்கத்தான். - ஆ, இயேசுவே, - இரட்சியும், இரட்சியும், - என் மத்தியஸ்தராயிரும்.

௨. பிதா எனக்கு நீதியை - சரிக்கட்டாமல், கிருபை - புரியத்தக்கதாக - நீர்தான் என்மேல் வருவதாம் - கோபாக்கினைகளையெல்லாம் - சுமந்திரக்கமாக - கடனைத் தீர்த்தீரென்பதை - நினைத்துக்கொண்டடியேனை - என் பாரத்துக்கும் நோவுக்கும் - நீர் நீங்கலாக்கியருளும். - ஆ, இயேசுவே, - தற்காருமேன், தற்காருமேன், - நான் தேவரீரை நம்பினேன்.

௩. நீர்தாமே பரிகாரியே, - வேறொருவரையும் அறியேனே, - நான் சார்ந்தவர் நீர்தாமே, - பிதாவின்முன் நீர் ஒருத்தர் - நிலைக்கத்தக்க நீதியர், - நீர் தேவமைந்தனுமே; - நீர் பாவியின் அடைக்கலம், - நீர் கிருபையின் ஆசனம், - நீர் சாவை வென்ற ரட்சகர், - நீர் சாபத்தை அழித்தவர்; - ஆ, இயேசுவே, - பேய் சீறியும், பேய் சீறியும், - நீர் என் சகாயராயிரும்.

௪. நான் மெதுவான உம்முட - நுகத்தடியை நித்திய - வணக்கமாய்ச் சுமப்பேன், - உம்மால் நான் முசிப்பாறலாம், -

உம்மால் நான் நன்மையில் எல்லாம் - தினந் தினம் பலப் பேன். - இனி நான் பலவீனத்தால் - இடறினால், நீர் தயவால் - என் ஓட்டந் தீருமட்டுக்கும் - கைதந்து ஆதரிக்கவும். - ஆ, இயேசுவே, - உம்மாலேதான், உம்மாலேதான் - நான் கரை யேறும் நீதிமான்.

J. A. Freylinghausen, † 1739.

## ௱எரு. Herr, allerhöchster Gott. (175.)



உன்னதமாகிய - என் கர்த்தரே, நீர்தாமே - மெய்விசுவா சத்தை - கொடுக்கிறவராமே; - இப்போதும் உம்மண்டை - நான் சேருவதற்கு - அதென்னில் மிகவும் - குறைபடுகுது.

. உ. என் நம்பிக்கைக்கெல்லாம் - பலட்சயம் இருக்கும், - என் விசுவாசத்தை - பேய் மிகவுந் தடுக்கும். - மகாதயா பரா, - சகாயம் பண்ணுமேன் - என்றிவ்விக்கட்டிலே - நான் கெஞ்சிக் கேட்கிறேன்.

ந. நீர் என்னை உம்முட - கரத்தால் ஆதரித்து, - என் ஆத்து மத்துக்கு - அன்பாய்ப் பலம் அளித்து, - ஓர் கடுகத்தனை - இராதிருக்கிற - என் விசுவாசத்தை - பயிராக்கியருள.

ச. ஆ, உமது பலம் - நிறைந்தபடியாக - என் பலவீனத் தில் - ஊன்றோடிருப்பதாக. - என் நம்பிக்கை மென்மேல் - வளர்ந்து வரவே, - நீர் என்னை உம்மண்டை - இழும், என் கர்த்தரே.

ரு. எச்சோதனையிலும் - அடியேன் கெட்டியாக - நிலைத் து, செயமாய் - போர் செய்கிறதுக்காக - என் விசுவாசத் தின் - பொறி மென்மேலக்கும் - எரிவதற்கதை - நீர் ஊதிக் கொண்டிரும்.

சு. ஆ, இயேசுவே, அந்நாள் - தன் நோவில் தாழ்மையோ டே - விண்ணப்பம் பண்ணின - கானானிஸ்திரிக்கன்போடே - சகாயம் பண்ணினீர்; - அவ்வண்ணமாய என்னையும் - என் துய ரத்திலே - நீர் நோக்கியருளும்.

எ. அன்புள்ள கர்த்தரே, - நீர் பேதுருவுக்காக - பிதாவை வேண்டின - அத்தன்மை தயவாக - இவ்வேழைக்காகவும் -

என் விசுவாசமே - மாளாதிருக்க, நீர் - விண்ணப்பஞ் செய்வீரே.

அ. நான் விசுவாசத்தின் - மகா மகிழ்ச்சியான - பலன்களை. இனி - பரகதியில் காண, - என் வேண்டுதலுக்கும் - என் கூக்குரலுக்கும், - கர்த்தாவே, தேவரீர் - அன்பாய்ச் செவி கொடும்.

## ௱எஎ. Liebster Jesu, in den Tagen. (177.)



இயேசுவே, நீர்தாழ்ந்தோரான - நாட்களில் கும்போடே நீர்: - என்னுல் நோயைத் தீர்ப்பதான - சத்தி பாயுது என்றீர்; - இப்போதுன்னதத்தில் ஆளும் - ராசாவான நீர் இந்நாளும் - சத்தியை என்பேரிலும் - பாயப் பண்ணியருளும்.

உ. உமக்கதிகாரம்யாவும் - தரப்பட்டிருக்குதே, - தேவரீரை எந்நாவும் - கர்த்தர் என்க வேண்டுமே. - யாவும் உமக்குப்படியும், - பெருமை எல்லாம் அழியும், - உம்மால் கடைசியிலே - சாவும் வெல்லப்படுமே.

ங. ஆகையாலே தேவையான - மீட்பெப்போதும் உம்மாலாம்; - இதுக்கு நீர் செய்ததான - அற்புதங்கள் சாட்சியாம். - ஏனென்றால் அவரவர்க்கு - அனுகூலராவதற்கு - மனிதரிடத்திலே - தயவாக வந்தீரே.

ச. ஆ, இவ்வேழைக்கும் இரங்கும், - தேவ பரிகாரியே, - என்னைப் பாரும், என்னில் எங்கும் - புண்ணும் ரோகமும் உண்டே. - பாவமும் பொல்லாவினையும் - நீங்க என்மேல் கையைவையும், - சொஸ்தமாகென்றெனக்கும் - நீர் அன்பாகச் சொல்லவும்.

ரு. உம்முடைய வஸ்திரத்தின் - ஓரத்தைத் தொடுகிறேன், - நீர் ரட்சிக்கிற பலத்தின் - சத்துவத்தை நம்புவேன். - நீர் உரைத்ததைப் பிடிப்பேன், - உமக்கென்னை ஒப்புவிப்பேன். - மீட்போமென்று சொன்னீரே; - மீட்டுக்கொள்ளும், இயேசுவே.

௬. ஆமேன், என் செபத்தைக் கேட்பீர், - என்னைச் சுத்தம் பண்ணுவீர், - என்னை நோக்கி என்னைச் சேர்ப்பீர், - தேற்றி அன்பைக் காண்பிப்பீர். - அத்தால் நித்தம் நித்தமாக - உமக்குப் புகழ்ச்சியாக - தோத்திரஞ் செலுத்துவேன், - ஆமேன், ஆமேன் என்கிறேன்.

## ௧௭௮. Es ist das Heil uns kommen her. (178.)



௧. ரட்சிப்பு சுத்த தயவால் - உண்டான தேவதத்தம், - அது நாம் செய்த தர்மத்தால் - வருவது அவத்தம், - பூலோகத்தின் கடன்களை - செலுத்தித் தீர்த்த இயேசுவை - அண்ணாந்து பார்க்க வேணும்.

௨. தெய்வீக கற்பனைகளை - நாம் கைக்கொள்ளாதே விட்டு, - துர்ச்சுபாவத்தால் ஆகாததை - எப்போதும் நடப்பித்து, - கர்த்தாவைக் கோபமாக்கினோம், - நிர்ப்பந்தத்தைச் சம்பாதித்தோம்; - சீர்கேடு பெருகிற்று.

௩. ஆனாலுங் கற்பனையை நாம் - சுய பலங்களாலே - கைக்கொண்டு நீதியாகலாம் - என்றந்தகத்தினாலே - நினைத்தோம்; நமக்கதுவோ - பொல்லாக் குணங்களை இப்போ - காண்பிக்கிற கண்ணாடி.

௪. இத்துர்க்குணங்களைவிட - பார்த்தாலும், நிலைநிற்கும் - பொல்லாப்பு பின்னையும் மகா - அதிகமாய் வர்த்திக்கும். - நம்மால் ஆகாது, கெட்டோமே; - நாம் மாயஞ் செய்தும் அதுவே - பரிச்சேதஞ் செல்லாது.

௫. நியாயப்பிரமாணமோவென்றால் - நிறைவேற்றப்படாமல் - போனால், நாம் சாவோம்; ஆகையால் - பிதா அளவில்லாமல் - இரங்கும் அன்பால் கிறிஸ்துவை - கொடுத்தார், இவர் கடனை - எல்லாஞ் செலுத்தித் தீர்த்தார்.

௬. இதவராலேயானபின் - அவர் முன்பாகத் தாழ்ந்து, - ஆ, இயேசுவே, நீர் மாண்டதின் - பலனினால் நான் வாழ்ந்து - பிழைப்பேனாக, ஏனென்றால் - நீர் உம்முடைய சீவனால் - இப் பாதகனை மீட்டீர்.

எ. நாம் கெட்டுப்போனதை யெல்லாம் - ரட்சிக்க வந்தோம் என்றும், - சேர்ந்தோனுக்கு மன்னிப்புண்டாம், - வாவேன், நாம் இயேசு என்றும், - நீர் சொன்னீரே என்றவரை - நாம் பற்றிக்கொள்ளும் நம்பிக்கை - ரட்சிப்புக்குள ராக்கும்.

அ. இத்தாலே சுவாமிக்கு முன்பாய் - நாம் நீதிமான்களாகி, - புதிய சிஷ்டிகளுமாய் - திருப்பப்பட்டோராகி, - சன்மார்க்கமாய் நடக்கிறோம், - கர்த்தாவின் அன்பை அறிவோம், - பிறர்க்கும் நன்மை செய்வோம்.

௯. நியாயப்பிரமாணஞ் சுவாமியின் - கோபாக்கினையைக் காட்டும்; - திரும்பச் சுவிசேஷத்தின் - பிரசங்கம் நெஞ்சை ஆற்றும், - நீ இயேசுவண்டை ஓடிவா, - நியாயப்பிரமாணங் கேட்கிற - கடனைத் தீர்த்தாரென்கும்.

௰. நாம் இவர்க்குள்ளானால், அப்போ - இவ்விசுவாசம் நல்ல - கனிதரும், தராததோ - மெய் விசுவாசம் அல்ல. - நாம் விசுவாசிகளானால், - நாம் நீதியர்; இதோவென்றால் - சன்மார்க்கத்தால் விளங்கும்.

௰க. மெய் விசுவாசஞ் சுவாமிக்கு - இக்கட்டில் சார்ந்திருக்கும், - செயநாளைக் குறிப்பது - அவருக்கே அடுக்கும். - ஒத்தாசையைத் தயாபரர் - நிர்ணைத்த நாளில் செய்பவர், - சந்தேகம் ஒன்றும் வேண்டாம்.

௰உ. கேளார், ரட்சியார் என்றதாய் - கண்டும், பயப்படாதே; - தயையைச் சில காலமாய் - ஒளிப்பார், பின்வாங்காதே; - உன் நெஞ்சின் அனுமானத்தை - கேளாமல், தேவ வார்த்தையை - நீ திடனாக நம்பு.

௰௩. கர்த்தாவே, உமதன்புக்கு - துதியுண்டாவதாக, - அடியார் விசுவாசித்து - பிழைக்கும்படியாக - இங்கும்முடைய உன்னத - பேர் நாமம் மகிமைப்பட, - இராச்சியமும் வர.

௰௪. ஆ, உம்முடைய சித்தமே - செய்யப்படுவதாக, - படியைத் தாரும், கர்த்தரே, - கடன்களை அன்பாக - மன்னித்து, சோதனைகளை - விலக்கிப்போட்டு, தீமையை - நிவிர்த்தி பண்ணும், ஆமென்.

*P. Speratus*, † 1554.



# இருதயத்தைப் பராபரனுக்கொப்புக்கொடுக்கிறதின் பேரிலே பாடுகிற பாட்டு.

௱அ௰. Mein Gott, das Herz ich bringe dir. (180·)



என்னெஞ்சை, சுவாமி, உமக்கே - ஈவாய்ப் படைக்கிறேன், - நீர் இந்தக்காணிக்கையையே - கேட்டீர் என்றறிவேன்.

௨. என்மகனே, உன்னெஞ்சைத் தா, - நீ இக்கடனைத் தீர், - வேறெங்கும் நீ சுகப்பட - மாட்டாயே என்கிறீர்.

௩. அப்பா, நீர் அதைத் தயவாய் - அங்கிகரிக்கவும், - நான் அதை உள்ளவண்ணமாய் - தாறேன், அன்பாயிரும்.

௪. மெய்தானே, அது சுத்தமும் - நற்சீருமற்றது, - அழுக்குந் தீட்டும் மாய்கையும் - அதில் நிரம்பிற்று.

௫. இப்போதோ மிகுதியுமாய் - தியங்கி, உமக்கு - ஏற்காப் பொல்லாப்பைச் சுத்தமாய் - வெறுத்துப்போகுது.

௬. நான் உண்மையாய்க் குணப்பட - அதை நொறுக்குமேன், - இத்தயவை நீர் காண்பிக்க - பணிந்துகேட்கிறேன்.

௭. ஆம், என் கல்நெஞ்சை நீர் நன்றாய் - உருக்கி, முழுதும் - புலம்பலுங் கண்ணீருமாய் - கரையப் பண்ணவும்.

௮. ஆனால் அப்போ, என் இயேசுவே, - எல்லாரின் மீட்புக்கும் - நீர் சிந்தின இரத்தமே - அதுக்குப் படவும்.

௯. மன்னிப்புண்டாக்கி, உள்ளத்தை - சீராக்கும் உம்மையே - நான் பற்றிக்கொள்ளுந் திடனை - அளியும், கர்த்தரே.

௰. என் குற்றங்கள் என் ஆக்கினை - எல்லாம் எடுபட, - நீர் உம்முடைய நீதியை - என் ஆவிக்கருள.

௰௧. ஆ, எனக்கிந்தச் சுத்தத்தின் - உடுப்புடுத்துமேன்; - அப்போ மாசற்றுச் சுவாமியின் - முன்பாக நிற்கிறேன்.

௰௨. தேவாவியே, நான் பாழ்நிலம் - வறண்ட பூமியும், - நீர் இயேசுவின் நிமித்தியம் - என்மீதில் பாயவும்.

௰௩. இருள் பகையுங் கபடும் - உம்மாலே போய்விட; - வெளிச்சம் நேசம் மெய்மையும் - உம்மாலே வளர.

௰௪. இங்கென்னைத் தீயோர் கெட்ட சீர் - துன்மார்க்கம் மோசமும் - சூழ்ந்தாலும், சுவாமிக்கென்னை நீர் - நற்பத்தியாக்கவும்.

௰௫. உபத்திரவங்கள் வரச்சே - நீர் ஆதரித்திரும்; - நீர் என்னை நம்பிக்கையிலே - நற்கெட்டியாக்கவும்.

௰௬. உள்ளேயிருந்து நித்தமே - அழுக்குகள் வரும், - நீர் என்னை உள்ளுக்குள்ளிலே - நற்சுத்தமாக்கவும்.

௰௭. இனி ஓர்க்காலும் என்னிலே - அநியாயங் கபடும் - காணாமல், என்னை நீர், நீரே - நல் நீதியாக்கவும்.

௰௮. நீர் என்னைக் கிறிஸ்தின் சாயலாய் - எல்லாருக்குள்ளேயும் - மென்மேல் புறம்பும் உள்ளுமாய் - நற்சாந்தமாக்கவும்.

௰௯. நீர் என்னைக் கிறிஸ்துமார்க்கத்தில் - மேற்பூச்சும் மாயமும் - இல்லாதோருக்கு, அவரில் - நல்லுண்மையாக்கவும்.

௨௰. என் முழு நெஞ்சையும் அன்பாய் - நீர், சுவாமி, என்றைக்கும் - அகமும் ஆலயமுமாய் - படைத்துக்கொண்டிரும்.

௨௧. நீர் அதை ஆளும், கர்த்தரே, - அத்தால் நான் பாக்கியன்; - நான் உலகத்தோனல்லவே, - நான் உம்முடையவன்.

௨௨. நயம்பயமுமாய் இனி - பொல்லாத உலகம் - அழைக்குஞ் சர்ப்பனை சதி - எல்லாம் வீண் காரியம்.

௨௩. பிசாசின் மணவாளியே, - ஓர்க்காலும் உன்னை நான் - சேரேன், உன் பேச்சு மாயமே, - நீ சர்ப்பக்கூட்டந்தான்.

௨௪. போ, லோகமே, போ, பாவமே; - என்னெஞ்சு உமக்கு - எக்காலத்துக்கும், இயேசுவே, - கொடுத்திருக்குது.

*J. C. Schade*, † 1698.



# பரிசுத்த நடக்கையின் பேரிலே பாடுகிற பாட்டுகள்.

## ௱௮௨. Herr Jesu, Gnadensonne. (182.)



அருளின் பொழுகான - அன்புள்ள இயேசுவே, - நதிரின் ஜீவனை - உம்மாலே என்னிலே - வெளிச்சமுங் குணமும் - சந்தோஷமுந் திடமும் - வரக் கடவது.

௨. என் பாவத்தை மன்னித்து. - அகற்றியருளும்; - சினத்தை விட்டுவிட்டு - என்மேல் அன்பாயிரும். - என் நெஞ்சின் பயமற, - நீர் சமாதானந் தர - பணிந்துகேட்கிறேன்.

௩. அடியானை மீட்டோரே, - நான் உம்மைச் சேவித்து, - தெய்வீக பக்தியோடே - நடக்கிறதற்கு - என் சிந்தையை முறித்து, - புதியதாய்ச் சிஷ்டித்து, - படைத்துக்கொண்டிரும்.

௪. நான் உம்மைச் சார்ந்தோனாக - எப்போதும் உண்மையில் - நிலைக்கிறதுக்காக, - நீர் எனக்கறிவில் - வளர்ந்திருந்தன் பாலே - தெய்வீக வார்த்தையாலே - வழியைக் காண்பியும்.

௫. நான் லோகத்தை வெறுத்து, - என் நெஞ்சை உமக்கு - எந்நேரமுங் கொடுத்து - பிழைக்க, எனது - துரிச்சையை நீர் பேர்த்து, - உம்மண்டை என்னைச் சேர்த்து, - உம்மாலே ஆற்றுமேன்.

௬. நான் உம்மை உண்மையாக - சிநேகித்துமக்கு - பிரியமார்க்கமாக - நடக்க, உமது - சிநேகத்தை நன்றாக - என்நெஞ்சிலே தீயாக - எரியப் பண்ணுமேன்.

௭. நீர் உமதாவியாலே - திடனும் பெலனும் - தந்தென்னில் தயவாலே - எல்லாம் நடப்பியும். - என்னாலேதான் நான்கெட்டோன், - நன்மைக்கெல்லாம் நான் செத்தோன், - என் சென்மப்பாவத்தால்.

௮. தயாபரா, ரட்சித்து, - பேய் செயல் யாவையும் - என் ஆத்துமத்தை விட்டு - விலக்கியருளும். - நான் பரிசுத்தமாக - நடக்கும்படியாக - துணை நீர், கர்த்தரே.

*L. A. Gotter*, † 1735.

## ௱௮௫. O Gott, du frommer Gott. (185.)



தயாபரா, எல்லா - நல்லீவின் ஊற்றும் நீரே, - உண்டானதை எல்லாம் - அளித்தோர் தேவரீரே. - என் தேகம் ஆவிக்கும் - என் மனச்சாட்சிக்கும் - சீராயிருக்கிற - ஆரோக்கியங் கொடும்.

௨. என் நிலைமையிலே - நீர் எனக்குக் கற்பித்து - கொடுத்த வேலையை - கருத்தாய் நான் முடித்து, - நான் தக்கவேளையில் - ஒவ்வொன்றைச் செய்யவும், - என் செய்கை வாய்க்கவும் - சகாயமாயிரும்.

௩. எப்போதும் ஏற்றதை - நான் வசனிப்பேனாக, - வீண் பேச்சென் நாவிலே - வராதிருப்பதாக. - என் உத்தியோகத்தில் - நான் பேச வேண்டிய - சொல் விதனமில்லா - பலத்தைக் காண்பிக்க.

௪. துன்னுளிலே பயம் - இல்லா முனையைத் தாரும், - சுமை சுமருகில் - நீர் தாம் துணையாய் வாரும். - சாதால் பகைஞனை - நான் வென்றெந்நேரமும் - நல் யோசனைகளை - உம்மாலே காணவும்.

௫. அனைவரோடேயும் - கிறிஸ்தோனுக்கேற்கும் மட்டும் - சிநேகம் அன்புமாய் - நான் சீவனம் பண்ணட்டும். - நீர் ஆஸ்தியைத் தந்தால், - அத்தோடே என்றைக்கும் - அநியாய உடைமை - சேராதிருக்கவும்.

௬. பல வருத்தமாய் - முதிர்ந்த வயதுக்கு - நான் ஏறக்கட்டளை - ஆனால், அந்நாட்களுக்கு - வினையும் லச்சையும் - இல்லா நரையையும் - நற்பொறுமையையும் - நீர் கடாட்சம் பண்ணவும்.

௭. என் சாவில் கிறிஸ்துவின் - சாவால் செயிப்பேனாக; - பிரிந்த ஆவியை - உம்மண்டை சேர்ப்பீராக. - சவத்துக்கோவெனில் - நல்லோர் கிடக்கிற - குழிகளருகே - இடம் அகப்பட.

௮. செத்தோரை நீர் அந்நாள் - எழுப்பும்போதன்பாக; - என் மண்ணின் மேலேயும் - வாவென்ற சத்தமாக - கைநீட்டி, எனக்கு - நீர் சீவனுடனே - வானோரின் ரூபத்தை - அளியும், கர்த்தரே.

J. Heermann, † 1647.

# கிறிஸ்துவைப் பின்செல்வதின் பேரிலே பாடுகிற பாட்டுகள்.

௱௮௧. Mir nach, spricht Christus, unser Held. (186.)



உங்கள் தலைவராகிய - என் சத்தங் கேட்டெல்லாரும் - நான் உங்களுக்குக் காட்டிய - வழியில் உங்கள் பாடும் - உபத்திரவமும் என்னைப் போல் - எடுத்துக்கொண்டு வாருங்கள்.

௨. வெளிச்சம் நான், என் சற்குணம் - நடக்கையால் விளங்கும்; - பின்செல்பவர்களினிடம் - இருள் என்றால் அடங்கும்; - நன்றாய் நடக்கிற படி - என்றால் தெரியும், நான் வழி.

௩. நான் மனத்தாழ்மையானவர், - நான் பூரண அன்புள்ளோர், - நான் என்றும் இன்பவாசகர், - நான் மெத்தனவுமுள்ளோர். - என் கண் பராபரனுக்கு - நேராய் எப்போதும் நோக்குது.

௪. ஆகாததாயிருப்பதை - விலகி, கபடன்றி - இருப்பதற்கு உங்களை -, நான் உபதேசம் பண்ணி, - மோட்ச வழியைக் காண்பிப்பர், - நான் உண்மையான ரட்சகர்.

௫. அதரிது என்றால், நானே - முன்போறேன், - கூடவாறேன். - நான் தான் போராடி வெட்டவே, - செயிக்க வெற்றி தாறேன். - தலைவன் போகச் சேவகன் - பின்வாங்கினால் ஆகாதவன்.

௬. தன் சீவன் தப்பிப்போம் விதம் - ஆர் பார்த்தானோ மரிப்பான்; - ஆர் அதை என் நிமித்தியம் - இழந்தானோ கெலிப்பான். - என் பிறகால் வராதவன் - என் மகிமைக்கபாத்திரன்.

௭. இப்போதும் இயேசு சுவாமியை - உற்சாயமனதாக - பின்சென்று, கூடத்துன்பத்தை - சகித்துக்கொள்வோமாக; - அதேனெனில் பின்வாங்கினர் - கிரீடம் அடையாதவர்.

*J. Scheffler*, † 1677.

## ௱௮௯. Heiligster Jesu, Heil'gungsquelle. (189.)



மாசில்லாமல் துய்யதான - பளிங்கிலேயும் தெளிவான - சுத்தாங்க ஊற்றே, இயேசுவே. - கேருபீன்கள் துய்யசீரின் - பிரகாசம் யாவுந் தேவரீரின் - முன்பாக மங்கிப்போகுதே. - என் பாவத்தின் இருள் - அனைத்தும் உமக்குள் - தொலையட்டும்; - ஆ. இயேசுவே, - நான் உமக்கே - ஒப்பாய்ச் சுத்தாங்கமாகவும்.

௨. மனசாரசாவு மட்டும் - பிதாவின் சித்தமே ஆகட்டும் - என்றீர், அமர்ந்த இயேசுவே. - என் மனமுந் தேவசித்தம் - என் நன்மை என்றதற்கு நித்தம் - கீழ்ப்பட்டடங்க. உம்மையே - பின் பற்றத் தேவரீர் - சகாயம் பண்ணுவீர். - என் நோவிலும், - என் இயேசுவே, - நான் உமக்கே - ஒப்பாய் அமர்ந்திருக்கவும்.

௩. ராப்பகல் உறக்கமற்று - நல்மெய்ப்பராய்ப் பிரயாசப்பட்டு. - நன்றாய் விழித்தீர், இயேசுவே. - நித்தம்நித்தம்போதித்தீர், - செபத்தில் ராவிலுந் தரித்தீர், - மங்கா வெளிச்சக் கண்ணனே. - விழித்துக்கெஞ்சவே - நானுமமிடத்திலே - படிக்கட்டும்; - ஆ, இயேசுவே, - நான் உமக்கே - ஒப்பாய் விழித்திருக்கவும்.

௪. நீர் நிறைந்த நேசமுள்ளோர், - எல்லாரின் மேலுந் தயவுள்ளோர், - மகா அன்புள்ள இயேசுவே. - உம்மால் தீயோர் பேரிலேயும் - பகல் உதிக்கும், மாரி பேயும், - பெரிய உபகாரியே. - ஆ, இந்த உமது - குணம் என்மனது - அடையட்டும். - என் இயேசுவே, - நான் உமக்கே - ஒப்பாய் அன்பாய் இருக்கவும்.

௫. குற்றமன்றி, குரோதமறறு, - எல்லா இகழ்ச்சியையும் பட்டு - மன்னித்தீர், சாந்த இயேசுவே. - தேவவீட்டுக்காய் அல்லாமல் - நீர் வேறெரிச்சலைக் காட்டாமல் - இருந்தீர், ஆட்டுக்குட்டியே. - நான் அந்தப்பத்தியாய் - மிகுந்த சாதுமாய் - இருக்கட்டும்; - ஆ, இயேசுவே, - நான்உமக்கே - ஒப்பாகச் சாந்தமாகவும்.

௬. சுயமேன்மையைத் தேடாமல், - ஓர் மேட்டிமையையுங் காட்டாமல். - மாதாழ்மையானீர், இயேசுவே. - வேலைக்காரன் போல் திரிந்தீர், - எல்லாரிலும் நீரே பணிந்தீர், - மகா பெரிய கர்த்தரே. - ஆ, என்னை உம்முட - அடிகளில் வர - படிப்பியும்; - என் இயேசுவே, - நான்உமக்கே - ஒப்பாகத் தாழ்மையாகவும்.

௭. சுத்தசுத்தத்தின் மெய்யான - கண்ணாடி மாதிரியுமான - கறபுள்ள இயேசு கிறிஸ்துவே, - உம்மில் நெஞ்சும் வசனிப்பும் - முகம் நடையும் சஞ்சரிப்பும் - எல்லாஞ் சன்மார்க்கதத்துய்யமே. - என் தேகம் ஆத்துமம் - எல்லாம் உம்மால் குணம் - அடையட்டும். - என் இயேசுவே, - நான் உமக்கே - ஒப்பாய்க் கற்புள்ளோனாகவும்.

௮. நீரே சாப்பிட்டுக் குடித்த - விதமும் மேரையும் நல்திட்ட - பிரமாணமாகும், இயேசுவே. - நீர் பிதாவின் சித்தமான - படியே செய்வதுமக்கான - ஆகாரமாயிருந்ததே. - அடியேன் இவ்வித - பிரமாணமாய் வர - துணைக்கிரும். - ஆ, இயேசுவே, - நான் உம்மிலே - நல்மேரையுள்ளோனாகவும்.

௯. தேவரீருட பிரிய - தெய்வீக சாயலை அணிய - இச்சிக்கிறேன், என் சீவனே. - அதுக்குமதாவியாலும் - பலத்த சத்துவத்தினாலும் - சகாயஞ் செய்யும், இயேசுவே. - நான் உமக்கேற்கிற - கனிகளைத் தர - எக்காலமும் - நான் உம்மிலே - நிலைக்கவே - சகாயங் கட்டளையிடும்.

**Barth. Crasselius, † nach 1724.**



## பராபரனையுங் கிறிஸ்துவையும் வாஞ்சிக்கிற வாஞ்சையின்பேரிலே பாடுகிற பாட்டு.

**௱௯௧.** Schatz über alle Schätze. (191.)



**க**திக்கெல்லாம் மேலான - கதியாம் இயேசுவே, - ஒப்பற்ற அந்தமான - பத்தாவே, உமக்கே - என் நெஞ்சை வாஞ்சையாலே - ஒப்புக்கொடுக்கிறேன்; - ஏன், உமது நோவாலே - ஆரோக்கியமானேன்.

௨. நீர் என் முசிப்பை ஆற்றி, - மன இடுக்கத்தை - சந்தோஷமாக மாற்றி, - துக்கிக்கும் மனதை - திடத்துவதற்கான - இம்மானுவேலாமே, - நீர் இயேசு, நீர் மெய்யான - பரத்தின் மன்னவே.

௩. ஆ, உமது குளுந்த - முகத்தைக் காண்பியும், - என் மனதில் மிகுந்த - அன்பாய் ஒளிவிடும். - நீர் என்னண்டை தரித்தால், - வாழ்வேன், என் சீவனே; - அடியேனை நீர் விட்டால், - வாழ்வொன்றும் இல்லையே.

௪. இப்பள்ளத்தில் என்னோடே - இரும், என் இயேசுவே. - தலைவராம் உம்மோடே - நல் மனதுடனே - எல்லாத்தையுஞ் சகித்து - வருகிறேன்; இதோ, - நோவென்னை உம்மை விட்டு - பிரிக்கக்கூடுமோ.

௫. இதோ, பிழைக்கச் சாக - என் நெஞ்சு உமக்கு - கொடுத்திருப்பதாக; - நீரே என் பூரிப்பு. - ஆம், உம்மை அன்றி வாழும் - களிப்பைப் பார்க்க நான் - உம்மோடடையும் பாடும் - இக்கட்டும் வாசி தான்.

௬. மண் மகிமையையாவும் - வெறுப்பாய்ப் பார்க்கிறேன், - என் ஆவி உம்மைத் தாவும், - பரத்தை நோக்குவேன். - என் இயேசுவே, நீர்தாமே - என் செல்வமானவர், - உம்மால் மெய் வாழ்வண்டாமே. - மண் வாழ்வெல்லாம் பதர்.

எ. என் பொழுதே, உதியும்; - ஆ, என்னை உம்மண்டை - அழைக்கத் திவிரியும். - நான் இந்த லோகத்தை - சந்தோஷமாக விட்டு - போவேன். என் சீவனே, - உம்மண்டையில் சுகித்து - இருப்பேன், கர்த்தரே.

*Sal. Liscovius*, † 1689.



# இயேசுவைச் சிநேகிக்கிற சிநேகத்தின் பேரிலே பாடுகிற பாட்டுகள்.

௱௪௫. Gott Lob, ein Schritt zur Ewigkeit. (195.)



ஆ, மறுமைகருப் பின்னையும் - நான் கிட்டி வந்ததாலே - நான் உம்மைப் போற்றி, இப்போதும் - புதிய வாஞ்சையாலே - உம்மண்டைக்கு வாறேன், நீரே - எக்கிருபைக்கும் ஊற்றுமே, - என் சீவனும் நீர்தாமே.

உ. என் சீவனே, எப்போதென்னில் - சாவுக்குள்ளாயிருக்கும் - என் தேகஞ் செத்தும்மண்டையில் - சாகாமையை உடுக்கும். - அதாகப் போற காலமும் - நாழிகையும் எப்போ வரும் - என்றேங்கிறேன், கர்த்தாவே.

ஙு. நீர் என்னிலும் நான் உம்மிலும் - இருக்கும்படியாக, - நான் நேசக்கட்டால் என்றைக்கும் - உம்மோடே ஐக்கமாக - இணைக்கப்பட்டிருந்தாலும், - அதிகமாய் எந்நேரமும் - நான் உம்மைப் பற்றிக்கொள்வேன்.

ச. எப்போ நீர் என்னை உம்மண்டை - சேர்ப்பீர் என்றுசையாக - இருக்கிற அடியேனை - சந்தோஷிப்பிப்பீராக. - வெளிப்படும், ஆ, வாருமேன், - இதோ, நான் ஆயத்தப்பட்டேன், - அரையைக் கட்டிக்கொண்டேன்,

௫. தீவட்டியை நான் சோடித்தேன், - உம்மைச் சந்திக்க வர - அதைப் பிடித்திருக்கிறேன்; - இதோ, குறைச்சலற -, தேவாவி தந்த எண்ணெயால் - நான் ரப்பப்பட்டுப் போனதால் - அது நன்றாய் எரியும்.

௬. ஆ, வாரும், இது உம்முட - மனைவி வாஞ்சையாக - பண்ணுஞ் செபம், அதை மகா - அன்பாய் நீர் கேட்பீராக. - ஆ, வாரும், மணவாளனே, - என்பேரில் பட்சம் வைத்தீரே, - ஆ, என்னைச் சேர்த்துக்கொள்ளும்.

௭. இதுக்குத் தக்க வேளையை - குறிக்கிறவர் நீரே, - ஆனாலும் என் விண்ணப்பத்தை - விருப்பமாய்க் கேட்டீரே; - நான் உம்மை நித்தநித்தமாய் - என் நெஞ்சில் வாஞ்சிக்காதோனாய் - இருக்க மாட்டேன், சுவாமி.

௮. எனக்கும் உமக்கும் இனி - பிரியல் உண்டாகாது; - நான் உம்முடைய மனைவி, - என் வாழ்வு முடியாது. - உம்மோடே என்னை விண்ணிலே - நீர் சேர்ப்பீர், மணவாளனே, - என் பொக்கிஷம் நீர்தானே.

௯. இதுவரைக்கும் என்னை நீர் - காப்பாற்றினதுக்காக - துதிக்கப்படக்கடவீர்; - இப்போதுந் திடனும் - அப்பால் என் பயணத்திலே - புது எருசலேமுக்கே - நேராய் நடந்துபோறேன்.

௰. கைகள் நெகிழ்ந்து, முழங்கால் - தளர்ந்தால், நீர் அன்பாக - என் விசுவாசத்துக்கும்மால் - பலங் கொடுப்பீராக; - அப்போ நான் புது ஊக்கமாய் - மோட்சானந்தத்துக்கு நேராய் - நடந்து ஏறிப்போறேன்.

௰௧. என் நெஞ்சே, பயமற்றிரு; - நீ விசுவாசத்தாலே - பலத்து, உன்னை உலகு - தன் இச்சைகளினாலே - வாவென்றழைத்தால், பின்னையும் - நீ இயேசுவுக்குமுழுதும் - ஆதீனமாவாயாக.

௰௨. என் ஆத்துமம், ஆ, இயேசுவே, - அப்போதே உம்மண்டைக்கு - பறந்து ஏறிப் போச்சுதே; - நான் இனி மறுமைக்கு - அடுத்தவன், இவ்வுலகு - என் தானம் அல்ல, இம்மைக்கு - இனி நான் பரதேசி.

*A. H. Francke*, † 1727.

௨௱. Ich will dich lieben, meine Stärke. (200.)



நான் உம்மை முழு மனதாலே - சிநேகிப்பேன், என் இயேசு வே; - நான் உம்மை நித்தம் வாஞ்சையாலே - பின்செல்லு வேன். என் சீவனே, - குலை பதைக்கும் மட்டும் நீர் - என் நெஞ்சில் தங்கிறீர்.

௨. நான் உம்மை நேசிப்பேன், நீர்தாமே - என் உத்தம சிநேகிதர்; - நீர் தேவஆட்டுக்குட்டியாமே, - நீர் என் பத்தா வுமானவர். - நான் என்றும் உம்மை நேசிப்பேன், - தினமும் போற்றுவேன்.

௩. ஆ, அழகே, என் மீட்புக்காக - உதித்த தேவமைந்த னே, - நான் உம்மை இத்தனை நாளாக - அறிந்ததில்லை என்ப தே - இப்போதென் ஆத்துமத்துக்கு - நோவாயிருக்குது.

௪. நான் உம்மைத்தேட வாஞ்சையற்று, - கண் கெட்டோ னாய்ச் சிதறினேன், - நான் உம்மை விட்டுத் தூரப்பட்டு, - பிர பஞ்சியத்தை நேசித்தேன்; - இப்போ நான் உம்மைச் சேர்ந் தது - நீர் செய்த தயவு.

௫. நீர் என்னைத் தெய்வசோதியாலே - பிரகாசிப்பித்தடி யேனை - குணப்படுத்தி, பூரிப்பாலே - நிரப்பி, என்மேல் தயவை - விரித்ததின் நிமித்தியம் - உமக்கிஸ்தோத்திரம்.

௬. இனி நான் சிதறிப் போகாமல் - நேராகப் போய், சன் மார்க்கமாய் - என் கால்களாலே இடறுமல் - நடக்க, நீர் ஒத் தாசையாய் - இருந்து, என்னை முழுதும் - திருப்பியருளும்.

௭. என் கண்கள் இன்பமாய்க் கண்ணீரை - உதிர்க்கவும், எந்நேரமும் - என் மனவாஞ்சை தேவரீரை - சிநேகத்தாலே தாவவும், - நீர் என்னை அன்பாய் நித்தமே - எழுப்பும், இயே சுவே.

௮. நான் உம்மைச் சீவனுள்ளநாளும் - சிநேகிப்பேன், என் கர்த்தரே; - நான் உம்மை அவதிவந்தாலும் - சிநேகிப் பேன், என் இயேசுவே. - குலைபதைக்கும்மட்டும்நீர் - என் நெஞ்சில் தங்கிறீர்.

J. Scheffler, † 1677.

## ௨௱௧. Herzlich lieb hab ich dich, o Herr. (201.)



நீர் என் மகிழ்ச்சி, கர்த்தரே, - மிகுந்த தயவுடனே - என்னண்டையில் தரியும். - விண்மண்ணிலும் ஏதேதுண்டோ - அதும்மை அன்றித் தேற்றுமோ, - நீர் தேற்றரவளியும். - என் நெஞ்சு மாண்டுபோகியும், - நீர் என் கதியுஞ் சீவனும் - என் கன்மலையுமானவர், - நீர் என்னை மீட்ட ரட்சகர். - ஆ, இயேசுவே, தயாபரா, தயாபரா, - நீர் என்னைத் தேற்றியருள.

௨. என் ஆவியும் என தேகமும் - அடியானுக்குண்டானதும் - நீர் தநததிதுக்காக - நான் அதை உமக்கேற்றதாய், - பிறருக்கூழியமுமாய் - அனுபவிப்பேனாக. - பிசாசின் எத்தும்மூர்க்கமும் - விலகப் பண்ணியருளும், - உபத்திரவத்தில் உம்மையே - பின்பற்றப் பண்ணும், இயேசுவே. - ஆ, இயேசுவே, சாவணுகும் இக்கட்டிலும் - நீர் என்னைத் தேற்றிக்கொண்டிரும்.

௩. என் ஆத்துமத்தை உம்மண்டை - எடுத்துவர, தூதரை - அப்போதன்பாய் அனுப்பும். - என் தேகந் தன் படுக்கையில் - தூங்கட்டும், நீர் வருகையில் - நீரே அதை எழுப்பும்; - அப்போ நான் உம்மை, கர்த்தரே, - மகா சந்தோஷத்துடனே - கண்ணாரக்கண்டு, என்றைக்கும் - பிழைக்கக் கட்டளையிடும். - ஆ, இயேசுவே, இம்மீட்பெல்லாம் உம்மாலேயாம், - புகழ்ச்சி உமக்கு உண்டாம்.

*Martin Schalling,* † 1608.

உ௱ச. Ach sagt mir nichts von Gold und Schätzen. (204.)



பூலோக செல்விக்கையும் பொன்னும் - மிகுக்கும் எனக்கு வேண்டாம்; - என் ஆவிக்காகும நன்மை ஒன்றும் - இங்கில்லை, யாவும் மாய்கையாம். - பொருளல்லாததை நாடேன், - நான் இயேசுவைச் சிநேகிப்பேன்.

உ. என் பொன்னுஞ் செல்வமுங் கதியும் - என் பொக்கிஷமும் அவரே; - என் ஆவி அவர் முன்பணியும்; - ஆம், அவர் என் மகிழ்ச்சியே. - பொருளல்லாததை மு.

௩. புவி தன் இச்சையோடழியும், - சகையின் அழகற்றுப் போம்; - நகரின் வேலைகள் இடியும், - எல்லாம் மண்ணாகக் காண்கிறோம். - பொருள மு.

௪. என் சீவனும் என் ஆவிக்கான - அடைக்கலமும் அவரே; - நான் என்றைக்கும் பிழைப்பதான - ரட்சிப்பு அவரால் உண்டே. - பொருள மு.

௫. அவர் ராசாதிராசாவான - மகத்துவத்தின் ஆண்டவர், - அவர் எல்லா விதமுமான - இக்கட்டை நீக்கும் ரட்சகர். - பொருள மு.

௬. அவர் அதிபதியாய் ஆளும் - இராச்சியம் அழியாதே; - அவர் ராசாசனம் ஓர்க்காலும் - விழாமல் என்றும் நிற்குமே. - பொருள் மு.

௭. அவருடைய பொக்கிஷத்தின் - ஐசுவரியம் மாளாதது; - அவருடைய சமுகத்தின் - ரூபொப்பில்லாத அழகு. - பொருள மு.

௮. தம்மோடே என்னையும் பரத்தில் - மாமேன்மையாய் உயர்த்துவார், - அடியேனுக்கு அவ்விடத்தில் - வாசஸ்தலஞ் சம்பாதித்தார். - பொருள மு.

௯. நான் இங்கே தங்கிறவரையில் - தினம் உபத்திரவப்பட்டும், - பிற்பாடு அங்கே மகிமையில் - அனந்த பூரிப்பு வரும். - பொருள மு.

*J. Scheffler*, † 1677.



## சகோதரசிநேகத்தின் பேரிலே பாடுகிற பாட்டு.

**௨௱௭.** Sieh, wie lieblich und wie fein. (207.)



௧. சகோதரர் ஒன்ருய் - ஏகமான சிந்தையாய் - சஞ்சரித்தால், எத்தனை - நேர்த்தியான இனிமை.

௨. அது ஆரோன் சிரசில் - வார்த்த, சிழ்வடிகையில் - கந்தம் வீசும் எண்ணெய்க்கு - ஒத்ததாயிருக்குது.

௩. அது எர்மோன் மேலேயும் - சீயோன் மேடுகளிலும் - பேய்கிற ஆகாசத்து - நற்பனிக்கும் ஒத்தது.

௪. அங்கே தான் தயாபரர் - ஆசிர்வாதந் தருவர்; - அங்கெப்போதும் என்றைக்கும் - வாழ்வுண்டாகிப் பெருகும்.

௫. ஆனல் உலகத்திலே - நேசம் அபுருவமே, - தன் உயிரைப்போலே ஆர் - மன்னுயிர்க்கிரங்கிருர்.

௬. ஒன்றுக்கொன்று ஐக்கமும் - அன்புமில்லை, எவனும் - தன் சுகத்தைப் பார்க்கிருன், - பிறத்தியானைச் சிந்தியான்.

௭. விண்ணில் ஆளுஞ் சிரசே, - இப்பிரிவினையிலே - காணுங்கேடனைத்துக்கும் - பரதாபமாயிரும்.

௮. மேய்ப்பரே, நீர் கிருபை - செய்து, சிதறுண்டதை - மந்தையாக்கி, யாவையும் - சேர்த்தணைத்துக் கொள்ளவும்.

௯. எங்கள் நெஞ்சில் சகல - நற் குணங்களும் வர - தேவ அன்பை அதிலே - ஊற்றும், இயேசு கிறிஸ்துவே.

௰. நீரே நெஞ்சை நெஞ்சுடன் - கட்டி, நேசத்தின் பலன் - நன்மை தீமை நாளிலும் - காணக் கட்டளையிடும்.

௰௧. மூன்றென்ருகிய பிதா - மைந்தன் ஆவியும் எல்லா - நாளும் ஒருமைப்படும் - போல் இம்மந்தை ஒன்றவும்.

௰௨. எத்தனை சந்தோஷமும் - நன்றும் அப்போ தென்படும், - நல்வரங்களுக்கெல்லாம் - நேசத்தால் வழியுண்டாம்.

௰௩. வெவ்வேருய்ப் பிரிந்தது - ஒத்துப்போன பிறகு - ஒருமனப்பட்டெல்லார் - தேவ அன்பைப் பாடுவார்.

௰௪. பரிசுத்தமாகிய - வேதம் மகிமைப்பட - எங்கள் வேண்டுதலையே - அன்பாய்க் கேளும், கர்த்தரே.

1-4. *Mich. Müller*, † 1704.
5-14. *J. C. Nehring*, † 1736.



# செபத்தின் பேரிலே பாடுகிற பாட்டுகள்.

**௨௱௰௧.** Dir, dir, Jehovah, will ich singen. (211.)



கர்த்தாவே, உம்மை ஸ்தோத்திரிப்பேன், - நீர் ஒருத்தர் பராபரனுமே. - நான் உம்மையே நமஸ்கரிப்பேன், - என் வேண்டுதல் உம்மண்டை ஏறவே; - நான் இயேசுவை முன்னிட்டுக் கூப்பிட - நீர் உமதாவியைத் தந்தருள.

௨. நான் இயேசு நாமத்தில் மன்ருட - அவரண்டைக்கு என்னை நீர் இழும்; - நான் மண்ணை அல்ல விண்ணை நாட - தேவாவி என்னைப் போதிவிக்கவும். - நான் உமதன்பை ஆத்துமத்திலே - ருசித்து உம்மைப் பாட, கர்த்தரே.

௩. இத்தயவை என் மேலே வையும், - அப்போ நான் பாடும் பாட்டு உத்தமம், - அப்போது நேர்த்தியாய் இசையும், - அப்போதென் வாயின் சொற்கள் சத்தியம், - அப்போதென் ஆவி தேவரீருக்கு - துதியுண்டாகக் கீதம் பாடுது.

௪. அதேனெனில் சொற்கடங்காத - படியே என்னில் வேண்டிக்கொள்வாரே; - நான் அவரால் தள்ளம்பாருத - மெய்விசுவாசமாய்த் தொழுவேனே. - நற்சாட்சி அவரால் அடைகிறேன், - அத்தால் நான் பிள்ளைபோல் அப்பா என்பேன்.

௫. நான் அவர் ஏவுதலினுலே - இந்தடவாய் விண்ணப்பம் பண்ணச்சே, - அப்போதவர் உதவியாலே - நான் உமக்கேற்க வேண்டினதுக்கே - என் பரமபிதாவாம் தேவரீர் - ஆம், செய்வோமென்றுத்தாரஞ் சொல்லுவீர்.

௬. நான் அவர் ஏவக் கேட்கும் யாவும் - தெய்வீக சித்தத துக்கு ஏற்றது. - நான் இயேசு நாமத்தில் பிதாவும் - பராபர னுமான உமக்கு - முன்பாய்ப் பணிகிறதினாலே நீர் - என் வேண் டுதலை அன்பாய்க் கேட்கிறீர்.

௭. நான் உம்முடைய பிள்ளை என்ற - நற்சாட்சி பெற்றதா லே பாக்கியன்; - ஆகையினால் நான் வேண்டுமென்ற - எல்லா நல்லீவையும் அடைபவன். - நான் கேட்கிறதிலும் அதிகம் நீர் - இரக்கமாய்த் தந்தருளுகிறீர்.

௮. உம்மண்டை இயேசு எனக்காக - மன்றாடுகையினால் நான் பாக்கியன். - மெய்யான தேவபத்தியாக - நான் பண் ணிய செபத்துட பலன் - அத்தாலே நிச்சயமாமே, எல்லாம் - அவருக்குள்ளும் அவராலுமாம்.

*Barth. Crasselius, † nach 1724.*

## உ௱௰உ. Vater unser im Himmelreich. (212.)



பரங்களிலிருக்கிற - பிதாவே, ஓர்மனப்பட - செபத்தால் உம்மைத் தேட, நீர் - அடியாருக்குக் கற்பித்தீர்; - வாயோடே உள்ளங் கூப்பிட - ஒத்தாசையை நீ அருள.

௨. ஆ, உம்முடைய நாமமே - மாமேன்மையாக, பொய்யை யே - நரர்வெறுத்து, உம்மண்டை - திரும்பவும், மெய்வேதத் தை - அடியார் நன்றாய் என்றைக்கும் - கைக்கொண்டதில் நடக்கவும்.

௩. பேய் ஆண்ட இங்கே உம்முட - தெய்வீக ராச்சியம்வர, - அடியார் நெஞ்சை உமது - வரங்களாலே சோடித்து, - பிசா சைக் கட்டி, உம்முட - சபையைக் கடாட்சியும், கர்த்தா.

௪. விண் எங்கும் ஆம்போல் மண்ணிலும் - நீர் வேண்டுமென்றதாகவும்; - அடியார் உமக்குண்மையாய் - கீழ்ப்பட்டடங்கத் தக்கதாய் - நீர் மாமிசமும் ரத்தமும் - இச்சிப்பதைத் தடுக்கவும்.

௫. நீர் அன்றன்றுள்ள அப்பத்தை - அத்தோடும் மனத்திருப்தியை - அளித்து, சண்டைகலகம் - உபாதைபஞ்சம்விக்கினம் - விசாரம் பணஆசையும் - விலகிப் போகப்பண்ணவும்.

௬. பிறர்க்கு நாங்கள் யாவையும் - மன்னிக்கும்போல் அடியார்க்கும் - கடனை நீர் இரக்கமாய் - மன்னித்து, நாங்கள் தயவாய் - அவரவர்க்கெந்நேரமும் - இரங்கக் கட்டளையிடும்.

௭. ஆ, எங்களை, தயாபரா, - துர்ச்சோதனையில் உட்படஒட்டாமல், உமதாவியின் - துணையால் சத்துருக்களின் - வினைகளைக் கலைப்பையும் - செயிக்கத் தைரியங் கொடும்.

௮. அடியாரை எத்தீமைக்கும் - விலக்கிப்போட்டிரட்சியும்; - நல்லாறுதலைக் கடைசி - இக்கட்டிலுந் தந்தருளி, - பின்பும் ஆத்துமத்தையே - நீர் ஒப்புக்கொள்ளும், கர்த்தரே.

௯. அடியார் வேண்டுதல்களை - நீர் தரச் சித்தமானதை - நன்றாக நம்ப நியாயமாம், - சந்தேகம் இல்லை, அதெல்லாம் - மெய்ப்பத்தருக்கு வரப் போம், - அதற்கு ஆமென் என்கிறோம்.

*D. M. Luther*, † 1546.



## விழித்திருக்கிறதின் பேரிலே பாடுகிற பாட்டு.

௨௱௰௪. Mache dich, mein Geist, bereit. (214.)



ஆத்துமாவே, தீங்குக்கு - தப்பத்தக்கதாக - நீ விழித்துத் தொழுது - கெஞ்சிக்கொள்வாயாக; - ஏனென்றால் - சாத்தானால் - உனக்கெந்தத் திக்கும் - சோதனைகள் நிறைகும்.

௨. ஆனால் பாவ நித்திரை - முன் தெளியவேணும்; - பாவ நஞ்சாம் இனிமை - பிச்சாய்ப் போற தேனும் - விலகு, - சீர் படு; - சாவசுப்புமாக - சேரும், தூங்காயாக.

௩. நீ விழித்தெழுந்திரு, - மோசத்தை விட்டோடு, - கண் தெளிய, அதுக்கு - நீ கலிக்கும் போடு; - இவ்விதம் - ஆத்துமம் - கர்த்தரால் கனையும் - ஒளியும் அடையும்.

௪. அப்புறம் பிசாசினி - சோதிக்க ஓயாதே - என்றறிந்து நீ விழி, - அசதியாகாதே. - ஏனென்றால் - தூங்கினால் - தண்டனை பிறக்கும், - சோதனை பலக்கும்.

௫. லோகம் உன்னை மீளவும் - வெல்லத்தக்கதாக - இன்பம் துன்பம் காண்பிக்கும், - நீ விழிப்பாயாக; - சாதியார் - இனத்தார் - வீட்டாராலே தானும் - எதேதோர் வேலை காணும்.

௬. சுயநெஞ்சுந் துரோகியே, - சம்பிரானை விட்டு - சோரம் போகச் சாருதே, - வைத்தியம் பிடித்து - யோசித்து, - உப்புது, - அதுக்கெதிராக - நீ விழிப்பாயாக.

௭. இப்படி விழிக்கையில் - நீ செபமும் பண்ணு, - உன்னைச் சோதனைகளில் - ஆதரிக்தன்றன்று - பாரத்தை - கண்ணியை - நீக்கிப்போடக் கர்த்தர் - ஒருத்தர் சமர்த்தர்.

௮. வாங்க மனதுண்டானால் - கேட்கத் தேவையுண்டு, - கர்த்தரின் சகாயத்தால் - நாம் நிலைத்திருந்து, - போரிலே - வெல்லவே - ஏற்ற எத்தனங்கள் - உக்கிர செபங்கள்.

௯. தேவமைந்தன் நாமத்தில் - கர்த்தரை மெய்யாக - தொழுது கொண்டோமாகில், - பூரண அன்பாக - சகல - நல்வரங்களையும் அளிப்பார், - நித்தமும் ரட்சிப்பார்.

௰. ஆகையால் நெருக்கமும் - சாவும் நியாயத்தீர்ப்பும் - வாறபோதொத்தாசையும் - ஆறுதலும் மீட்பும் - காணவே, - நித்தமே - வேண்டிக்கொள்வாராக - நாம் விழிப்போமாக.

*J. B. Freystein*, † 1720.



# ஞானப்போராட்டத்தின் பேரிலே பாடுகிற பாட்டுகள்.

**௨௱௰௯.** Ich ruf zu dir, Herr Jesu Christ. (219.)



என் இயேசுவே, என் சத்தத்தை - கேட்டன்பாய் என்னைப் பாரும், - மெய்விசுவாசப் பத்தியை - அடியேனுக்குத் தாரும். - நான் உம்மைப்பற்றி, உம்மிலே - பிறரை உண்மையாக - உமக்காக - சிநேகித்தும்மையே - நன்றாய்ப் பின்செல்வேனாக.

௨. நான் தேவ சத்தியத்திலே - பிசகில்லாமல் நிற்க - பலம் அளியும், கர்த்தரே. - விசேஷமாய் மரிக்க - கிடக்கும்போதென் தர்மம் நான் - நம்பாதோனாய், மாசற்ற - உம்மைப் பற்ற - என் மனதை நீர்தான் - நல்லாவியால் நடத்த.

௩. நான் மனஸ்தாரயாவர்க்கும் - அன்பாய் மன்னிப்பேனாக, - நீர் எனக்கும் மன்னிக்கவும். - இக்கட்டு எதிராக - வந்தால், நான் திகிலின்றியே - நிலைக்கிறதுக்காக - இன்பமாக - தெய்வீக வார்த்தையே - திடன் தருவதாக.

௪. வாழ்வாகிலுஞ் சாவென்கிலும் - என் நெஞ்சை உம்மை விட்டு - பிரிக்கவே ஒட்டாதேயும்; - முடிய நான் தரித்து - ரட்சிப்படைய, இயேசுவே, - நீரே பலத்தைத் தாரும், - அதை ஆரும் - தன்னால் அடையானே, - நீர் ரட்சியும், நீர் காரும்.

௫. போராடும் பலவீனனை - அன்பாய்ப் பார்த்தாதரியும், என்னால் ஆகாது, நீர் துணை, - நீர் பலத்தை அளியும். - உம்மாலே சோதனையிலே - விழாமல் நிற்பேனாக, - நீர் அன்பாக - போராடினேனுக்கே - ஒத்தாசை செய்வீராக.

*P. Speratus*, † 1554.

## ௨௱௨௰. In dich hab ich gehoffet, Herr. (220.)



கர்த்தாவே, உம்மை நம்பினேன். - நீர் என் அடைக்கலம் என்றேன், - வெட்காதிருப்பேனாக; - தயாபரா, நீர் என்னுட - சகாயராவீராக.

௨. நீர் உமது செவிகளை - இரக்கத்தோடே என்னண்டை - சாய்த்தெனக்கு அன்பாக - இவ்வேளையில் என் ஆபத்தில் - ரட்சிப்பளிப்பீராக.

௩. இருபுறத்திலும், இதோ, - திரள் பகைஞரோடிப்போ - போர் எனக்கு உண்டாகும். - ஆ, கர்த்தரே, இப்போரிலே - நீர்தான் என் கோட்டையாகும்.

௪. நீர் என் பலம், என் கன்மலை, - என் கேடயமுமென் பதை - தெய்வீக வார்த்தை சொல்லும்; - என் கர்த்தரே, என் சீவனே, - நீர என்னைக் காத்துக்கொள்ளும்.

௫. பொய் பேசும் லோகம் எனக்கு - சுருக்கை வைக்குங் கபடு - அநேகமாயிருக்கும், - என்னண்டையில் இரீராகில் - அடியேனை ஒடுக்கும்.

௬. என் ஆத்துமத்தை உமக்கே - நான் ஒப்புவிப்பேன், கர்த்தரே, - நீர் என்னை மீட்டோராமே. - எநநேரமும் முடிவிலும் - ரட்சிப்பவர் நீர்தாமே.

௭. பிதா குமாரன் ஆவியே, - திரியேகரான உமக்கே - துதி உண்டாவதாக. - அளவில்லாத் தயாபரா, - உம்மால் செயிப்பேனாக.

*Adam Reissner*, † 1563.

## ௨௱௨௨. Ringe recht, wenn Gottes Gnade. (222.)



தேவகிருபையைத் தேட - நீ போராடிக்கொண்டிரு, - ஆவி பாரமற்று ஏற - நன்றாய்ச் சாக்கிரதைப்படு.

௨. வாசலானது இடுக்கம், - தாழ்மையாகி உட்படு; - சீவனின்வழி நெருக்கம், - லோக நேசத்தை விடு.

௩. நல்ல சேவகத்தைப் பண்ணி. - ராச்சியத்துக்குட்படு; - பேய் எதிர்த்தால், பயமன்றி-நின்று, ஏகிக்கொண்டிரு.

௪. பத்தி முழுலோகத்துக்கும் - உன்னை நீங்கலாக்கவே - பார்த்துக்கொள், பங்கிட்டிருக்கும் - நேசஞ் சுவாமிக்கேற்காதே.

௫. வேண்டுதலினால் போராடி, - ஆண்டவரின் தயவு - காணும் மட்டுக்கும் மன்றாடி, - கூப்பிட்டுக்கொண்டேயிரு.

௬. கர்த்தர் உன்னைத் தயவோடே - ஏற்றுக்கொண்ட பிறகு - பாவம் உன்னிலே வேரோடே - செத்ததென்றெண்ணாதிரு.

௭. சீவனுள்ள நாள்மட்டாக - மோசங்கள் இருக்குது; - திகிலும் பயமுமாக - உன் ரட்சிப்பைக் காத்திரு.

௮. நீ முடியைப்பெற்றிருந்தால், - கெட்டியாய்ப் பிடித்திரு; - பின்னிடைந்து போய்விழுந்தால், - மோசம் மா பெரியது.

௯. மாய்கையை நோக்காதேவிட்டு, - ஞான ஆயுதங்களை - ராவும் பகலும் பிடித்து, - நிர்விசாரத்தைப் பகை.

௰. உனதிச்சையை அடக்கு, - அது உன்னை ஆளச்சே - கிருபையுட விளக்கு - மங்கிப்போய் அவியுமே.

௰௧. மாமிசத்துக்கேற்றதாக - செய்தால், ஏழை ஆத்துமம் - நோஞ்சலுஞ் சீர்கேடுமாக - போகும, அது நிச்சயம்.

௰௨. உண்மையுள்ளோன் ஓய்வில்லாமல் - பாவத்தை விரோதிப்பான், - எத்தின் ஆவியைக் கேளாமல் - வெற்றியாய்ப் போராடுவான்.

௰௩. அவன் கிறிஸ்துவைப் பின்பற்றி, - துன்பத்தைச் சகிக்கிறான்; - இளக்காரத்தை அகற்றி, - செல்வ வாழ்வாகா தென்பான்.

௰௪. லோகத்தாருட சிரிப்பு - வெறு பைத்தியம் என் பான், - அதின்பிறகு நக்கிப்பு - வரப்போம் என்றறிவான்.

௰௫. உண்மையுள்ளோன் உலகத்தில் - உள்ளதைச் சிநே கியான், - அவன் பொக்கிஷம் பரத்தில் - உண்டு, அங்கே ஏகி றான்.

௰௬. இதை நாம் நினைப்போமாக, - ஆ, நற்சேவகரைப் போல் - பந்தயம் பெறும்மட்டாக - ஏகிப்போவோம், வாருங் கள்.

௰௭. முடிவிந்தச் சீவனுக்கு - இன்று வரலாமென்போம், - நம்முடைய தீபத்துக்கு - எண்ணெய் வார்க்கக் கடவோம்.

௰௮. லோகம் பேயுட கீழாமே, - சோதோம் வேகும் அல் லவோ; - தப்பிப்போக நேரமாமே, - தீவிரிக்க வேண்டாமோ.

௰௯. தப்பத்தக்கதாக ஓடு, - ஆத்துமாவே, தீவிரி, - பாரத் தை இறக்கிப்போடு, - தேவசொல்லைக் கவனி.

௨௰. அக்கிரம சோதோமை விட்டு, - அதின் செய்கையை வெறு; - தப்பிப்போகத் தீவிரித்து, - மல்லோறுக்குக்குட்படு.

௨௧. நீ பின்னுள்ளதை நாடாமல், - முன்னிருப்பதைப் பிடி; - இச்சை வைத்தழுக்காகாமல், - தேவசிந்தையைத் தரி.

௨௨. வென்றவரை மோட்சத்துக்கு - உளராக்கிறதுக்கு - வாற மணவாளனுக்கு - வாஞ்சையாகக் காத்திரு.

௨௩. ஓடி அவரைச் சந்தித்து: - சீவனே, முள்காட்டைப் போல் - காணும் இப்புவியை விட்டு - என்னைச் சேரும் என்று சொல்.

*J. J. Winkler*, † 1722.



## தன்னையும் உலகத்தையும் வெறுக்கிறதின் பேரிலே பாடுகிற பாட்டுகள்.

௨௱௩௫. Eins ist noth; ach Herr, dies Eine. (235.)



ஒன்றே தேவை என்றுரைத்தீர், - சுவாமி, அதை நாடுவேன்; - என்னை உம்மண்டைக்கழைத்தீர், - மாய்கையை அரோசிப்பேன். - இவ்வுலகை எத்தனை தழுவினாலும், — பலதிலே மெத்த உழன்றறுத்தாலும் - அனைத்தும் அவத்தம், ஒன்றானதை நான் - அடைந்தால், நான் பூரண பாக்கியவான்.

௨. இதைச் சிஷ்டிகளிடத்தில் - தேடினால், கிடையாதே; - இயேசு சுவாமியின் வசத்தில் - வாழ்வெல்லாம் இருக்குமே. - என் ஆத்துமமே, உன் இக்கட்டுக்குசாவும் - இம்மானுவேலே பரிபூர்ணம் யாவும் - அகப்படப் பண்ணுவர், அவரை நீ - உன் பங்கும் உன் கதியுமாகப் பிடி.

௩. இந்தப் பங்கையே மரியாள் - தனக்குத் தெரிந்தாளே, - வாஞ்சையாகிய பசியால் - கிறிஸ்தின் பாதத்தண்டையே - இருந்து, தன் போதகர் சொன்ன தெய்வீக - மொழியை உட்கொண்டு, எல்லாலவுகீக - சிந்திப்பை வெறுத்து, தன் மீட்பரையே - அடைந்ததால் மனதில் பூரித்தாளே.

௪. நானும் அந்த வாஞ்சையோடே - உம்மையே, என் இயேசுவே, - அண்டிக்கொண்டேன், நீர் என்னோடே-ஐக்கமாகும், சீவனே. - பெருங் கூட்டத்தோடே அநேகர் சேர்ந்தாலும், - நான் உம்மையே நேசத்தால் ஆசையினாலும் - தொடருவேன், உமக்குள் யாவும் உண்டே, - நீர் சொல்வது ஆவியுஞ் சீவனுமே.

௫. ஞானத்தின் எல்லா நிறைவும் - உம்மிலே இருக்குது; - கீழ்ப்படிகிற இசைவும் - ஞானங் கற்கிறதறகு - தாழ்வாகிய சிந்தையும் என்னிலுண்டாக, - நீர் எனக்கொத்தாசையைப் பண்ணுவீராக. - நன்ருக நான் உம்மையே கற்றுக்கொண்டே - அறிந்தால், நான் தேறின ஞானியாமே.

௬. உம்மை மாத்திரம் முன்னிட்டு - கர்த்தரை நான் சேரலாம்; - சிலுவையிலே மரித்து - ரத்தஞ்சிந்தின நீர்தாம் - என் நித்திய நீதி; இதன்றி அடியேன் - ரட்சிப்பை அடைய வேருென்றும் அறியேன்; - உம்மண்டை ஒதுங்கின பாவியை நீர் - வெண்வஸ்திரத்தாலே அலங்கரித்தீர்.

௭. நான் தெய்வீக சாயலான - புதுச் சிஷ்டியாக, நீர் - என்னைப் பரிசுத்தமான - மனிதனுமாக்கிறீர். - நீர் அதுக்கு மாகக் கொடுக்கப்பட்டோரே, - நீர் அதுக்குச் சகல ஈவுமுள்ளோரே. - நீர் என்னை அழிந்துபோம் இச்சைக்கெல்லாம - விலக்கிக் காப்பாற்றும், என் சீவன் நீர்தாம்.

௮. தேவரீரின் மீட்பினுலே - நித்தபூரிப்பாகுது; - உம்முடைய ரத்தத்தாலே - ஓர்விசை பரத்துக்கு - நீர் உட்பிரவேசித்து, நித்தியமான - ரட்சிப்பை உண்டாக்கி, பிசாசுக்குண்டான - பலத்தை முறித்ததால் நீங்கலானேன், - கர்த்தாவை அப்பா என்றுந் தொழுகிறேன்.

௯. பரிபூரண களிப்பு - இப்போதென்னைரப்பிற்று; - நல்ல மேய்ச்சலின் தித்திப்பு - என்னைத் திருப்தியாக்குது. - உம்மோடேநான் ஐக்கமாம் ஆறுதலுக்கும் - நான் பத்தியில் உம்மைக் கண்ணோக்கிறதுக்கும் - சரியாம் மகிழ்ச்சியை எங்கும் பெறேன், - சரியாந் தித்திப்பை ருசித்துமிரேன்.

௰. ஆகையாலே நான் தெரிந்து - பற்றும்பேறெல்லாம் நீரே; - என்னை நீர் ஆராய்ந்தறிந்து. - உண்மையாக்கும், இயேசுவே. - நான் போம் வழி வாதையாமோ என்று பாரும், - என்கால்களை மோட்சவழியிலேகாரும்; - நான் உம்மை ஆதாயப்படுத்திக்கொண்டே - இருக்கவும்; மற்றது குப்பையாமே.

J. H. Schröler, † 1728.

௨௱௩௰௬. Was frag ich nach der Welt. (236.)



சீர்கெட்ட லோகமே, - உன் வாழ்வு எனக்கேது; - என் இயேசு என்கதி, - நான் உன்னைச் சார்வதேது, - என் ஆஸ்தி இயேசுதான், - என் செல்வம் அவரே. - உன் குப்பையை நாடேன், - சீர்கெட்ட லோகமே.

௨. லௌகிக வாழ்வெல்லாம் - புகையைப்போல் கழியும், - நிழலைப்போலேபோம், - கனையைப்போல் முடியும். - என் இயேசு நித்தியர், - ஓர்க்காலும் மாருரே. - நீ எனக்கு வேண்டாம், - சீர்கெட்ட லோகமே.

௩. பெரியோர் பட்சததை - நரர் பிடிக்கிருர்கள், - பெரியவர்களும் - மண்ணென்று சிந்தியார்கள். - என் இயேசுவினுட - தயை மா வாசியே. - உன் பட்சத்தை நம்பேன், - சீர்கெட்டலோகமே.

௪. அநியாயமாகிய - விதங்களாலுங்காசை - நரர் சேர்ப்பார்களே, - இதே நரரின் ஆசை. - என் இயேசு எனது - இருதயத்திலே - நான் வைக்கும் ஆஸ்தி; போ, - சீர்கெட்ட லோகமே.

௫. இகழ்ச்சியை நரர் - பொறுக்க அறியார்கள், - வீண் பெருமையினுல் - நிறைந்திருக்கிருர்கள். - நான் கிறிஸ்துவுடனே - சுமக்கும் நிந்தையே - என் பெருமை; நீ போ, - சீர்கெட்டலோகமே.

௬. பூலோகத்தாருக்கு - மகிழ்ச்சியும் மினுக்கும் - செருக்கும் மோட்சம்போல் - சந்தோஷமாயிருக்கும். - என் மோட்சம் நித்தியம், - என் இன்பம் கர்த்தரே. - உன் செல்வம் மாளுது, - சீர்கெட்ட லோகமே.

௭. ஓர் நிமிஷத்திலே - பூலோக வாழ்வழியும், - சாவணுகில் எல்லா - மகிழ்ச்சியும் முடியும். - ஆனுல் நான் பாக்கியன், - என் வாழ்வு இயேசுவே. - உன் செல்வத்தைத் தேடேன், - சீர்கெட்ட லோகமே.

௮. என் இயேசு என்கதி, - என் இயேசு என் களிப்பு, - என் இயேசு என் கனம், - என் இயேசு என் ரட்சிப்பு, - என் சீவன் அவரே, - என் மோட்சம் அவரே. - நீ சாரமற்றது, - சீர்கெட்ட லோகமே. *G. M. Pfefferkorn*, † 1732.

## ௨௱௪௰. Jesu, meine Freude. (240.)



இயேசுவே, நீர்தாமே - என் மகிழ்ச்சியாமே, - நீர் என் பூரிப்பு; - என் மனம் நாள்தோறும் - ஆசைவாஞ்சையோடும் - உம்மை நோக்குது. - கர்த்தரே, உலகிலே - உம்மையன்றி வாழ்விராது, - இன்பமுங் காணாது.

௨. நல் மறைவின்கீழே - நான் ஒதுங்க, நீரே - என் அரண் மனை; - சாத்தான் வற்மிக்கட்டும், - எதிரி சீறட்டும், - இயேசு என் துணை. - திகிலும் பயங்களும் - பாவ நரகக்கெடியும் - இயேசுவால் தணியும்.

௩. வலுசர்ப்பத்துக்கும் - சாவின் பற்களுக்கும் - நான் திடுக்கிடேன். - லோகமே, விரோதி, - நான் சங்கீதம் ஓதி, - தோத்திரிக்கிறேன். - தேவகை என் ஏலுகை, - சாத்தான் கூட்டத்தார் அனைவர் - மவுனம் அடைவர்.

௪. பொக்கிஷங்கள்யாவும் - வீணும் விருதாவும், - இயேசு என்கதி. - லோகத்தார் இச்சிக்கும் - வாழ்வோர்குமிளிக்கும் - கிறுவுக்குஞ் சரி. - அதை ஏன் தொடருவேன்; - இயேசுவோ டடைந்த தாழ்வு - பெரிதான வாழ்வு.

௫. லோகத்தின் மினுக்கே, - நீ மகா அழுக்கே, - என்னை விட்டுப்போ. - பாவங்களுடைய - தீட்டே. நீ மறைய - வேளையாம் இதோ. - இச்சையே, துன்மார்க்கமே, - நீ எல்லாஞ் சமூலமாக - அற்றுப்போவாயாக.

௬. மனதே, நீ ஆறு, - பூரிப்பாகப் பாடு, - இயேசு சேர்ந்தாரே, - அத்தால் எந்தப்பாடும் - தித்திப்பாக மாறும்; - நான் உலகிலே - நிந்தையும் நிஸ்காரமும் - உத்தரித்தும், இயேசு தாமே - என் மகிழ்ச்சியாமே. *J. Franck*, † 1677.



# சிலுவையைச் சுமப்பதின்பேரிலே பாடுகிற பாட்டுகள்.

**௨௱௪௩.** Ich hab in Gottes Herz und Sinn. (243.)



எல்லாத்தையும் என்மனது - கர்த்தாவுக்கொப்புவிக்கும், - வரும் இக்கட்டும் எனக்கு - ஆதாயமாய்ப் பலிக்கும்; - விண் மண்ணுட அவ்வுன்னத - கர்த்தாவுக்கு நான் பிள்ளை, - தாம் தண்டித்தும், ஓர் கோபமும் - அவர்க்கென்பேரில் இல்லை.

௨. பிதாவின்நேசம் நிச்சயம், - அவர் கடலிலேயும் - என்னைப் போட்டாலும், என்மனம் - அச்சோதனையிலேயும் - உறுதியாய்த் திடனுமாய் - நிலைத்தால், அவர்தாமே - திரும்பவும் என் பெலனும் - என் ரட்சகருமாமே.

௩. என்னாலே நான் உண்டானேனோ, - என் தேகம் ஆவி யாவும் - கர்த்தர் கொடுத்ததல்லவோ, - சுகமும் ஊணுந்தாவும், - உட்கருவி புறக்கருவி - அவருட ஈவாமே. - ஆ, இத்தனை யூாக்கத்தை - செய்தோர் அன்புள்ளோராமே.

௪. இந்நாள்வரைக்கும் அவரால் - நான் ஆதரிக்கப்பட்டு - தற்காக்கப்பட்டிராவிட்டால், - நான் முதல்தான் வேரற்று - போவேனல்லோ; அவர்கையோ - என்னை இந்நாள்மட்டாக - காப்பாற்றிற்று, அவருக்கு - இஸ்தோத்திரம் உண்டாக.

௫. கர்த்தாவின் ஞானமோவெனில் - எல்லாத்தையுஞ் சீராக - நடத்திக்கொண்டிருக்கையில், - நமக்கு நன்மையாக- பலவிசை துக்கங்களை - தீர்மானம் பண்ணிவாருர், - நாம் சீர்படச் சசக்கிற - அவிழ்தங்களைத் தாருர்.

௬. உன் மாமிசம் இச்சிக்கிற - மகிழ்ச்சி உன்னை விட்டு - போனல், நீ விசனப்பட - துவக்கி, தத்தளித்து - கலங்கிருய்; ஆ, நீ நன்ருய் - அடங்கத் தேவையாகும், - அதேனென்ருல் உனக்கத்தால் - பிரயோசனம் உண்டாகும்.

எ. உனக்கு அது நல்லது - என்றுன்னை உண்டுபண்ணி - படைத்த உன் பிதாவுக்கு - நீ உன்னைப் பயமன்றி - ஒப்புக்கொடு, அஞ்சாதிரு; - ஆ, கவலைகளற்று - அவருடைய அன்பாகிய - பராமரிப்பைப் பற்று.

அ. கர்த்தாவுக்கேற்றவேளையில் - உன் ஆபத்து முடியும்; - அப்போ கசப்பால் மனதில் - இருந்த நோவழியும். - பொறுத்திரு. நிலைத்திரு, - உன் துக்கமும் உன் பாடும் - உனக்குண்டாம் தீங்குமெல்லாம் - சந்தோஷமாக மாறும்.

௯. காற்று மழையின் பின்னல்லோ - பயிர் நன்றாய் விளையும்; - வாங்காதவாழ்விலேயோ - நற்சீர் குறைவடையும். - கசக்கிற மருந்துடை - பெலன் சுகத்துக்காகும், - நொறுங்கிய நெஞ்சினுடை - தாழ்வால் குணம் உண்டாகும்.

௰. ஆ, கர்த்தரே, நான் உம்முடை - ஆதீனம், தேவரீரின் - கரத்திலே விழுகிற - அடியேனில் நற்சீரின் - ரூபே வர, நீர் உம்முடை - நற்சித்தத்துக்கொப்பாக - செய்தருளும், நான் நோவிலும் - உம்மைத் துதிப்பேனாக.

௰௧. நீர் பாக்கியங்களைத் தந்தால், - சந்தோஷமாயிருப்பேன், - நீர் கஸ்திவரப்பண்ணினால், - நான பிள்ளைபோல் பொறுப்பேன். - பிழைப்புக்கும் இறப்புக்கும். - சுவாமி, நீர் என்ன திட்டம் - தீர்மானமும் பண்ணினாலும், - அதும்முடைய சித்தம்.

௰௨. நான் காலம்பண்ணப் போகச்சே - நீர் என்னைத்தயவாக - இருளாம் பள்ளத்தாக்கிலே - நடத்திக்கொள்வீராக. - நான் உமது புகழ்ச்சிக்கு - என்றுஞ் சங்கீதம்பாடும் - கதிவர, மோட்சானந்த - சுதந்தரத்தைத் தாரும்.

*P. Gerhardt*, † 1676.

## ௨௱௪௫. Was mein Gott will, das g'scheh allzeit. (245.)

முந்தின இராகத்தின்படி.

கர்த்தாவின் சித்தம் நல்லதே, - அதின்படி ஆகட்டும், - ஒத்தாசை செய்துவாருரே. - இடுக்கமும் இக்கட்டும் - வந்தால், அன்பாய், நற்பத்தியாய் - இருப்பவரைப் பார்ப்பார்; - கர்த்தர் துணை என்றவரை - சார்ந்தோர்களைத் தற்காப்பார்.

௨. என் ஆறுதல், என் நம்பிக்கை, - என் சீவன் அவர்தா மே. - என் ஆண்டவரின் ஆளுகை - என் பாக்கியமுமாமே. - முறையிடேன், அடங்குவேன், - என் மயிரை எண்ணினூரே, - அழுகிற கதியில்லா - நரனைக் கைவிடாரே.

௩. நான்சென்றுபோக என் பிதா - குறித்த எந்தநாளும் - என் மனதுக்குப் பூரண - சந்தோஷத்தோடே தாளும். - என் ஆவியை நீர் உம்மண்டை - எடுத்துக்கொள்ளுவீரே, - விரோ திக்கும் பிசாசையும் - எத்தீங்கையும் வென்றீரே.

௪. பொல்லாத அந்தச் சத்துரு - வினையுஞ் சூதுமாக - வந் தால், கர்த்தாவே, எனக்கு - செயம் அளிப்பீராக. - ஆ, உமது மாதயவு - அடியேனைக் காக்கட்டும். - தயாபரா, நீர் என் பிதா; - என் ஆவி உம்மைப் பற்றும்.

*Markgraf Albrecht von Brandenburg Kulmbach*, † 1557.

## ௨௱௪௯. Was Gott thut, das ist wohlgethan. (246.)



கர்த்தாவின் செயல் நல்லது, - தப்பற்ற நியாயமாக - விளங் கப் போற நதுக்கு - கீழ்ப்பட்டிருப்பேனாக. - இக்கட்டிலே - ரட்சிப்பாரே; - புசல் தெளியும மட்டும் - என் தம்பிரான் ஆளட்டும்.

௨. கர்த்தாவின் செயல் நல்லது, - எத்தற்ற உண்மையான - அவருடைய தயவு - நான் நம்பத் தக்கதான - நங்கூரமாம், - பொறுக்கலாம்; - பிதாவால் எந்தத் தீங்கும் - ஆங்காலம் வந் தால், நீங்கும்.

௩. கர்த்தாவின் செயல் நல்லது, - நான் கெட்டுப்போகப் பாரார்; - பிதாவானோர் மருந்துக்கு - பதிலாய் நஞ்சை வா ரார். - பயப்படேன், - நான் நம்புவேன், - தற்காப்பார், அவர் தாமே - என் வைத்தியருமாமே.

ச. கர்த்தாவின் செயல் நல்லது, - சந்தோஷ நாள் வந்தாலும், - என் நன்மைச்சுவர் எனக்கு - இக்கட்டனுப்பினாலும், - அவர்க்கு நான் - அதீனந்தான்; - கர்த்தாவின் அனபினியும் - வெளிச்சமாய்த் தெரியும்.

ரு. கர்த்தாவின் செயல் நல்லது, - நான் அதுக்கு அடங்கி - குடிக்கிற கசப்புக்கு - என் மனது கலங்கி - இருப்பானேன். - அமருவேன், - முடிவிலே நோவாறும், - தித்திப்புமாகமாறும்.

சா. கர்த்தாவின் செயல் நல்லது, - நான் அதில் ஊன்றும் ட்டும் - என்மேல் இக்கட்டு ஆபத்து - எத்துனபமும் வரட்டும். - இப்பிள்ளையை - பிதாவின்கை - அணைத்துக்கொண்டெந் நாளும் - எல்லாம் நன்றாக ஆகும்.

*Sam. Rodigast,* † 1708.

**௨௱௪௯.** Sei Gott getreu, halt seinen Bund. (247.)



கர்த்தாவுக்குண்மையாயிரு, - கிறிஸ்தோனே. நீ அவர்க்கு-கொடுத்த வார்த்தையானது - மெய்யாயிருப்பதற்கு - உன் ஸ்நானத்தைத் தினம் நினை; - மிகுந்த தயவாக - இரங்கின அவருட - ஆளாயிருப்பாயாக.

௨. கர்த்தாவுக்குண்மையாயிரு, - இக்கட்டில் பின் வாங்காதே; - பிதாவின் தயவுனக்கு - இருந்தால், நீ அஞ்சாதே. - எல்லாத்திலும் பிரதானமும் - கதியுமாயிருக்கும் - அவர்தயை சந்தோஷத்தை - திரும்பவுங் கொடுக்கும்.

௩. கர்த்தாவுக்குண்மையாயிரு, - நன்னாளில் உயராதே; - துன்னாளிலே அவருக்கு - துரோகியாய்ப் போகாதே. - எந்நாளிலும் எந்நேரமும் - படிந்து, ஐயமற்று, - பிசகில்லா அவருட - வாக்காம் மொழியைப் பற்று.

௪. கர்த்தாவுக்குண்மையாயிரு, - உன்மேல் உன் நிலைமையில் - வருஞ் சுமையை நீ எடு; - உன் கர்த்தர் உன்னைக் கையில் - சுமக்கச்சே, உன்பேரிலே - எக்கேடு வரக்கூடும். - கர்த்தாவின் கை உன் சிரசை - தன் கேடகத்தால் மூடும்.

௫. கர்த்தாவுக்குண்மையாயிரு, - அவருடை அன்புள்ள - மொழியை மனிதருக்கு - முன்பாகப் பத்தியுள்ள - மகிழ்ச்சியாய்ப் பகர், நன்றாய். - பூலோகத்தார் இச்சிக்கும் - பொய்ப் பூரிப்பு அழியுது, - கர்த்தாவின் வார்த்தை நிற்கும்.

௬. கர்த்தாவுக்குண்மையாயிரு, - நீ நித்தம் பாவமான - எல்லாத்துக்கும் விரோதித்து, - அவருக்கு ஏற்காத - அநியாயத்தை எல்லாம் பகை; - நீ பலவீனமாக - விழுந்தாயேயானால், அன்றே - எழுந்தழுவாயாக.

௭. கர்த்தாவுக்குண்மையாயிரு, - நீ சாகிறநாள் மட்டும் - ஓய்வன்றியே பரத்துக்கு - நேராய் உன் கால் போகட்டும். - எதிர்க்கிற பிசாசுட - எல்லாப் பலங்களுக்கும் - திகையாதே; உன் பேரிலே - கர்த்தாவின் கையிருக்கும்.

௮. கர்த்தாவுக்குண்மையாயிரு, - அப்போதவருக்குள்ள - சிநேகம் அவர் உனக்கு - உரைத்த தயவுள்ள - படி எல்லாம் தெரிவதாம், - அங்குனக்கென்றென்றைக்கும் - சந்தோஷமும் மகிழ்ச்சியும் - செயித்தபின் கிடைக்கும்.

*Michael Franck*, † 1667.

## ௨௱௪௮. Keinen hat Gott verlassen. (248.)



கர்த்தாவை நம்புவாரை - ஓர்க்காலுங் கைவிடார்; - பொல்லாரின் சீஷமானை - வீணைக்கிப் போடுவார். - சன்மார்க்கரைப் பலத்த - கையால தயாபரா - ரட்சித்து, தாழ்ச்சியற்ற - அன்பாய் விசாரிப்பர்.

௨. கர்த்தாவின் சித்தத்துக்கு - கீழ்ப்பட்டடங்குவேன்; - அப்போ நான் சீவனுக்கு - நேரே நடக்கிறேன். - லௌகீக வாழ்வின் பாதை - வேண்டாம், நான் இயேசுவை - பின் சென்று, இங்கே வாதை - சகித்தால், தாவினே.

௩. என்மேலே பாரமாக - வரும் இக்கட்டிலே - பராபரன் அன்பாக - என்னோடிருப்பாரே. - பொறுக்கிற வரத்தை - நான் அவரைக் கேட்பேன், - அந்தடவாய் இக்கட்டை - சகித்து வெல்லுவேன்.

௪. கசப்புங் கர்த்தராலே - வரும், நான் பின்வாங்கேன்; - செபத்தில் ஆசையாலே - விண்ணப்பம் பண்ணுவேன், - அப்போது தயவாக - காப்பாரே, கைவிடார்; - இக்கட்டு பெரிதாக - போம்போது, தேற்றுவார்.

௫. அநேகர் ஆசைவைக்கும் - திரவியத்துக்கு - ஓடேன்; அதென்றென்றைக்கும் - நிற்காதே போகுது. - என் பொக்கிஷம் பரத்தில் - இருக்குங் கிறிஸ்துவே, - அவருட வசத்தில் - கதி எல்லாம் உண்டே.

௬. என் இயேசுவை நான் பற்றி - இருக்கிறேன்; அவர் - என் சாபத்தை அகற்றி - விலக்கும் ரட்சகர். - நான் தப்ப எனக்காக - இரத்தஞ் சிந்தினார், - அத்தன்மை உண்மையாக - ஆர் என்னை நேசிப்பார்.

௭. இஸ்தோத்திரஞ் செலுத்த - மிகுந்த நியாயமாம்; - என், சீவனைக் கொடுத்த - என் கர்த்தருக்கெல்லாம் - ஆதீனமாவதாக; - ஆம், அவர்க்கென்றைக்கும் - பணிந்த பத்தியாக - நான் கீழ்ப்படியவும்.

௮. என் ஏழைப்பாட்டித்தோடே - முடியும்; இயேசுவே, - அடியேனுக்கன்போடே - மோட்சானந்தத்திலே - சுதந்திரம் அளியும்; - அப்போ பிழைக்கிறேன், - எல்லாவிதக் கதியும் - அடைந்து வாழுவேன்.

*Andreas Kessler*, † 1643.

**௨௱௪௯.** Gott wills machen, dass die Sachen. (249.)



சேதமற யாவும்வர - கர்த்தர் பராமரிக்கிறார்; - காற்றடித்தும் கொந்தளித்தும், - இயேசுவை நீ பற்றப்பார்.

௨. இயேசு பாரார், அவர் காரார். - தூங்கிறார் என்றெண்ணாதே; - கலங்காதே, தவிக்காதே, - நம்பினோனை விடாரே.

௩. கண் மூடாத உறங்காத - உன் கர்த்தாவைப்பற்றி, நீ - அவர்தாமே காப்பாராமே - என்று அவரைப் பணி.

௪. நன்மை வந்தும். அட்டி கண்டும். - நீ பயப்படாதிரு; - உன்னிலுள்ள துக்கமுள்ள - நெஞ்சைத் தேற்றுவார், பொறு.

௫. உனக்காக நற்சீராக - காரியம் முடியுது; - பயமற்ற திடப்பட்ட - மனதோடமர்ந்திரு.

௬. உன் அன்பான கர்த்தரான - இயேசுவின் பிலாறை நீ - பகையாமல். வெறுக்காமல், - முத்தி செய், அதே சரி.

௭. உன் விசாரம் மாவிஸ்தாரம் - ஆகியும், கர்த்தாவுக்கு - நீ கீழ்ப்பட்டு, கிலேசமற்று - அவருக்குக் காத்திரு.

௮. தேவகைக்கும் வல்லமைக்கும் - சகலமுங் கூடாதோ; - எந்தச்சிக்கும் எந்தப்பிக்கும் - அவரால் அறும் அல்லோ.

௯. இதுக்கான வெகுவான - சாட்சி எங்குமில்லையோ; - ஆகையாலே இதினாலே - நம்பிக்கை உண்டாகாதோ.

௰. திட்டமான நாளுண்டான - போதனுக்கிரகமெல்லாம் - அசுப்பாக அன்புமாக - உன் மகிழ்ச்சிக்கு உண்டாம்.

௰௧. உன்மேல் ஏற நீயே தேட - போனதைச் சகிக்கிறாய்; - தேவசித்தம் பண்ணுந் திட்டம் - கஸ்தி என்றேன் அழுவாய்.

௰௨. சீரில்லாத உன் ஆகாத - மனதுன்னை ஆள்வது - நல்லதல்ல, அதுக்கல்ல, - கர்த்தருக்குக் கீழ்ப்படு.

௰௩. கர்த்தர்தாமே ஆண்டோராமே, - தங்களை வெறுத்திவர் - இன்பந் தந்தும், கஸ்தி வந்தும், - சம்மதித்தோர் பாக்கியர்.

௰௪. கர்த்தர் தந்த உன்மேல் வந்த - பாரத்தைச் சுமந்திரு. - நீ சலித்தால், நீ பின்னிட்டால், - குற்றம் பெரிதாகுது.

௰௫. கிறிஸ்தைவிட்டுப் பிறக்கணித்து, - சிலுவையை வெறுத்தோர் - வெட்கத்தோடும் திகிலோடும் - இடப்பக்கத்தில் நிற்போர்.

௰௬. புத்திகேட்டு, அதை ஏற்று - கொண்டெடுத்தமனிதர் - இயேசுவாலே கிரீடத்தாலே - சோடிக்கப்படுபவர்.

௰௭. ஆமென், நித்தம் தேவசித்தம் - செய்யப்பட யாவையும் - நீர் குறித்து, நீர் கற்பித்து, - நீர் நடத்தியருளும்.

*J. D. Herrnschmid*, † 1722.

**௨௱௫௧.** Fahre fort, Zion, fahre fort im Licht. (251.)



பெருகு:,: - சீயோனே, சன்மார்க்கத்தில், - முற்சிநேகத்தை விடாதே; - கிறிஸ்துக்குள் வேரூன்றி நில், - அசதிக்குணம் ஆகாதே. - ஓய், இடுக்கவாசற்குட்படு, - பெருகு:,:

௨. உத்தரி:,: - சீயோனே, இக்கட்டுக்கு - நீ அஞ்சாமல், சாவுமட்டும் - நல்ல உண்மையாயிரு. - சீவகிரீடம் லக்காகட்டும்; - நிந்தையாவையும் அனுபவி, - உத்தரி:,:

௩. உன்னைக்கா:,: - சீயோனே, நீ உலகின் - வாழ்வைமேன்மையை எண்ணாதே. - நீ பழைய சர்ப்பத்தின் - ஆளுகைக்குக் கீழாகாதே. - லோக இன்பத்தை வெறுப்பாய்ப் பார், - உன்னைக்கா:,:

௪. சீர் அறி:,: - சீயோனே, உன் மனதை - இந்த அந்தப் பக்கமாக - சாய ஏவும் ஆவியை - பின்செல்லாதிருப்பாயாக. - நேரே போ, எல்லாத்தை நன்றாய் நீ - சீர் அறி:,:

௫. தேறிப்போ:,: - சீயோனே, பலப்படு; - மற்றோர்போலே செத்திராதே, - கிறிஸ்துக்குள் செழித்திரு; - மாயம் வேஷமும் போதாதே, - சீவனும் பலமும் வேண்டாமோ, - தேறிப்போ:,:

௬. ஏகிப்போ:,: - சீயோனே, வெளிப்படு; - உன்பத்தாவின் மேன்மை காண - இந்தவேளை ஏற்றது, - நன்மை செய்யத்தக்கதான - கதவுதிறந்ததல்லவோ, - ஏகிப்போ:,:

௭. தொய்யாதே:,: - சீயோனே, உன் சீரைக் கா, - வெதவெதப்பாயிராதே, - பந்தயத்தை நோக்கிப்பார். - போ, பின்னானதை எண்ணாதே; - சீயோனே, கடை இக்கட்டிலே - தொய்யாதே:,:

J. E. Schmidt, † 1745.



## தெய்வசமாதானத்தின் பேரிலே பாடுகிற பாட்டு.

௨௱௫௫. Wie wohl ist mir, o Freund der Seelen. (255.)



நான்உமதன்பில் தாவரிப்பேன், - அதே கதி, என் நேசரே; - நான் அதில் ஊன்றுகில் சுகிப்பேன். - நான் உம்மைத் தாவுகையிலே - சலிப்பின் ராத்திரி முடியும், - களிப்பின் பொழுது

விடியும். - நீர் காட்டும் அன்பொளிவிடும். - இத்தால் என் மோட்சம் இங்கே தானும், - பாடேன் இனிக் கசப்பாய்க் காணும், - நீர் என் கதியும் பூரிப்பும்.

௨. நான்லோகத்தால் பகைக்கப்பட்டும், - அத்தாலே துக்கமாயிரேன்; - அதின்பந்துன்பங்காண்பிக்கட்டும், - ஓர்க்காலும் அதை நான் நம்பேன். - என் ஆவிக்கான இன்பம் நீரே, - பிரிய நேசர் தேவரீரே, - நரர் கைவிட்டால், நிற்கிறீர். - பகைஞர் கோபம் என்ன செய்யும், - உபத்திரவப் புசலிலேயும் - அடியேனின் நங்கூரம் நீர்.

௩. என் குற்றத்தை நியாயப்பிரமாணம் - கண்டித்து, சாப வார்த்தையாய்: - எரியும் நரகம் உன் தானம் - என்றால், நான் விசுவாசமாய் - நீர் பட்ட பக்கக் காயமான - மறைவில் பூந்து, எனக்கான - சுகத்துடன் இருக்கிறேன். - ஆர் என்னைக் குற்றமாகத் தீர்ப்பார், - நீரே என் தயவுள்ள மீட்பர், - உம்மாலே நீதிமானானேன்.

௪. நீர் என்னைப் பாழ்வனாந்தரத்தில் - அழைத்தால், வாறேன், இயேசுவே. - மன்னாவைத்தந்து, அவ்விடத்தில் - நீரூற்றையுந் திறப்பீரே, - நீர் காட்டிய எல்லா வழியும் - மா ஆசீர்வாதமாய் முடியும்; - உம்மண்டை பயமாயிரேன். - நீர் மேன்மையாக உன்னதத்தில் - உயர்த்தும் பேரை இவ்விடத்தில் - முன் தாழ்த்துவீர் என்றறிவேன்.

௫. அநேகர் சாவுக்குப் பயந்தும், - பயப்படேன் என் சீவன் நீர். - மனமும் நெஞ்சும் உம்மை அண்டும், - நீர் என்னைச் சாவில் கைவிடீர். - பதிவிருக்குங் கள்ளர் காட்டை - கடந்து, தான் இச்சிக்கும் நாட்டை - கண்டோன் இனிக் கலங்கானே. - அத்தன்மைபோல் நான் பூரிப்போடே - இவ்வுலகத்தை விட்டும்மோடே - இருக்கப் போறேன், இயேசுவே.

௬. நான் உம்மைச் சாரும்போது காணும் - சந்தோஷம் மா பெரியதே; - இக்கட்டும் பேயுஞ் சாவு தானும் - உம்மால் விலகிப்போகுமே. - பரத்தின்முன்ருசி உண்டாக - நீர் மிகவும் இரக்கமாக - இவ்வாறுதலை ஈகிறீர். - பூலோக மாய்கை சுத்தக்கேடு, - நீரே கதி, நீரே என் பேறு, - மா பாக்கியம் என் நேசர் நீர்.

*W. C. Dessler*, † 1722.



# பரமசிந்தையின்பேரிலே பாடுகிற பாட்டு.

**உ௱௬௰.** Ich habe nun den Grund gefunden. (260.)



இவ்வேழைக்காகப் பலியான - என் இயேசுவினுட தயை - நான் என்றும் நிற்கத்தக்கதான - உறுதியான கன்மலே; - விண் மண் ஒழிந்தும், இதுவே - அசைவில்லாமல் நிற்குமே.

உ. அவர் தயை என்றைக்கும் நிற்கும், - அதளவற்றிருக்கு மே. - அவர்கை நரரை ரட்சிக்கும் - படிக்கு நீட்டப்பட்டதே; - வராதேபோனால், அவர்க்கு - மா அங்கலாய்ப்பிருக்குது.

௩. ரட்சிக்கப்படுவதற்காக - இரக்கமாய்த் தயாபரர் - நரரின் மனதை நன்றாக - தட்டிக்கொண்டே யிருப்பவர்; - அதேனென்றால் இரட்சகர் - அனைவரையும் மீட்டவர்.

௪. அவர் அனைவருக்குமாக - மீட்கும் பொருளைத் தந்தாரே, - குணப்படும் எல்லாருக்காக - பாவமன்னிப்புண்டாகுமே. - ஆ, இயேசுவால் உண்டானது - அளவில்லாத தயவு.

௫. ஆ, அவருக்குப் பக்தியாக - நான் என்னை ஒப்புவிக்கிறேன்; - திகில் என்பாவங்களுக்காக - வந்தால், அவரை நோக்குவேன்; - அப்போதவர் என்பேரிலே - இரக்கமாய்க் கண் வைப்பாரே.

௬. வேருறுதல் எல்லாம் போனாலும், - வேறெதுவும் என் ஆவிக்கு - குளிர்த்தியைக் கொடாவிட்டாலும், - நான் அவரண்டை சேர்வது - என் நோவை யாவும் ஆற்றுமே, - இரக்கம் அவரில் உண்டே.

௭. இம்மண்ணில் தொந்தரையினாலும் - நான் மெத்தவாதிக்கப்பட்டால், - தினம் பல வருத்தத்தாலும் - என் பாரம் மிகுதியானால், - என் இயேசுவின் இரக்கமே - என் ஆத்துமத்தைத் தேற்றுதே.

௮. நான் எந்த நன்மையைச் செய்தாலும், - அதில் என் பலவீனத்தை - நான் கண்டுணருவதினாலும் - நான் ஏங்கும் போதென்மனதை - என் இயேசுவின் இரக்கமே - திரும்பத் தேற்றிக்கொள்ளுதே.

கூ. ஆ, இத்தனை இரக்கமுள்ள - என் இயேசுவுக்கெல்லாத் தையும் - நான் ஒப்புவிப்பேன், தயவுள்ள - அவர் என்னை வி சாரிக்கும் - அவருடை இரக்கமே - இக்கட்டை யாவும் நீக்குதே.

ம. நான் உயிரோடிருக்கும் மட்டும் - நீர், கர்த்தரே, என் நம்பிக்கை, - என் விசுவாசம் உம்மைப் பற்றும், - இதே என் பிரதிக்கினை. - ஆம், என் அடைக்கலம் நீரே, - இரக்கமுள்ள இயேசுவே.

*J. A. Rothe*, † 1758.



## திட நம்பிக்கையின் பேரிலே பாடுகிற பாட்டுகள்.

உஙசங. Warum sollt ich mich denn grämen. (263.)



ஏன் சலிப்பேன், கிறிஸ்து நிற்பார், - இவ்விதபரம - முத்தை ஆர் பறிப்பார்; - எனக்கங்கே வைத்திருக்கும் - மோட்சத்தை எவன் கை - கொள்ளையிட்டெடுக்கும்.

உ. நான் நிர்வாணமாய்ப் பிறந்தேன், - ஆஸ்தியும் எதுவும் - இன்றி இங்கே வந்தேன்; - மீளவும் நிர்வாணமாவேன், - ஏனெனில் லோகத்தில் - யாவும் விட்டுச் சாவேன்.

ங. ஆஸ்தி, சீவன் தேகம் ரத்தம் - தம்பிரான் கையில் நான் - ஈவாய்ப் பெற்ற தத்தம். - அவர் மீளவும் எடுத்தும், - பாக்கியம்; என் மனம் - தோத்திரஞ் செலுத்தும்.

ச. மா சுமை என் முதுகுக்கு - வரச்சே, நெஞ்சிலே - துக்கம் என்னத்துக்கு; - அதை வரப்பண்ணுங் கர்த்தர் - தயவாய் லேசுமாய் - நீக்கவுஞ் சமர்த்தர்.

ரு. பல இன்பத்தை இம்மட்டும் - தந்தாரே, வாழ்ந்தேனே; - துன்பமும் வரட்டும். - அவர் தண்டனைகள் சாது; - அவர் கை அத்தனை - கூர்மையாய் வெட்டாது.

சா. சரச நகைப்பைப் பேயும் - லோகமும் காட்டியும், - வேறே என்ன செய்யும். - சரசங்களைப் பண்ணட்டும், - தேவ கை சிறுமை - வந்தபின் உயர்த்தும்.

எ. கிறிஸ்தவன் தன்னுளுக்காக - பயமும்திகிலும் - அற்றிருப்பானுக. - சாவுக்கும் அஞ்சாதிருக்கும் - வீரமும் ஆண்மையும் - அவனுக்கடுக்கும்.

அ. எந்தச் சாவு நம்மைக் கொல்லும், - சாவெனில் மோட்சத்தில் - நம்மை வரச் சொல்லும். - சாவில் எந்தத் துன்பத்துக்கும் - தேவ கை ஆவியை - தப்புவித்தெடுக்கும்.

க. அங்கே பூரிப்பாய்க் கெலிப்பேன், - நோவின்பின் வானத்தின் - மேன்மையைத் தரிப்பேன். - இங்கே மெய்ப்பொருள் காணுது, - உலக வாழ்வுட - வேஷங்கள் நில்லாது.

ய. சகலபூலோக நன்றும் - மண் அல்லோ, நெஞ்சுக்கோதுக்கம் உண்டு பண்ணும்; - அங்கே, அங்கே, என்றென்றைக்கும் - ஆற்றிய உத்தம - நன்மைகள் கிடைக்கும்.

யக. பரதீசின் எசமானே, - இப்போதும் என்றைக்கும் - நீர் என் செல்வந்தானே; - உம்முடையோன் நான், நீர் தாமே - எனக்காய் தயவாய் - மாண்ட மீட்பராமே.

யஉ. என்னுடையோர் நீர், கர்த்தாவே, - உம்மையே நெஞ்சிலே - பற்றினேன், பத்தாவே. - என்னைச் சாகும்போதன்பாக - மோட்சத்து வாழ்வுக்கு - நீர் அழைப்பீராக.

*P. Gerhardt*, † 1676.

## உ௱௬௪. Ein feste Burg ist unser Gott. (264.)



கர்த்தர்தான் எங்கள் துர்க்கமும் - அரண் பலமுமாமே, - உண்டாம் இக்கட்டனைத்தையும் - கழிப்பர் அவர்தாமே. - பொல்லாங்கனின் சினம் - இப்போ மா விஷம், - துஷ்டஞ் சூதையும் - அணிந்து உறுமும், - நிகர் புவியில் இல்லை.

உ. எதற்கு நாங்கள் வல்லவர், - இந்நீசர் சத்தியற்ருேர்; - எங்களுக்காய் வேருெருத்தர் - போர் செய்வதற்கேற்பட்டோர். - ஆர், இயேசு கிறிஸ்துதான், - இந்தப்பலவான் - எங்கள் ரட்சகர், - சேனைபதி அவர், - செயிப்பர் அவர்தாமே.

௩. விழுங்க வாற பேய்களால் - பூலோகம் ரம்பினுலும், - பயப்படோம்; கர்த்தாவினுல் - எதிர்த்து நிற்கத் தானும். - இருளின் பிரபு - சீறியும், அது - வெல்லப்பட்ட பேய், - தள்ளுண்கத் தீர்ந்ததே; - ஓர் சொல்லினுல் முறியும்.

ச. பகைஞர் தேவ வார்த்தையை - பகைத்தும், அது நிற்கும்; - கர்த்தர் சகாயர், அவர் கை - வரந் தந்தாதரிக்கும். - மாற்ருன்கள் யாவையும் - சீவனைத் தானும் - வாங்கினுல், கேட்டோ; - இராச்சியம் அல்லோ - எங்களுக்கேயிருக்கும்.

*D. M. Luther*, † 1546.

## உ௱௬௫. Ist Gott für mich, so trete. (265.)



கர்த்தர் என் வசமானுல், - ஏன் பயப்படுவேன்; - உபத்திரவம் உண்டானுல், - செபம்பண்ணுகிறேன். - அப்போதென்மேலே வாற - பொல்லாவினை எல்லாம் - செயிக்கப்பட்டு, தாழ - விழுந்தவத்தமாம்.

உ. கர்த்தர்தான் என் துணையும் - என் நேசருமாமே; - புசலில் அவர் கையும் - என்மேல் இருக்குதே; - எல்லா இக்கட்டிலேயும் - என் நோவு யாவிலும் - அது சகாயஞ் செய்யும், - திடனையுந் தரும்.

௩. நான் நிற்கும் அஸ்திபாரம் - என் இயேசு, இவரால் - மிகுந்த உபகாரம் - வரும்; ஆகையினுல் - என் ஆஸ்தி அவர்

தானே, - என் ஜீவனின் பெலன் - அவர்தான், என்னில் நானே - ஒன்றுமில்லாதவன்.

௪. என் நீதி இயேசுதானே, - அவர் இல்லாவிட்டால், - பிதாவுக்குமுன் நானே - நான் பாவியானதால் - விழிக்கவுங் கூடாதே; - என் இயேசுவன்றியே - ரட்சிப்பு கிடையாதே, - என் மீட்பர் அவரே.

௫. என் சாவு இயேசுவாலே - விழுங்கப்பட்டது, - இவர் இரக்கத்தாலே - என் பாவக் கேட்டுக்கு - நான் நன்றாய் நீங்கலானேன்; - நான் நியாயத் தீர்ப்புக்கும் - பயப்படாதோனேன், - வாழ்வெனக்கு வரும்.

௬. தேவாவி என்னில் தங்கி - என்னை நடத்தச்சே, - பயம் எல்லாம் அடங்கி - திடனாய் மாறுதே. - அப்பாவே என்று சொல்ல - அவர் என்நெஞ்சுக்கு - சகாயம் பண்ணக்கொள்ள, - என் ஆவி தேறுது.

௭. மெய்தான், பிசாசினாலே - துன்பம் எழும்புது; - பொல்லாத லோகத்தாலே - ஓர் கிறிஸ்தவனுக்கு - உபத்திரவம் உண்டாகும். - அவன் நிஸ்காரமும் - சுமக்கத் தேவையாகும், - நோவதினால் வரும்.

௮. இதெனக்குத் தெரியும், - ஆனால் நான் பின்வாங்கேன்; - அதையெல்லாம் அறியும், - கர்த்தாவைப் பற்றுவேன்; - என்ன பயன்மேல் வந்தாலும், - என் சமாசாரத்தை - எல்லாம் நன்றாக ஆளும் - கர்த்தர் என் நம்பிக்கை.

௯. என் மனது களிக்கும், - நான் துக்கமாவேனோ; - இயேசு என்மேல் உதிக்கும் - பகலோன் அல்லவோ. - பரத்தில் வைக்கப்பட்ட - அனந்த பூரிப்பு - என் ஆவிக்குப் பலத்த - திடன் உண்டாக்குது.

P. Gerhardt, † 1676.

## ௨௱௭௧. Sollt es gleich bisweilen scheinen. (271.)



நம்மை ஆண்டவர் கைவிட்டார், - முற்றிலும் பிறக்கணித்
தார் - என்ற நினைவு வேண்டாம், - அவர் மெய்ச் சகாயராம்.
௨. நாம் பொறுக்கத் தேவையாகும், - அவர்க்கேற்ற நா
ளில் ஆகும். - எவன் அவர் பிள்ளையோ, - அவனை ரட்சியாரோ.
௩. பிள்ளைகளின் இச்சைக்கான - காரியத்தை ஏற்றதான -
நல்ல சமயத்திலே - பெறார் தருவார்களே.
௪. அவராலே எந்தத் தீங்கும் - காலம் வந்தபோது நீங்
கும், - அவர் பிள்ளையாகிற - எனக்கு அவர் பிதா.
௫. சாத்தான் என்னத்தைச் செய்தாலும், - எந்தனை கே
டுண்டானாலும், - ஆண்டவர் இருக்கிறார், - அவர் அதை நீக்கு
வார்.
௬. சாவுடமிரட்டலுக்கும் - சத்துருக்கள் வற்மத்துக்கும் -
பயமற்றேன், கர்ததரே - என் சிநேகிதராமே.
௭. லோகம் என்னை வன்கண்ணாலே - நோக்கினாலும், அதி
னாலே - திகில் ஏது, அவரே - நியாயந்தீர்ப்பவராமே.
௮. லோகத்தால் நான் புறம்பாக - தள்ளப்பட்டால், அற்ப
மாக - அதைப் பார்ப்பேன், எனக்கு - மோட்சமே இருக்குது.
௯. லோகமே, நல்மனதோடே - உன்னை விடுவேன், உன்
னோடே - கலவேன், பராபரன் - என்றென்றைக்கும் என்
பலன்.
௰. ஆ, என் பொக்கிஷம் நீர் தாமே, - சுவாமி, அது எனக்
காமே. - மற்றயாவையும் எண்ணேன், - லோகத்தை வெறுக்
கிறேன்.

*Christoph Tietze*, † 1703.



# தேவ இஸ்தோத்திரப் பாட்டுகள்.

## ௨௱௭௪. Nun danket alle Gott. (274.)



அதிசயங்களை - எல்லாஇடமுஞ் செய்யும் - கர்த்தாவை வாக்கினால் - இருதயத்திலேயும் - துதியுங்கள், அவர் - நாம் சென்மித்த நாளே - முதல் இம்மட்டுக்கும் - இரக்கஞ் செய்தாரே.

௨. நாதயாபரர் - முடிய ஆதரித்து, - நற்சமாதானத்தால்-மகிழ்ச்சியை அளித்து, - தயையை நம்முட - மேல்வைத்தெந் நேரமும் - ரட்சித்து, தீமையை - எல்லாம் விலக்கவும்.

௩. உன்னதமாகிய - விண் மண்டலத்திலுள்ள - மாறாத உண்மையும் - தயையும் அன்புமுள்ள - பிதா சுதனுக்கும் - திவ்விய ஆவிக்கும் - எத்தேசகாலமும் - துதி உண்டாகவும்.

*Martin Rinckart*, † 1649.

## ௨௱௭௫. O dass ich tausend Zungen hätte. (275.)



ஆ, என்னில் நூறுவாயும் நாவும் - இருந்தால், கர்த்தர் எனக்கு - அன்பாகச் செய்த நன்றை யாவும் - அதுகளால் பிரசங்கித்து, - துதிகளோடே சொல்லுவேன், - ஓயாத் தொனியாய்ப் பாடுவேன்.

௨. என் சத்தம் வானமளவாக - போய் எட்டவேண்டும் என்கிறேன்; - கர்த்தாவைப் போற்ற வாஞ்சையாக - என் ரத்தம் பொங்க ஆசிப்பேன். - ஒவ்வொரு மூச்சும் நாடியும் - துதியும் பாட்டுமாகவும்.

௩. ஆ, என்னில் சோம்பலாயிராதே, - என் உள்ளமே, நன்றாய் விழி; - கர்த்தாவை நோக்கி ஓய்வில்லாதே - கருத்துடன் இஸ்தோத்திரி. - இஸ்தோத்திரி, என் ஆவியே, - இஸ்தோத்திரி என் தேகமே.

௪. வனத்திலுள்ள பச்சையான - எல்லாவித இலைகளே, - வெளியில் பூக்கும் அநேகமான - மலர்களின் ஏராளமே, - என்னோடேகூட நீங்களும் - அசைந்திசைந்து போற்றவும்.

௫. கர்த்தாவால் சீவன் பெற்றிருக்கும் - கணக்கில்லா வகைகளே, - பணிந்துபோற்ற உங்களுக்கும் - எந்நேரமும் அடுக்குதே; - துதியாய் உங்கள் சத்தமும் - ஓர்மித்தெழும்பி ஏறவும்.

௬. பிதாவே, தேகம் ஆவியாவும் - உம்மால் அல்லோ உண்டாச்சுது, - சரீர ஈவாம் ஊணுறுநாவும். - நீர் என்னை மோட்ச வாழ்வுக்கு - தெரிந்துகொண்ட அன்புமே - மா உபகாரம், கர்த்தரே.

௭. ஆ, இயேசுசுவாமி, நீர் அன்பாலே - எல்லாப் பிசாசுகளூட - கைக்கென்னைச் சாவின் கோவிலூலே - விலக்கி நீங்கலாக்கின - ரட்சிப்புக்காக என்றைக்கும் - என் ஆவி உம்மைப் போற்றவும்.

௮. மெய்யாகத் தேற்றுந் தேவஆவி, - ஆ, உமக்குப் புகழ்ச்சியே; - உம்மாலே இந்தக் கெட்ட பாவி - இரட்சிப்புக்குள்ளானேனே, - இங்கென்னில் நன்மை ஏதுண்டோ - அதும துபயிர் அல்லோ.

௯. என்மேலே ஆரால் நன்மைபாயும், - தயாபரா, உம்மால் அல்லோ. - ஆர் என்னைக் காத்துக்கொள்ளுந் தாயும் - தகப்பனும், நீர் அல்லவோ. - சொற்கடங்காச் சகாயர் நீர் - மன்னித்திரக்கஞ் செய்கிறீர்.

௰. என்மேல் நீர் வைத்த என் சுமையை - மா உபகாரமும் என்பேன்; - அடிக்கும் பட்சமுள்ள கையை - பணிந்து முத்தஞ் செய்கிறேன்; - என் நன்மைக்காமே, உமக்கு - நான் பிள்ளை என்றுங் காட்டுது.

௰௧. இந்நேரம் மட்டும் நீர் ரட்சித்தீர், - பலவித இக்கட்டிலே - எப்போதும் என்னை ஆதரித்தீர், - கண்ணார அதைக் கண்டேனே. - மா மோசம் வந்தும், எனக்கு - சந்தோஷ சோதி தோன்றிற்று.

௰௨. இப்போதும் உம்மைப் பத்தியாக - தினம் போற்றுதிருப்பேனே; - இக்கட்டில்கூடப் பூரிப்பாக - செயங்கொண்

டாடலாகாதோ; — விழுவது விழட்டுமேன். — நான் துக்கத் துக்கிடங்கொடேன்.

௰௩. திட்பான மாய்கை என்னை விட்டு - விலகவேண்டு மென்கிறேன்; - காத்தாவே, உம்மை நான் துதித்து, - என் செல்வமென்று போற்றுவேன். - அடியேன் நெஞ்சு உமக்கு - ஒப்புக்கொடுத்திருக்குது.

௰௪. என் நாவு பேசும் நாள்மட்டாக - என் நெஞ்சசையும் மட்டுக்கும் - நான் உமதன்பைப் பூரிப்பாக - இஸ்தோத்தி ரிப்பேன் நித்தமும். - என் வாய் ஓய்ந்தாலும், ஓய்ந்திரேன்; - என் உள்ளத்தாலே போற்றுவேன்.

௰௫. நான் மண்ணில் பாடும் ஏழையான - துதியை ஏற்றுக் கொள்ளுமேன; - நான் விண்ணில் தூதருச்கொப்பான - பிற் பாடு நன்றாய்ப் போற்றுவேன்; - அப்போ நான் வானோர் கும் புடன் - புதிய பாட்டாய்ப் பாடுவன்.

J. Mentzer, † 1734.

**௨௱௭௭.** Halleluja, Lob, Preis und Ehr. (277.)



**எ**ல்லாஞ் சிஷ்டித்த நமது - தயாபர பிதாவுக்கு - அனந்த காலமாக - அல்லேலூயா மகத்துவம் - பெலன் துதி இஸ் தோத்திரம் - உண்டாயிருப்பதாக. - பார்ப்பார். - காப்பார், - வல்லமையுங் கிருபையும் அன்பும் எங்கும் - அவர் செய்கை யால் விளங்கும்.

௨. இங்நீசருக்கு மீட்பரும் - பத்தாவுமாஞ் சுதனுக்கும் - ரட்சிப்பின் அன்புக்காக - அல்லேலூயா புகழ்ச்சியும் - அனந் த ராசரிக்கமும் - உண்டாயிருப்பதாக. - பாவம் — சாபம் - எந்தத் தீங்கும் அத்தால் நீங்கும், என்றென்றைக்கும் - பாக் கியம் எல்லாங் கிடைக்கும்.

௩. மனந் திருப்பி, எங்களை - பத்தாவாம் இயேசுவினண் டை - அழைத்து, நேற்றியாக - சிங்காரிக்குந் தேவாவிக்கும்,

அல்லேலூயா புகழ்ச்சியும் - வணக்கமும் உண்டாக. - வாறபார - வாழ்வினாலுஞ் செல்வத்தாலுந் தேற்றிவாருர், - அதின் முன் ருசியைத் தாருர்.

ச. எல்லாச் சிஷ்டிகளாலேயும் - பிதா குமாரன் ஆவிக்கும் - அனந்த காலமாக - அல்லேலூயா மகத்துவம் - பெலன் துதி இஸ்தோத்திரம் - உண்டாயிருப்பதாக. - ஆமேன், - ஆமேன், - அவர் அந்தம், அருமந்தம், பரிசுத்தம், - பரிசுததம், பரிசுத்தம்.

*Barth. Crasselius, † nach 1724.*

**உ௱எஅ.** Lobe den Herren, den mächtigen König. (278.)



எனது ஆத்துமமே, விழி, உட்கருத்தாச - மகிமையுள்ள கர்த்தாவைப் புகழுவாயாக. - கீதங்களே, - என் சுரமண்டலமே, - போற்ற விழிப்பீராகளாக.

உ. கர்த்தரைப் போற்று, விநோதமாய் உன்னைச் சிஷ்டித்தார், - மெய்ந்த அதிசய மீட்பினால் உன்னை ரட்சித்தார்; - உன்னைத்தாமே - தமது கைகளிலே - ஏந்தி அனுக்கிரகித்தார்.

ங. கர்த்தரைப் போற்று, எல்லாத்தையுஞ் சீருக்கமைத்தார், - உன்னைக் காப்பாற்றி, சுகத்தைத் தந்தரவணைத்தார்; - மோசம் வந்தால், - தமது செட்டைகளால் - உன்னை எப்போதும் மறைத்தார்.

ச. கர்த்தரைப் போற்று, அன்பாய் உன்னை ஆசீர்வதித்தார், - நேச வாய்க்கால்களைப் பாய்ச்சி உன்மேல் வரவிட்டார்; - கர்த்தரின் கை - வல்லது என்று நினை, - தயவாய் உன்னைச் சந்தித்தார்.

ரு. கர்த்தரைப்போற்று, என் உள்ளமே, சாக்கிரதையாக, - சகல சிஷ்டியும் அவரைப் போற்றுவதாக. - ஆத்துமமே, - உன் உபகாரியையே - போற்ற மறந்திராயாக.

*Joachim Neander, † 1680.*

### ௨௱௮௧. Nun lob, mein Seel, den Herren. (281.)



கர்த்தாவைப்போற்றிப்பாடு, - என் ஆவியே, என் உள்ளமே, - தேவன்பை நீ கொண்டாடு, - அதை மறக்கலாகாதே; - உன் பாவத்தை மன்னித்தார், - உன் கேட்டை நீக்கினார், - உன் பிராணனை ரட்சித்தார், - ருணம் அளிக்கிறார். - மகா இரக்கமான - சகாயர் ஆண்டவர், - ஒடுங்குண்டோருக்கான - துணை தயாபரர்.

௨. தாம் ஆளும் நியாயத்தாலே - முன்னாள்முதல் வெளிப்பட்டார், - உருகக தயவாலே - நிறையப்பட்டிருக்கிறார். - சினத்தை என்றென்றைக்கும் - வைக்கார்; மகா தயை - தாழ்ந்தோருக்குக் கிடைக்கும், - அது விண்ணத்தனை - உயர்ந்ததாயிருக்கும்; - கிழக்கு மேற்குக்கு - இருக்குந் தூரத்துக்கும் - கேடற்றுப் போச்சுது.

௩. தன் மைந்தருக்கன்புள்ள - பிதா இரங்கும்போல் அவர்- தமக்குப் பயமுள்ள - சன்மார்க்கருக்கிரங்கிறர். - நாம் இன்ன உருவென்று - நன்றாக அறிவார், - நாம் தூளும் மண்ணுமென்று - நினைத்திருக்கிறார்; - நாம் புல்லைப்போல்வளர்ந்து, - பூப்போலேபூக்கிறோம்; - காற்றதின்மேல்கடந்து - போனால், உலர்ந்துபோம்.

௪. ஆனாலுந் தாம் நிர்ணைந்த-உடன்படிக்கைக்கேறறதாய் - நடந்து, தாம் கற்பித்த - படியே தேவ பயமாய் - செய்தோர் மேல் என்றென்றைக்கும் - கர்த்தாவின் கிருபை - வாங்காததாய் நிலைக்கும், - அவர்கள் நன்மையை - விசாரிக்கச் சமர்த்தர் - பரத்தில் ஆளுவர், - எல்லாத்தின்மேலுங் கர்த்தர் - உயர்ந்த அரசர்.

௫. உற்சாய வேகமாக - பண் செய்யுந் தேவதூதரே, - கர்த்தாவை நேற்றியாக - துதிப்பதுங்கள் வேலையே. - விண்

மண்ணில் எங்குமுள்ள - மா சேனையாகிய - எச்சிஷ்டியும் அன்புள்ள - கர்த்தாவைச் சகல - விதவகையுமாக - துதிப்ப தாகவே, - கர்த்தாவைப் பத்தியாக - துதி, என் ஆவியே.

*Johann Graumann*, † 1541.

**௨௱௮௩.** Ich singe dir mit Herz und Mund. (283.)



நான் தேவரீரை, கர்த்தரே, - துதிப்பேன்; அடியேன் - எல்லாரின் முன்னும் உம்மையே - அறிக்கைபண்ணுவேன்.:.:

௨. ஆ, எந்தப் பாக்கியங்களும் - உம்மால் தான் வருதே, - உண்டான எந்த நன்மைக்கும் - ஊற்றானவர் நீரே.:.:

௩. உண்டான நன்மையாவையும் - நீர்தாறீர, கர்த்தரே; - உம்மாலொழிய எதுவும் - உண்டாகக் கூடாதே.:.:

௪. நீர் வானத்தை உண்டாக்கின - கர்த்தா, புவிக்கு நீர் - கனிகளைக் கொடுக்கிற - பெலனையுந் தந்தீர்.:.:

௫. குளிர்ச்சிக்கு மறைவையும் - தாறீர; எங்களுக்கு - புசிக்கிறதுக்கப்பமும் - உம்மால் உண்டாகுது.:.:

௬. ஆரால் பலமும் புஷ்டியும் - ஆராலே தான் இப்போ - நற்காலஞ் சமாதானமும் - வரும், உம்மால் அல்லோ.:.:

௭. ஆ, இதெல்லாம், சுயாபரா, - நீர் செய்யுஞ் செய்கையே; - நீர் எங்களைத் தற்காக்கிற - அன்புள்ள கர்த்தரே.:.:

௮. உம்மாலே வருஷாந்தரம் - அல்லோ பிழைக்கிறோம்; - உம்மாலே நாங்கள் விக்கினம் - வந்தாலும், தப்பினோம்.:.:

௯. பாவிகளான எங்களை - சுறுக்காய்த தண்டியீர், - உம்முடையோரின் பாவத்தை - அன்பாய் மன்னிக்கிறீர்.:.:

௰. இக்கட்டில் நாங்கள் கூப்பிட்டால், - நீர் கேட்டிரங்குவீர், - நீர் எங்களை மா தயவால் - ரட்சிதது தாங்கிறீர்.:.:

௰௧. அடியார் அழுகைக்கெல்லாம் - செவிகொடுத்து, நீர் - எங்கள் கண்ணீர்களை எல்லாம் - எண்ணி இருக்கிறீர்.:.:

௰௨. அனந்த வாழ்வையும் இனி - கொடுக்கப்போறீரே; - அடியாருக்கு அக்கதி - அப்போதுண்டாகுமே.:.:

௰௩. ஆ, களிகூர்ந்து பூரித்து - மகிழ், என் மனதே, - பராபரன் தான் உனது - அனந்த பங்காமே.:.:
௰௪. அவர் உன் பங்கு, உன் பலன், - உன் கேடகம், நன்றாய் - திடப்படுத்தும் உன் திடன்; - நீ கைவிடப்படாய்.:.:
௰௫. உன் நெஞ்சு ராவும் பகலும் - நூக்கிப்பதென்ன, நீ - உன் கவலை அனைத்தையும் - கர்த்தாவுக்கொப்புவி.:.:
௰௬. உன் சிறுவயது முதல் - பராமரித்தாரே; - கர்த்தாவால் வெகு மோசங்கள் - விலக்கப்பட்டதே.:.:
௰௭. கர்த்தாவின் அருளுகை எல்லாம் - தப்பற்றதல்லவோ; - ஆம், அவர் செய்கிறதெல்லாம் - நன்றாய் முடியாதோ.:.:
௰௮. அகையினால் கர்த்தாவுக்கு - நீ பிள்ளைப்பத்தியாய் - எப்போதுங் கீழ்ப்படிந்திரு, - அப்போதே நீ வாழ்வாய்.:.:

*Paul Gerhardt*, † 1676.

## ௨௱௮௭. Herr Gott, dich loben wir. (286.)



பணிந்து உம்மையே
துதிப்போம், கர்த்தரே.



திரியேக சுவாமி, உமக்கு
விண் மண் புகழ் செலுத்துது.
எல்லாப் பரத்துச் சேனையும்
வெளிச்ச கேருபீன்களும்
சாஷ்டாங்கமாகக் கும்பிட்டு,
இடும் முழக்கமாவது:



மாசற்ற சுத்தரே,
மாசற்ற சுத்தரே,



மாசற்றசுத்தரே, அருதி வுஸ்துவே.



௨. நீர் யாவையும் வியாபித்து,
சுமந்து ஆண்டோர் என்குது.
அப்போஸ்தலர், ஆதாக்களோட
தெய்வீக திவ்ஷடி புருஷர்,
செயித்த சாட்சிகள் எல்லார்,
ர்த்தாவே, உம்மைப் போற்றுவார்.
செகத்திலுள்ள உம்முட
சபை பணிந்து, உன்னத
பிதாவே, உம்மை நித்தமும்
உம்மோடொன்றுஞ் சுதனையும்
தேவாவியையுங் கும்பிட்டு,
வணங்கி ஸ்தோத்திரிக்குது.



௩. ராசாதிராசா இயேசுவே,
அனாதி தேவமைந்தனே,
நரரை மீட்க, தாழ்மையாய
பிறந்து. சாவைப் பலமாய்
பரிகரித்து, மோட்சத்தின்
பதவியைத் திறந்துபின்
பிதாவின் பாரிசத்தில் நீர்
போய் உளுக்கார்ந்திருக்கிறீர்.
உயிருள்ளோர் செத்தோர்களை
நீர் நியாயந்தீர்க்கிற துரை.



௪. நீர் ரத்தஞ் சிந்தித் தேடின
சபையை ரட்சியும், கர்த்தா.



எல்லா வானோர்களோடேயும்
அடியார் பேரை எழுதும்.



ஆ, கிறிஸ்துவே, நீர் உமது
சனத்தை மேய்த்துக் கடாட்சித்து,



ஆசீர்வதித்து, என்றைக்கும்
பராமினுக்கால் சோடியும்.



ரு. தினம் எப்போதும் உமக்கே
இஸ்தோத்திரம், திரியேகரே.



பேய் பண்ணும் மோசம் யாவையும்
விலக்கி, எங்களோடிரும்.
நீர் எங்கள் ஆபத்தில் மகா
அன்பாயிரும், தயாபரா.
அடியார் நம்பி வாஞ்சிக்கும்
படி, இரக்கங் காண்பியும்.



கர்த்தாவே, உம்மை நம்பினோம்,
கெடாதிருக்கக் கடவோம்.



ஆ - மேன்.

*D. M. Luther*, † 1546.

உ௱அஅ. Sei Lob und Ehr dem höchsten Gut. (288.)



௧. மகா அதிசயங்களை - செய்தென்னைப் பூரிப்பித்து, - உபத்திர வத்தின் பாரத்தை - இரக்கமாய்க் கழித்து, - ரட்சிக்கிற தயா பரர் - இஸ்தோத்திரிக்கப்பட்டவர்; - கர்த்தாவுக்குப் புகழ்ச்சி.

௨. கர்த்தாதிகர்த்தா, தேவரீர் - எல்லாத்தையும் நன்றாக - சிஷ்டித்துத் திட்டம் பண்ணினீர் - என்றும்மைப் பணிவாக - விண் மண் கடல் ஆகாசத்து - சேனை முகங்கள் போற்றுது. - கர்த்தாவுக்குப் புகழ்ச்சி.

௩. சிஷ்டித்ததைப் பராபரன் - காப்பாற்றி, நித்தந் தா மே - அன்புள்ள பராமரிப்புடன் - நடத்தச் சித்தமாமே. - அவருடை விசாரிப்பு - குறையில்லாததானது; - கர்த்தாவுக் குப் புகழ்ச்சி.

௪. ஆ, கேளும் என்றென் துன்பத்தில் - கர்த்தாவைக் கெஞ்சி வந்தேன்; - அப்போ நான் ஏற்ற வேளையில் - மகா ரட்சிப்பைக் கண்டேன். - இதறகென் நாவே, நீதந்து சொல், - என்னோடெல்லாரும் பாடுங்கள்; - கர்த்தாவுக்குப் புகழ்ச்சி.

௫. கர்த்தர் எந்நாளுந் தமது - சனத்தைக் கை விடாரே, - கண்ணோக்கி, தேற்றிக் கடாட்சித்து, - சகாயராய் வாறாரே. - இருளில் இடறவொட்டார், - தாய் போல் கை தந்தழைக்கி றார். - கர்த்தாவுக்குப் புகழ்ச்சி.

௬. பூலோகத்தாரின் ஆறுதல் - துணையும் அன்புங் கூட - அவியும்போது, ஏழைகள் - திரும்பக் களிகூர, - மிகுந்த தேவ தயவு - சம்பூரணங் கொடுக்குது. - கர்த்தாவுக்குப் புகழ்ச்சி.

௭. நான் தேவரீரை என்றைக்கும் - மகிழ்ச்சியாய்த் துதிப் பேன்; - நான் உம்மை நித்த நித்தமும் - புகழ்ந்திஸ்தோத்தி ரிப்பேன். - என் ஆத்துமமுந் தேகமும், - கர்த்தாவே, உம் மைப் போற்றவும். - கர்த்தாவுக்குப் புகழ்ச்சி.

௮. மெய்மார்க்கத்தாரே, கர்த்தரை - துதித்துக்கொண் டிருங்கள், - அவருடைய நாமத்தை - எந்நேரமுந் தொழுங் கள்; - பொய்த் தேவர் செவிடூமையர், - கர்த்தா கர்த்தாவே ஆண்டவர். - கர்த்தாவுக்குப் புகழ்ச்சி.

௯. நாம் தேவசன்னிதியிலே - மசா மகிழ்ச்சியாக - வந்துன்னத கர்த்தாவையே - வணக்கஞ் செய்வோமாக. - பராபரனைப் போலே ஆர், - எல்லாத்தையும் நன்றாக்கினார். - கர்த்தாவுக்குப் புகழ்ச்சி.

J. J. Schütz. † 1690.



# மெஞ்ஞானத்தின் பேரிலே பாடுகிற பாட்டு.

உ௱அ௯. Herr, aller Weisheit Quell und Grund. (289.)



கர்த்தாவே, ஞானந் தாரோர் நீர், - என் பைத்தியத்தை அறிவீர்; - நீரே துணை செய்யாவிட்டால், - நான் என்றைக்கும் வீண் வேலையாள்.

உ. என் சென்மத்தால் என் புத்திக்கு - இருள் பிடித்திருக்குது; - என் நெஞ்சுக்குத் துற்சுபாவமும் - உண்டே, கலக்க நினைவும்.

௩. தெய்வீக காரியத்திலே - என் சுய புத்தி போதாதே; - அடியேனுக்கு நல் வழி - என்றால் தெரிவதெப்படி.

௪. ஏல்லா லௌகீக ஞானமும் - விவேகமும் உண்டாகியும், - நான் உமதொளியின்றியே - இருந்தால், நான் நின் மூடனே.

௫. யாதொருவன் மா கல்வியை - கற்றாலும், தேவ பயத்தை - அடையானேயாகில், அவன் - கல்லாரிலும் நிர்ப்பாக்கியன்.

௬. தன்னிச்சையான அறிவு - நரரை மோசம்போக்குது; - அகந்தையுள்ள புத்திமான் - எத்திக்கிலும் இடறுவான்.

எ. அநேகர் தங்கள் புத்தியை - சார்ந்ததினாலே தங்களை - பிசாசுடைய கையிலே - ஒப்புக்கொடுக்கிறதுண்டே.

அ. ஆ, என் பிதாவே, என்னிலே - இருக்கும் பைத்தியத்தையே - அகற்றி, புது நெஞ்சையும் - குணத்தையுந் தந்தருளும்.

௯. நீர் உமதாசனத்தண்டை – இருக்கும் தெய்வ ஞானத்தை – என் ஆத்துமத்துக்கருளும், – இவ்வேண்டுதலைக் கேட்டிரும்.

௰. அதினுடைய ஒளிவு – இருண்ட புத்திக்கானது; – அத்தாலே நல்ல புத்தியும் – சீரான மார்க்கமும் வரும்.

௰௧. அதும்பிலே பிறந்தது, – அதினுடைய மேன்மைக்கு – ஒப்பில்லை, புண்ணியம் எல்லாம் – அதின் வரங்களால் உண்டாம்.

௰௨. அது துக்கித்தவர்களை – நன்றாகத்தேற்றி, மனதை – அதின் விசாரங்களுக்கு – நன்றாக நீங்கலாக்குது.

௰௩. பிழைக்கவுஞ் சுகிக்கவும் – அதே வழியைக் காண்பிக்கும்; – அதின் சொற்கேட்ட மனுஷன் – செத்தும், பிழைத்திருப்பவன்.

௰௪. ஆ, எனக்கும் நீர் தயவை – செய்தும்முடைய ஞானத்தை – என் ஏழை ஆத்துமத்திலே – இறங்கப்பண்ணும், கர்த்தரே.

௰௫. அத்தாலே என்னை முழுதும் – புதியோனாக்கியருளும்; – அத்தால் என் வேலை லக்குக்கு – நேராய் வரக்கடவது.

௰௬. நான் உம்முடைய சித்தத்தை – எப்போதும் நோக்கிக்கொண்டதை – அறிய, நல் உணர்வையே – அத்தால் அளியும், கர்த்தரே.

௰௭. அத்தாலே திறமையையும் – நான் சத்தியத்தை என்றைக்கும் – கோணுப்படிக்குக் காக்கிற – குணத்தையும் நீர் அருள.

௰௮. நான் உம்முடைய வார்த்தையை – சிநேகித்து, சன்மார்க்கரை – சேர்ந்தும்முடன் எந்நேரமும் – செபத்தால் சஞ்சரிக்கவும்.

௰௯. நான் நல்ல புத்தியுள்ளோனாய் – இருந்தெப்போதுந் தயவாய் – அடுத்தவனைப் பார்க்க, நீர் – வரம் அளிக்கக் கடவீர்.

௨௰. விசேஷமாக உம்முட – சிநேகத்தில் நான் வளர, – இதே மெஞ்ஞானம்; தேவரீர் – நின்மூடனைச் சிநேகியீர்.

*P. Gerhardt*, † 1676.



# ஞானப் பத்தாவோடே ஐக்கமாகிறதின் பேரிலே பாடுகிற பாட்டு.

**௨௱௬௰.** Wie schön leucht uns der Morgenstern. (290.)



**ம**கா அருளின் சோதியை – பாராட்டும் வெள்ளி எத்தனை – பிரகாசமாய் விளங்கும். – தாவீதின் மைந்தன், இயேசுவே, – நீர், நீர் என் மணவாளனே, – என்பொக்கிஷம் என்பங்கும். – முற்றும் – சுற்றும் – தயவாலும் உண்மையாலும் நீர் நிறைந்தோர், – மேன்மை நாமமும் அடைந்தோர்.

௨. என் முத்தே, என் கிரீடமே, – உம்மோடே, தேவ பிள்ளையே, – நான் ஐக்கமாகவேணும். – உயர்ந்த ராசா, உமது – நற்சுவிசேஷம் எனக்கு – அமிர்தம் பாலுந் தேனும். – ஐயா, – நய – தேவ ரூபே, வாடாப் பூவே, நீரே யாவும் – சீவ ஊற்றும் மெய் மன்னாவும்.

௩. என் செம்பே, வான யஸ்பியே, – மினுக்கிக்கொள்ளும் நேசமே, – என் நெஞ்சில் ஒளிவாடும். – நான் உமக்குள்ளே என்றைக்கும் – நிலைக்க, நீர் எந்நேரமும் – அன்பாக என்னைப் பாரும். – ஆன – ஞான – செல்வம்நீரே, தேவரீரே, நான் அறியும் – வாழ்வும் இன்பமும் கதியும்.

௪. சிநேகமுள்ள பார்வையால் – அடியேனை நீர் நோக்கினால், – பரம் வெளிச்சங் காட்டும். – நீர் சொல்லும் இன்பச் சொற்களும் – தருஞ் சரீரம் ரத்தமும் – என் ஆத்துமத்தை ஆற்றும். – தேற – சேர – கிட்டும் என்னை நற்றிடனைத் தந்தையும், – அன்புமாய் அரவணையும்.

௫. பிதாவே, நீர் அநாதியில் – என்பேரிலே குமாரனில் – சிநேகம் வைத்த கர்த்தா; – குமாரன் என்னைத் தமக்கே –

மனைவி என்றன்புடனே - தெரிந்துகொண்ட புத்திரா. - மெத்த - கெட்ட - பாவியான என்னை வான கர்த்தர் தாமே - நோக்கினதிரக்கமாமே.

௬. கின்னரம் யாழும் வீணையும் - சங்கீதவாத்தியத்தையும் - சந்தோஷமாய்க் கேட்கட்டும். - அன்புள்ள இயேசுவுடனே நான் என்றென்றைக்கும் வாழ்வதே - என் ஆவியைத் திடத்தும். - ஆடி - பாடி. - கிறிஸ்துதாமே நேசராமே என்று ஓதும் - சந்தம் இன்பமே எப்போதும்.

௭. மகிழ்வேன். என் சிநேகிதர் - அல்பா ஓமேகா வென்பவர். - என் நேசர் ஆதியந்தம். - இனிமோட்சானந்தத்திலே - நான் அவரண்டை சேர்வேனே. - என்பாக்கியம் அனந்தம். - ஆமேன் - ஆமேன். - வா, ரட்சிப்பே. வா, கெலிப்பே, உனக்காக - வாஞ்சிப்பானேன், சேர்வாயாக.

*Philipp Nicolai*, † 1608.



## விசுவாசிகளுடைய உள்ளான மகிமையின் பேரிலே பாடுகிற பாட்டு.

௨௱௯௨. Was hat gethan der heilge Christ. (292.)



என் நெஞ்சே, கிறிஸ்துவின்மகா - அதிசயத்தைப்பாடிவா, - கொடிய சாவை அவர்தான் - விழுங்கிப்போட்ட பலவான்.

௨. தாம் சிந்தின இரத்தத்தின் - பலியால் அவர் உலகின் - கடன்களைச் செலுத்தினார், - பிசாசையுஞ் செயங்கொண்டார்.

௩. பரத்திலும் புவியிலும் - எல்லாத்தின் அதிகாரமும் - அடைந்த இந்த ஆண்டவர் - என் கர்த்தா, என் இரட்சகர்.

௪. என் நெஞ்சை அவர் தம்மண்டை — திருப்பிக்கொண்
டடியேனை — தம்மோடே சேர்த்திருக்கிறார்; — தாம் தாமும்
என கதியானார்.

௫. நான் அவராலே நற்கிளை, — அவருடைய நீதியை — தரித்
துக்கொண்டிருக்கிறேன், — அத்தாலே மகிமையாவேன்.

௬. அறுகி சூரியன் என்னில் — வெளிச்சமாய் விளங்கை
யில், — என் மேன்மை தூதர் மேன்மைக்கு — ஒப்பானதா
யிருக்குது.

௭. பிதா அடியேன் பேரிலே — இரக்கம்வைத்தென்னுட
னே: — நீ கிருபை அடைந்தவன், — நீ நம்முடைய புத்திரன்;

௮. நீ வேண்டியதை நம்மைக் கேள், — நாம் தாறோம், ஏனெ
னில் உன்மேல் — கண்ணோக்கமாந் தகப்பனார் — நாம் தானே
என்றுரைக்கிறார்.

௯. என் ரட்சகராம் இயேசுவால் — நான் சேர்க்கப்பட்ட
படியால் — தேவாவியின் வரங்களும் — அடியேனுக்ககப்படும்.

௰. அது ஊறும் அவரிலே — இருந்தென்மேலேபாயுதே.—
செடியினால் கிளைகளும் — பலத்துப்போய்க் கனி தரும்.

௰௧. பேயோடெதிர்ப்பதற்கு நான் — என் இயேசுவாலே
பலவான்; — என் பாவம் யாவும் எனக்கு — மன்னிக்கப்பட்
டிருக்குது.

௰௨. நியாயப்பிரமாணம் பாவியை — சபிக்குதென்று மன
தை — கலங்கப்பண்ணப் பார்க்கிற — பிசாசின் வற்மம் விருதா.

௰௩. அதென்னைச் சிற வரச்சே, — நான் மீட்பர் மரணத்தி
லே — முழுகின இஸ்நானத்து — முழுக்கென் கோட்டையா
னது.

௰௪. சாவென்னைக் குத்தியும், அத்தால் — நான் சாவதில்லை;
ஏனென்றால் — நான் கிறிஸ்துக்குள் இருக்கிறேன், — நான்
சாவில் சீவன் அடைவேன்.

௰௫. அன்புள்ள தேவமைந்தனே. — என் வாழ்வே, என்
மகிழ்ச்சியே, — என்னாலே உமக்கென்றைக்கும் — இஸ்தோத்
திரம் உண்டாகவும்.

*Stephan Praetorius*, † 1603.



# சீயோனுடைய அங்கலாய்ப்பின் பேரிலே பாடுகிற பாட்டு.

**௨௱௯௯.** Ach Gott, vom Himmel sieh darein. (296.)

சங்கீதம் ௰௨.



ஆ, சுவாமி. இப்பூலோகத்தை - பரதபித்துப் பாரும்; - குறுகுது, நல்லோர சபை - சன்மார்க்கர் லக்ஷம் தாழும்; — தெய்வீக சொல்லைக் கேட்பார் ஆர், - புவியில் விசுவாசிப்பார் - மா அபுரூபமானோர்.

௨. வீண் தோற்றலானபோதனை - நார் குதால் நடக்கும்; - நிசமில்லாத தப்பறை - அநேகரால் பிறக்கும். - வெவ்வேற உபதேசித்து, - இன்சொல்களாலே மங்கைக்கு - மா கேடுண்டாக்கிறார்கள்.

௩. கள்ளத்தன உதடெல்லாம் - அறுந்து போவதாக; - ஓய் எங்கள் வாய் மேல்வட்டமாம் - என்றும், ஆர் எதிராக - நிற்பான். ஆர் எங்கள் ஆண்டவன் - எனவும் மகா இடும்புடன் - விஷம் இறைக்கிறார்கள்.

௪. பாழான ஏழைகளுட - ரட்சிப்புக்காக வாறேன். — அவர்கள் கெஞ்சி வேண்டின - அனுக்கிரகத்தைத் தாறேன்; - நன்றாக நமது மொழி - தீயோரின்மேலே குமுறி, - நல்லோரைத் தேற்றும் என்பார்.

௫ கர்த்தாவின் சொல் ஏழாம் விசை - குகையிலே கொட்டுகாடு - உருக்கப்பட்ட வெள்ளியை - போல்சுத்தமாயிருந்து. - எல்லா உபத்திரவத்திலும் - நல் மாற்றாய்க் கண்டு, எங்கேயும் - வெளிச்சமாய் விளங்கும்.

௬. ஆ, அதைச்சுத்தமானதாய் - நீர் எங்களுக்குக்காரும்; - அமார்க்கர் எங்களுக்குள்ளாய் - இடங்கொள்ளாதே பாரும். - அதேனெனில் பொய்ப் போதகம் - நுழைந்தால், தீயோர்சதனம் - மகா விஸ்தாரமாகும்.

*D. M. Luther,* † 1546.



# மரணத்தின் பேரிலே பாடுகிற பாட்டுகள்.

## ௩௱௬. Christus der ist mein Leben. (306.)



என் சீவன் கிறிஸ்து தாமே. - அத்தாலே எனக்கு - என் சாவாதாயமாமே. - நெஞ்சே! மகிழ்ந்திரு.

உ. நான் இயேசு வசமாக - சேர்ந்தென்றும் வாழவே, - மகா மகிழ்ச்சியாக - பிரிந்து போவேனே.

௩. பாடற்றுப்போம், இந்நாளே - என் நோவின் முடிவு, - என்பாவம் இயேசுவாலே - நிவிர்த்தியாயிற்று.

௪. நான் பேச்சு மூச்சில்லாமல் - குளிர்ந்துபோகச்சே, - என் ஆசையைத் தள்ளாமல் - கண்ணோக்கும், கர்த்தரே.

௫. விளக்குட கொழுந்து - அவியும்போல், என்னில் - விணுவெல்லாம் அறுந்து - கலைந்துபோகையில்,

௬. அப்போ நன்றாய் அமைந்து - கலங்கலன்றியே, - நான் நித்திரை அடைந்து - தூங்கட்டும், இயேசுவே.

௭. நான் உம்மைக் கெட்டியாக - பிடித்தும்முடனே - அனந்த பூரிப்பாக - வாழட்டும், இயேசுவே.

*Anna, Gräfin von Stolberg, um* 1600.

## ௩௱௭. Herr Jesu Christ, wahr Mensch und Gott. (307.)



என் இயேசுவே, தயாபரா, - என்மீட்புக்காகச் சகல - உபாதியோடுஞ் சாவையே - அனுபவித்த கர்த்தரே,

உ. ஆரோக்கியமில்லாதோனாய் - கிடக்கிற இப்பாவிக்காய் - நீர் பட்டவாதை நோவையும் - நினைத்திரங்கியருளும்.

௩. என் பார்வையும் என் கேள்வியும் - என் வாயுடைய சத்தமும் - எல்லாமில்லாதே போகையில், - என் மூச்சொடுங்கி வருகில்,

௪. கிறுவெல்லாம் அமிழுகில், - நரர்துணை வீணாகையில், - அப்போது என் இக்கட்டிலே - சகாயம்பண்ணும், இயேசுவே.

௫. இவ்வழுகையின் பள்ளத்தை - நான் விடும்போதென் வாதையை - குறுக்கி, பேயின் சூதையும் - விலகப்பண்ணி யருளும்.

௬. என் ஆவியை நீர் உமது - வசத்தில் சேர்த்தபிறகு - என் தேகம் அன்று மட்டுக்கும் - குழியில் இளைப்பாறவும்.

௭. நான் பூரிப்போடந்நாளிலே - எழுந்திருக்க, காந்தரே, - நீர் சாபத்தீர்ப்பனைத்துக்கும் - இவ்வேளையை விலக்கவும்.

௮. அதேனெனில் நீர் சொன்னீர்: - மெய்யாகவே, மெய்யாகவே, - ஆர் என்னைப் பற்றிக்கொண்டிப்போ - என்வார்த்தையைக் கைக்கொள்வாரோ,

௯. அவன் ரட்சிக்கப்படுவான், - தன் ஆக்கினைக்குத் தப்பினை, - ஆம் அவன்மரணத்தையும் - ருசிப்பதில்லை, என்றைக்கும்

௰. சாவவனைக் கொல்லாதேபோம். - நாம் அவனை எழுப்புவோம், - என் மோட்சராச்சியத்திலே - என்னோடே வாழ்வான் என்றீரே.

௰௧. ஆ, இந்த வார்த்தையின்படி - நீர் தயவாய்ச் செய்தருளி, - அடியேன் பாவம் யாவுக்கும் - மன்னிப்பைக் கட்டளையிடும்.

௰௨. முடிய தேவபக்தியாய் - மிகுந்தபொறுமையுமாய் - இருக்க, நீர் என் நெஞ்சிலே - திடனைதாரும், இயேசுவே.

*Paul Eber*, † 1569.

## ௧௱௮. Jesus, meine Zuversicht. (308.)



என்னை மீட்டுத் தாங்கிய - இயேசு சீவனுள்ளோராமே; - அவரை அறிகிற - நான் மகிழ்ந்திருக்கலாமே; - என்னைச் சாவின் ராத்திரி - ஏன் கலக்குது இனி.

௨. ரட்சகர் பிழைக்கிறார், - நானும் அவரோடிருந்து - வாழ்வேன்; சாவை நீக்குவார், - எனக்கென்ன பயமுண்டு; - சிரசை அவயவம் - சேர்வது அவசியம்.

௩. நம்பிக்கையின் கட்டினால் - அவரோடே கட்டப்பட்டேன், - விசுவாசப்பத்தியால் - அவரை அணைக்கக் கற்றேன்; - சாவால் நானும் அவரும் - வெவ்வேறாகோம், என்றைக்கும்.

௪. நான் சதை தான், ஆகையால் - எப்போதோ தூளாகச் சாவேன்; - ஆனால் மீண்டும் அவரால் - மண்ணைவிட்டுயிர்த்தோறுவேன், - நித்தம் மகிமையிலே - அவரோடிருக்கவே.

௫. இந்தத் தோலினாலே தான் - அப்போ மூடப்பட்டு நிற்பேன்; - இந்தத் தேகத்தோடே நான் - சம்பிரானைத் தரிசிப்பேன், - என்றும் இச்சதையுடன் - இயேசுவை நான் பார்ப்பவன்.

௬. நான் இக்கண்ணால் அவரை - அப்போ கண்டறிந்திருப்பேன். - நான், நான் தான் என் கைகளை - அவரைத் துதித்தெடுப்பேன். - இந்தத்தாழ்வு மாத்திரம் - என்னைச் சூழாதப்புறம்.

௭. இங்கே நான் தவிக்கிறேன், - அங்கே மகிமைதரிப்பேன்; - மண்ணில் மண்ணாய்த்தாங்கினேன், - விண்ணில் விண்ணோனாய்க் கெலிப்பேன்; - ஜீவகூறுடைய நான் - அங்கே ஆவியங்கத்தான்.

௮. என் அவயவங்களே, - நீங்கள் பூரிப்பாவதாக. - செத்தபின் திரும்பவே - மாஎக்காளசத்தமாக - கடைசியில் சுவாமியார் - உங்களை எழுப்புவார்.

௯. நான் குழிபாதாளத்தை - நரகத்தையும்நகைப்பேன். - மேகங்கள்மேல்கால்களை - கிறிஸ்துவாற நாளில்வைப்பேன். - தீமைகளெல்லாம் அப்போ - அற்றுப்போயிற்றல்லவோ.

௰. ஆனால் லோக இச்சையை - இப்போதான் மிதித்துப்போடு, - ஆவியே, நீ இயேசுவை - சேர்ந்து, என்றும் அவரோடு - தங்க நாடும் வாழ்வுக்கு - போக ஆயத்தப்படு.

**Louise Henriette, Kurfürstin von Brandenburg, † 1667.**

**௩௱௯.** Wer weiss, wie nahe mir mein Ende. (309.)



நாள் போம், என் சாவு வேளை சேரும், - இதெத்தனை சமீபமோ; - என் ஜீவ ஓட்டம் நிறைவேறும், - அவஸ்தை எப்போ

காணுதோ. - ஆ, கிறிஸ்துவின் ஒதுக்கிலே - மரிப்பேனாக, கர்த்தரே.

உ. நான் காலமே சுகமானாலும், - ராச் சேரும் முன் வேறு கலாம், - என் காலை எங்கே நான் வைத்தாலும், - என் பிராண னுக்கு மோசமாம். - ஆ, கிறிஸ்துவின் மு.

௩. குணப்பட என் தாமதிப்பேன், - இப்போ ரட்சிப்பைப் பற்றுவேன், - தினம் என் முடிவைச் சிந்திப்பேன், - என் தீ பத்தை நான் சோடிப்பேன். - ஆ, மு.

௪. நான் பயண முஸ்திப்பாய் நித்தம் - இருந்துகொண் டெப்போதைக்கும், - கர்த்தாவே, உம்முடைய சித்தம் - என் றச்சமற்றுச் சொல்லவும். - ஆ, மு.

௫. விண் எனக்குத் தேன்போல் தித்தித்து, - மண் பிச்சைப் போல் கசக்கவும்; - மயக்கங் கண்டால், நீர் நேரிட்டு - என் நெஞ்சை உயர இழும். - ஆ, மு.

௬. ஆ, சுவாமி, கிறிஸ்தின் நீதியாலே - என் பாவமுக்கை மூடுமேன்; - நான் அதை விசுவாசத்தாலே - உடுத்துச் சுத்த மாகிறேன். - ஆ, மு.

எ. ஆம், அவர் காயங்கள் அடியேன் - சுகப்படும் அடைக் கலம்; - மரித்தோர் அவர், நான் மரியேன், - சரீரச்சாவோ பாக்கியம். - ஆ, மு.

அ. என் சாவு ரட்சகரைவிட்டு - அடியேனைப்பிரிக்காதே. - நான் அவர் பக்கத்தில் கையிட்டு, - என் சுவாமி என்று சொல வேனே. - ஆ. மு.

௯. என் ஞானஸ்நானத்தில்முன்தானும் - நான் இயேசுவை அணிந்தவன், - இநநாளும் தெய்வகடாட்சங் காணும், - நான் உம்முடைய புத்திரன். - ஆ, மு.

௰. நான் அவர் மாமிசத்தை உண்டு, - நான் அவர் ரத்தஞ் சாப்பிட்டேன், - நான் உமதன்மைப் பெற்றிருந்து, - அவருக் குள் தரிக்கிறேன். - ஆ. மு.

௰க. என் சீவன் இன்றைக்குப் போனாலும், - என் மீட்ப ரால் நான் பாக்கியன்; - என் சாலம் நாளைக்கு வந்தாலும், - நான் அவர்க்குள்ளிருப்பவன். - ஆ, மு.

௰உ. ஆனால் நீர் என்னை இங்கே வைக்கும் - நாள் மட்டும் என்னை உமக்கே - சரிப்போனப்போல் என்றென்றைக்கும் - நடத்தும், கடைசியிலே - நான் கிறிஸ்துவின் ஒதுக்கிலே - மரிப்பேனே, என் கர்த்தரே.

***Aemilie Juliane, Gräfin von Schwarzburg-Rudolstadt, † 1706.***

**௩௱௰௧.** Eilt Jahr und Stunden dieser Zeit. (311.)



நாள்போகுது, போகட்டுமேன், - அநித்தியத்தை நான் நாடேன்; - நான் பற்றிக்கொள்ளும் நித்திய - பொருள் என் பரம பிதா.

௨. என் ஆவிக்கென் நெருக்கமும் - என் நோவும் பாரமாகியும், - பரகதியின் நினைவு - மா ஆறுதல் உண்டாக்குது.

௩. இக்கட்டால் என் மனசிலே - வியாகுலமுண்டாகச்சே, - அதென்னை மோட்ச ஊருக்கு - நேரே நடக்க ஏவுது.

௪. இழவுக்குக் கோவில் மணி - அடிபடுகிற தொனி - என் ஆவிக்கின்பம், எனக்கு - பரத்தை நினைப்பூட்டுது.

௫. ஓர் நேசன் சென்று போகையில், - நான் துக்கப்பட்டும், மோட்சத்தில் - நானும் இனி பிரவேசிப்பேன் - என்றென்னை ஆற்றித் தேற்றுவேன்.

௬. சவங்கள் கல்லறைகளில் - இக்கட்டும் நோவுமன்றியில் - கிடக்கும், நானும் அப்படி - கிடந்து தூங்குவேன் இனி.

௭. எத்துன்பத்துக்கும் நீங்கலாய் - என் ஆவி இயேசு வசமாய் - இருக்கும், என் எலும்புக்கும் - புது உயிர் தரப்படும்.

௮. என் சாவில்தான் என் செல்வமும் - அளவில்லா மகிழ்ச்சியும் - துவக்குது, புவியை நான் - விடும்போதே நான் மோட்சவான்.

**௯. அப்போ பிரிந்த ஆத்துமம் - நற்றூதராலே பாக்கியம் நிறைந்த பரதீசுக்கு - கொண்டுபோகப்படுகுது.**

௰. அத்தால் நல் மாறுதல் உண்டே - என் ஆவிக்கு அச்சணமே - கர்த்தாவைப் பார்க்கும் மேன்மைக்கு - வழி திறந்து போகுது.

௰௧. அவர்க்கும் ஆட்டுக்குட்டிக்கும் - எல்லா வணக்கத்தோடேயும் - அங்கே ஏராள வானவர் - துதி செலுத்தி நிற்கிறார்.

௰௨. என் ஆவியில் அப்பரம - இஸ்தோத்திரத்தைக் கேட்கிற - நான இந்த லோகத்தை இனி - இச்சித்துக் கொள்வதெப்படி.

௰௩. என் மீட்பரை என் ஆவியால் - நான் பற்றிக் கொண்ட படியால், - இப்பூமியின் நலம் பொலம் - எல்லாம் பின்னான காரியம்.

௰௪. அங்கே சேர்ந்தோரின் பாக்கியம் - மா உறுதி, மா பத்திரம். - பாத்தின் நன்மை என்றைக்கும் - இருக்கும் இன்பத்தைத் தரும்.

௰௫. மோட்சானந்தத்தின் ஒளிவு - அங்கே வந்தேறினோனுக்கு - மா ஆச்சரிய அழகும் - கோர்த்தியுமாய்ப் பிரகாசிக்கும்.

௰௬. ஆதிமுதல் பரகதி - அடைந்தவர்களோடினி - நான் அங்கே வாழ்வதெனக்கு - மா இன்பமாயிருக்குது.

௰௭. வெண் வஸ்திர சிங்காரத்தை - தரித்த மோட்சவான்களை - நான் சேர்ந்து, அவர்களுடன் - சாவாசம் பண்ணப் பெற்றவன்.

௰௮. நான் தீர்க்கதரிசிகளும் - மகாத்துமாக்கள் யாவரும் - பெரிய மகிமையுடன் - இருக்கும் வாழ்வைப் பார்ப்பவன்.

௰௯. நானும் அவர்களோடினி - தேவாட்டுக்குட்டிக்குத் துதி - செலுத்தப் போறேன், எனக்கும - அப்பாக்கியம் அகப்படும்.

௨௰. இச்சிக்கப்பட்ட சீவனே, - என் ஆவி நாடுஞ் செல்வமே, - உன்னால் எப்போ நான் பூரிப்பேன், - எப்போ நான் அங்கே சேருவேன்.

G. Arnold, † 1714.

## ௩௱௰௨. Wann mein Stündlein vorhanden ist. (312.)



நான் சாலம் பண்ணும் நேரத்தில் - அடியேனைத்தற்காரும். - என் இயேசுவே, நான்போகையில், - நீரே துணையாய்வாரும். - என் ஆவியை என் முடிவில் - நீர் உம்முடைய கைகளில் - அன்பாக ஏற்றுக்கொள்ளும்.

௨. என் பாவங்களின் பாரத்தால் - என் மனதென்னைக் குத்தி - வியாகுலப்படுத்தினால், - நீர்தான் கடன் செலுத்தி - அடைந்த மரணத்தையே - நினைத்துக்கொள்வேன், இயேசுவே; - அத்தால் மன்னிப்புண்டாமே.

௩. நான் உம்முட அவயவம் - என்றென் மனம் களிக்கும், - அவஸ்தைக்குள்ளும் உம்மிடம் - என் ஆத்துமம் தரிக்கும். - நான் செத்துஞ் சாகேன்; ஏனென்றால் - நீர் எனக்காக மாண்டதால் - அனந்தவாழ்வடைவேன்.

௪. உயிர்த்தெழுந்தீர், ஆகையால் - குழியில்நான் தரியேன். - பரத்துக்கேறினீர், அத்தால் - சந்தோஷமாய் அடியேன் - என் கண்ணை மூடலாம் அல்லோ, - நீர் எங்கே ஏறிப்போனீரோ - அங்கென்னையும் நீர் சேர்ப்பீர்.

௫. என் ஆத்துமத்தை இயேசுவின் - கரத்தில் ஒப்புவிப்பேன். - நான் நித்திரை அடைந்தபின் - திரும்பவும் விழிப்பேன். - என் மீட்பரானவர் அன்றே - வந்தென்னை மகிமையிலே - அழைத்துக்கொண்டு போவார்.

*Nic. Hermann*, † 1561.

௩௱௰௩. Valet will ich dir geben. (313.)



போறேன், துன்மார்க்கமான - பொல்லாத லோகமே, - என் ஆத்துமத்துக்கான - தாவாயிருக்காயே. - என் வாஞ்சை மோட்சத்துக்கு - நேராகுதுங்கேதான் - சன்மார்க்கன் இயேசுவுக்கு - முன்பாக வாழுவான்.

௨. என் காரியங்களுக்கு - உசாவும், இயேசுவே, - அடியேன் ரோகத்துக்கு - நீர் பரிகாரியே. - என நோவை ஆற்றி வந்து, - திடனே அருளும்; - நல்மரணத்தைத் தந்து, - அனபாக ரட்சியும்.

௩. என் நெஞ்சில் உம்முடைய - திவ்விய நாமமே - திங்கல் எல்லாம் மறைய - விளங்கும். இயேசுவே, - அவஸ்தையில் நீர் கிட்ட - இருந்தெந்நேரமும் - நீர் எனக்காய மரித்த - ரூபாகக் காண்பியும்.

௪. என் ஆவியை அன்பாக - எல்லா லயத்துக்கும் - விலக்கி, தயவாக - கைகேயற்கியருளும். - இராஜடயாய் இறங்கேதான் - இக்கட்டைத் தாண்டினனை, - பரகதிக்கு வந்தேதான - பிழைத்திருக்கிறேன்.

௫. ஆ, ஜீவ புஸ்தகத்தில் - என்பேரை எழுதும். - உம்மண்டை நான் பரத்தில் - எல்லா வாழ்வோடேயும் - இருக்கும் கூட்டத்தோடே - இனி சேரட்டுமென், - அங்கும்மை நல்லோரோடே - நான் என்றும் போற்றுவேன்.

*Valerius Herberger*, † 1627.



# நியாயத்தீர்ப்பின் பேரிலே பாடுகிற பாட்டு.

**கூ௱௰௬.** Es ist gewisslich an der Zeit. (316.)



எல்லாரை நியாயந்தீர்ப்பாராய் - கர்த்தாவின் மைந்தனை - அதிபதி பிரஸ்தாபமாய் - இறங்கிவாறதான - நாள்கிட்டும், அப்போ தீயிலே - எல்லாங் கரைந்துபோகச்சே, - நகைப்பு அரிதாகும்.

௨. எக்காளத்தின் முழக்கங்கள் - எத்திக்கிலுந் தொனிக்கும், - அப்பில் செத்தவர் திரள் - எல்லாம் எழுந்து நிற்கும். - உயிருடன் இருந்தோரோ - ஓர் நிமிஷத்திலே அப்போ - அழியாரூபாவார்கள்.

௩. எல்லாரின் சிந்தை செய்கையும் - வெளிப்படுவதற்கு - இரண்டு புஸ்தகங்களும் - திறந்தவரவர்க்கு - நடந்ததுக்குத் தக்கதாய் - பலன் அனந்தகாலமாய் - கொடுக்கப்பட்டுப்போகும்.

௪. கர்த்தாவின் வேத வார்த்தையை - எண்ணாமல், உலகத்து - பொய் வாழ்வு மேன்மை செல்வத்தை - தொடர்ந்து வாந்தோய்வற்று - இச்சித்தவர்களுக்கையோ, - அவர்கள் சாத்தானோடேப்போ - உபாதைக்குள்ளாவார்கள்.

௫. சுவாமி. என்பேர் அக்காலமே - ஜீவாகமத்தில் காண, - நீர் பட்ட காயங்களிலே - ஒதுங்கி. பத்தியான - விண்ணப்பத்தாலே கேட்கிறேன்; - ஆ, சுவாமி, உம்மைப் பற்றினேன், - நீர் என்னைத் தள்ளமாட்டீர்.

௬. நான் நீதிமான்களுடனே - நீர் எங்களுக்குத் தேடி - திறந்த பரதீசிலே - சந்தோஷமாகஏறி - பிழைக்க என்னை நீர் தாமே: - ஆசீர்வதிக்கப்பட்டோனே, - வா என்றப்போதழையும்.

௭. ஆ, இயேசுவே, இவ்வுலகம் - வியாகுலம் உண்டாக்கும் - சிறையிருப்புஞ் சஞ்சலம் - நிறைந்த பள்ளத்தாக்கும். - நியாயாதி கர்த்தா, தீங்கெல்லாம் - முடியுங்காலம் எப்போதாம், - ரட்சிக்க வாரும். ஆமேன். *Barthol. Ringwaldt*, † 1598.



# மோட்ச மகிமையின் பேரிலே பாடுகிற பாட்டுகள்.

**௩௱௰௭.** Ermuntert euch, ihr Frommen. (317.)



௧. சாக்கிரதைப்படுங்கள், - எவன் திவட்டியும் - எரியப் பாரத்திருங்கள், - நல்லோரே, ரா வரும். - செயத்திலே போராடி - விழிக்கத் தேவையே, - பத்தா எழும்பும் நாழி - ஏதென்றறியோமே.

௨. அப்போதெதிர்கொண்டோடி - மகிழ்ந்து பூரிக்க, - உன் திவட்டியைச் சோடி - என்றெச்சரிக்கிற - சீயோனின் காவல்காரர் - சொல் கேட்டு, சீர்பட - இருங்கள், நிர்விசாரர் - நினைப்பு விருதா.

௩. ஓய், புத்தியுற்றிருக்கும் - நற்கன்னிகைகளே, - தலையை ஏறெடுக்கும் - முகாந்தரம் உண்டே. - பாத்துக் கலியாண - வாழ்வாயத்தப்படும்; - நாம் நம்பினோரைக் காண - இச்சித்த நாள்வரும்.

௪. நாள் செல்வதில்லை, வாறார், - உறக்கந் தள்ளுவோம், - முன்னடையாளந் தாறார். - மரங்கள் பூத்துப்போம்; - வசந்த காலத்துக்கு - சமீபமாகிறோம், - துக்கித்தவர்களுக்கு - பகல் உதிக்கப்போம்.

௫. விழிப்பதே நற்புத்தி, - அதேனென்றால் கர்த்தா - பதர்களைக் கொளுத்தி, - மகா பயங்கர - பலனைத் துஷ்டருக்கும் - பேய் மிருகத்தையும் - பணிந்தவர்களுக்கும் - கொடுக்கும் நாள்வரும்.

௬. சீயோனை நேசித்தோரே, - முன் நீங்கள் அழும்போல் - இனி மகிழ்ச்சியோடே - செயத்தைப் பாடுங்கள். - உபத்திரவப் பங்காளி - ஆனபடியினால், - பத்தாவால் மணவாளி - கிரீடம் பெறுவாள்.

௭. உடந்தையாய்ச் சகித்து - மரித்த நீங்களே, - உடந்தையாய்க் களித்து, - கிலேசமின்றியே - தேவாசனத்தைச் சூழ - கம்பீரித்தரசர் - சிங்காரங்கொண்டு, கூட - பிழைத்து ஆளுவர்.

௮. வென்றோரின் தோரணங்கள் - மா துய்ய வஸ்திரம் -

சாகாமையின் வரங்கள் - அனந்த பாக்கியம் - மரித்தபின் செழிப்பும் - அறுப்புக்காலமும் - போர் செய்தபின் கெலிப்பும் - அங்கே அகப்படும்.

௬. எருசலேமின் ஊரும், - செயித்தோர் யாவரும் - மகிழ்ச்சியோடேகூடும் - அரண்மனைகளும், - பொன் வீதி, கலியாண - விருந்தும், தம்பிரான் - கண்ணீர் துடைப்பதான - இடமும் அங்கே தான்.

௰. ஆ, இயேசுசுவாமி, வாரும், - எழும்புமேன், கர்த்தா; - உதித்து ஒளிவாரும். - ரட்சிப்பின் சூரியா. - அடியார் போர் நாள்தோறும் - அதிகரிக்குதே, - அதை முடித்துப்போடும், - அன்புள்ள இயேசுவே. *Laurentius Laurentii*, † 1722.

## ௩௰௨௧. Wachet auf, ruft uns die Stimme. (321.)



ஓய், எருசலேமியாரே, - விழியுங்கள், மெய்மார்க்கத்தாரே, - இப்பாதி ராத்திரியிலே - பத்தா வாருர்; வேகமாக - எழுந்திருங்கள், புத்தியாக - இருக்குங் கன்னிகள் எங்கே. - தீவட்டிகளையே - எடுத்தெதிர்கொண்டே - போம் நேரமாம் - என்றிரவில் - அலங்கத்தில் - நிற்பாரின் கூக்குரல் உண்டாம்.

௨. சீயோனாகிய மனைவி - சந்தோஷம் மனதில் பரவி, - விழித்தெழுந்திருக்கிருள்; - அவள் நேசர் மேன்மையோடும் - சிநேகத்தோடுந் தயவோடும் - வெளிப்படுகிறதினால் - கிலேசம் நீங்கிற்று. - ஆ, சுவாமி, உமக்கு - ஓசியன்னு, - அடியாரும் - கம்பீரிக்கும் - கதிக்கு வாரோமே, கர்த்தா.

௩. சுரமண்டலங்களாலும் - நரர் தூதாக்கள் நாவினாலும் - துதிக்கப்பட்டோர் தேவரீர். - மோட்சஊர் மகா மினுக்கு - நீர் எங்களை வானோர்களுக்கு - உம்மாலே தோழராக்கினீர். - அவ்வாழ்வைக் கண்டோர் ஆர், - காதாலே கேட்டோர் ஆர். - நாம் உன்னத - சந்தோஷமும் - மகிழ்ச்சியும் - அடைகிறோம், அல்லேலூயா. *Philipp Nicolai*, † 1608.

௩௨௩. Alle Menschen müssen sterben. (323.)



புல்லைப்போல் எல்லாரும் வாடி - போறோம், சாகார் இல்லை யே; - சாவில்லாமல் சீரும்மாறி - புதிதாகக் கூடாதே. - நீதி மான்கள் பரலோக - வாழ்வின் மகிமைக்குப் போக - இச் சரீரப் பாடெல்லாம் - முன் அழியத் தேவையாம்.

உ. ஆகையால் சந்தோஷமாக - சுவாமிக்கேற்கும் வேளை யில் - நானும் போறேன், இதுக்காக - துக்கம் இல்லை; ஏனெ னில் - எனக்காய்க் குத்துண்டிறந்த - இயேசுவால் மன்னிப் பைக் கண்ட - எனக்கவர் காயங்கள் - சாவில் போர்ந்த ஆறு தல்.

௩. இயேசு எனக்காய் மரித்தார், - அவர் சாவென்லாப மாம்; - எனக்கு ரட்சிப்பளித்தார், - ஆகையால் சிங்காரிப் பாம். - மேன்மை தேவ மண்டலத்தை - சேர்ந்து, ஏக திரித்து வத்தை - நிதநம்பார்க்க, மண்ணை நான் - விட்டுப்போக ஆசை தான்.

௪. அங்கே மெய்ச் சந்தோஷமுண்டு, - அங்கே கோடி நீதி யர் - வானசோதியால் சூழுண்டு, - அப்போதே கொண்டாடு வர், - தூதரோடொன்றாய்க் குலாவி: - ஆ, பிதா குமாரன் ஆவி, - சுத்த சுத்த சுத்தரே - என்று பாடுவார்களே.

௫. அங்கே கோத்திரப் பிதாககள், - ஞானதிஷ்டி புரு ஷர், - இயேசு சுவாமியின் சீஷாக்கள் - யாவர் வாசம்பண்ணு வர். - சகல சன்மாாக்கத்தார்கள் - அங்கே சேர்ந்திருக்கிறார் கள், - அங்கே என்றும் ஒதிய - இன்பச்சொல் அல்லேலூயா.

௬. ஆ, எருசலேமே, வாழு, - உன் மினுக்கே அழகு, - உன் னில் தோத்திர கிண்ணார - வாத்தியந் தொனிக்குது. - ஆ, சந் தோஷம், ஆ, களிப்பு; - இப்போ பகலோன் உதிப்பு, - இப் போ நித்த ஒளிவு - எனக்கு விடியுது.

எ. அந்த மோட்ச மகிமையை - அப்போதே கண்ணோக்கி னேன்; - வானவரின் வெண்ணுடையை - பெற்று, பூண்டு

கொள்ளுவேன் - நான் பொற்கிரீடத்தைத் தரிக்க - மாளா வாழ்வுமாய்க்ங்க, - சுவாமி ஆசனத்துக்கு - சேரும் வேளை வந்தது.

*J. G. Albinus*, † 1679.



## உதயகாலத்துப் பாட்டுகள்.

**௩௱௨௫.** Gott des Himmels und der Erden. (325.)



௧. பிதா குமாரன் ஆவி, - விண் மண் உலகை எல்லாம் - தாங்குஞ் சருவவியாபி, - உம்மால் ராப் பகலுமாம். - உம்மால் சூரியன் நிலா - ஓடுது, தயாபரா.

௨. சாத்தான் தீவினை விளைக, - என்னைப் போன ராவிலே - தேவரீர் மாதயவாக - கேடுந்தீங்குமின்றியே - காத்ததுக்கென் மனது - தேவரீரைப் போற்றுது.

௩. ராப்போனதுப்போல் பாவ ராவும் - போகப்பண்ணும், கர்த்தரே. - அந்தகாரம் சாபம்யாவும் - நீங்க, உம்மை, இயேசுவே, - அண்டிக்கொண்டு நோக்கிறேன், - உம்மால் சீர் பொருந்துவேன்.

௪. நியாயத்தீர்ப்பில் திகிலற்று - நிற்க, இப்போதுள்ளிலும - வெண்ணுடை உடுத்தப்பட்டு, - பயத்தோடே நித்தமும் - என் ரட்சிப்பைத் தேட, நீர் - ஈவளிக்கக் கடவீர்.

௫. வேதங்காண்பிக்கும் வழியில் - என்னை நீர் நடப்பியும், - இன்றும் ஒவ்வொரு அடியில் - என்னை ஆதரித்திரும்; - எனக்கு நீர் மாத்திரம் - பத்திர அடைக்கலம்.

௬. தேகம் ஆவி என்னிலுள்ள - சிந்தை புத்தி யாவையும், - சுவாமி, உமதுண்மையுள்ள - கைக்கும் பராமரிப்புக்கும் - ஒப்புவிப்பேன், என்னை நீர் - பிள்ளையாக நோக்குவீர்.

௭. வான தூதர் எனக்காக, - என்னைப் பேயின் கண்ணிக்கு - தப்புவிக்கவும், அன்பாக - கடைசியில் மோட்சத்து - வாழ்வில் கொண்டுபோகவும், - தயவாகக் கற்பியும்.

அ. என் செபத்தை ஏற்றுக்கொள்ளும், - ஆ, திரியேசு வஸ்துவே; - என மனுக்காமென்று சொல்லும், - வேண்டிக் கொள்ளச் சொன்னீரே. - ஆமேன், உமக்கென்றைக்கும் - தோத்திரம் புகழ்ச்சியும்.

*Heinr. Albert*, † 1668.

## ௧௭௨௯. Ich dank dir schon durch deinen Sohn. (326.)



கர்த்தாவே, போன ராவிலே - நீர் என்னைத் தயவாக - காத்ததுக்காக உமக்கே - துதி உண்டாவதாக.

௨. இருளில் என்னை நீர்அன்பால் - எவ்விக்கினங்களுக்கும்- விலக்கிக் காத்திராவிட்டால், - என்சீரைப் பேய் கெடுக்கும்.

௩. என் நாட்களிலே உமது - மொழிக்கேற்காததாக - நான்செய்ததை நீர் எனக்கு - அன்பாய் மன்னிப்பீராக.

௪. இந்நாளும் என்னைச் சத்துரு - தன் சூதினால் பிடிக்க - பிணைக்கப்போற கண்ணிக்கு - நீர் என்னைத் தப்புவிக்க.

௫. அடியேனைப் பொல்லாப்புக்கு - விலக்கமாகக் காரும்;- ஆ, என்னை நீரே உமது - கையால் நடத்தி வாரும்.

௬. என் ஆவி தேகம் யாவையும் - நான் உமக்கொப்புவிப்பேன்; - இக்கட்டில் நீரே அருளும் - சகாயத்தால் கெலிப்பேன்.

௭. பிசாசினால் உண்டாகிய - சதியையே அகற்றும்; - இல்லாவிட்டால், அதினுடை - மயக்கம் நெஞ்சைக் கட்டும்.

௮. நரர் ஒத்தாசை விருதா, - ரட்சிக்கத்தக்கோர் ஆரும் - இங்கில்லையே, தயாபரா, - நீரே துணைக்கு வாரும்.

௯. பிதா குமாரன் ஆவியே, - திரியேகதெய்வமாக - பரத்தில் ஆளும் உமக்கே - துதி உண்டாவதாக.

*M. Praetorius*, † 1621.

## ௩௱௨௭. Morgenglanz der Ewigkeit. (327.)



கிருபையின் சூரியா, - நித்திய வெளிச்சமான - நீர் பகல் உதிக்கிற - இப்போதெங்கள்மேலுண்டான - ராவிருள் அனைத்தையும் - நீக்கவும்.

௨. ஆதித் தாய்தகப்பனின் - பாவத்தாலே லோகமெங்கும் - மூடின மந்தாரத்தின் - விக்கினத்துக்கு இரங்கும்; - ஆ, ஒளி விடுவீரே, - இயேசுவே.

௩. உமதன்புட பனி - மிகவும் வறட்சியான - நெஞ்சின் மேல் பெய்தருளி, - உமது விளைச்சலான - எங்களை எல்லாரையும் - ரப்பவும்.

௪. உம்முடைய நேசத்தின் - இன்பமாம் அனலைக் காட்டி, - எங்கள் கெட்ட மனதின் - துர்க்குணத்தை அத்தால் மாற்றி, - அதைப் புதிதாகவும் - சிஷ்டியும்.

௫. இயேசுவே, நான் பாவத்தின் - அவசுத்தத்தை வெறுத்து, - உம்முடைய நீதியின் - வெள்ளை அங்கியை உடுத்து, - அதை இன்றும் என்றைக்கும் - காக்கவும்.

௬. நீர் வெளிப்படும் அன்றே - நாங்கள் மா சந்தோஷத்தோடே - மண் படுக்கைகளிலே - நின்றெழுந்திருந்தும்மோடே - சேர்ந்தும்மோடே என்றைக்கும் - தங்கவும்.

௭. அழுகையின் பள்ளத்தை - தாண்டி, பரமகதிக்கு - போக நீரே எங்களை - கூட்டிக்கொண்டு அவ்வழிக்கு - நீரே எங்கள் சோதியும் - ஆகவும்.

*Christ. Knorr von Rosenroth*, † 1689.

## ௩௱௨௮. Vor deinen Thron tret ich hiemit. (328.)

பராபரனே, உமது - ராசாசனத்தினண்டைக்கு - பணிந்து தாழ்மையாய் வரும் - இப்பாவியைத் தள்ளாதேயும்.

௨. பிதாவே, என்னைத் தேவரீர் - தெய்வீக ரூபாய்ச் சிஷ்டித்தீர்; - நீர்தான் என்சீவன், உம்மையே - அல்லாமல் நான், அறிவேனே.

௩. நான் சாவுக்குச் சாண்ணூரமாய் - இருந்தபோதெல்லாம் அன்பாய் - உண்டான மோசங்களை நீர் - விலக்கிப்போட்டிருக்கிறீர்.

௪. என் ஆத்துமத்தை உமது - மன்னுவினாலே போஷித்து, - என் ஏழைத் தேகத்தையும் நீர் - தினம் பராமரிக்கிறீர்.

௫. திவ்விய மைந்தனே, உம்மால் - நான்மீட்கப்பட்டோன், ஏனென்றால் - அடியேன் தப்ப, தேவரீர் - பலியாய்ச் சீவனை விட்டீர்.

௬. என் மனச்சாட்சியோடும் பேய் - என் குற்றத்தைப் பாராட்டச்சே, - என் மத்தியஸ்தனாக நீர் - மன்னித்தலை உண்டாக்கிறீர்.

௭. நீர் எனது ஆசாரியர், - என் ஆறுதல், என் ரட்சகர்; - நான் மோட்சத்தைப் பெறுங்கதி - நீர் உத்தரித்ததின் கனி.

௮. தேவாவியே, என் நெஞ்சை நீர் - திருப்பி, புதிதாக்கிறீர்; - என்னென்ன நன்மை என்னிலே - உண்டோ, உம்மாலேதான் உண்டே.

௯. உம்மால் கர்த்தாவை அறிவேன், - உம்மால் பிதாவே என்கிறேன், - நீர் என்னைச் சத்தியத்திலே - முடியவுந் தற்காப்பீரே.

௰. நீர் சோதனையில் தாங்கிறீர், - உபத்திரவத்தில் கைவிடீர்; - உம்மால் திடனும் வெற்றியும் - மனமகிழ்ச்சியும் வரும்.

௰௧. ஆகையினாலே உமது - மகாபெரிய அன்புக்கு - இப்போதெப்போதும் என்றைக்கும் - இஸ்தோத்திரம் உணடாகவும்.

௰௨. இந்நாளிலும் என் பேரிலும் - என் வீட்டார் நேசர் மேலேயும், - கர்த்தாவே, நீரே உம்முட-கரங்களை வைத்தருள.

௰௩. நான் சுத்த தெய்வபத்தியாய் - நடக்க, உமக்கு முன்பாய் - என் கிறிஸ்துமார்க்கம் மாயமும் - கறையுமற்றிருக்கவும்.

௰௪. என் பாவங்கள் கடனையே-அன்பாய் மன்னியும், கர்த்தரே. - என் விசுவாசம் நேசமும் - உம்மால் மென்மேல் வளரவும்.

௰௫. நல்மரணத்தை அருளும், - அடியேன் அங்கே என்றைக்கும், - கர்த்தாவே, உம்மைப் பார்க்கவே - என் வேண்டுதலைக் கேட்பீரே. *Bodo von Hodenberg*, † 1650.

௩௱௩௧. Aus meines Herzens Grunde. (331.)

விடியுங்காலமான - இப்போதும் என்றைக்கும் - நான் முழு மனதான - வணக்கத்தோடேயும் - கர்த்தாவைப் போற்று வேன்; - ஆம், இயேசு மூலமாக - நான் உம்மைப் பத்தியாக - இஸ்தோத்திரிக்கிறேன்.

௨. நிர்ப்பந்தத்தை அன்பாக - நீர் போன ராவிலே - விலக்கினதுக்காக - துதி, என் கர்த்தரே. - ஆ, இந்தமட்டுக்கும் - நான் செய்த பாவத்துக்கும் - எல்லாப் பிழைகளுக்கும் - மன்னிப்பை அருளும்.

௩. பிசாசின் மூர்க்கத்துக்கும் - எப்பாவங்களுக்கும் - நிர்ப்பாக்கியங்களுக்கும் - அசுப்பிலே வரும் - துர்ச்சாவின் கைக்குமே - நீர் என்னை நீங்கலாக - இந்நாளும் காப்பீராக, - அன்புள்ள கர்த்தரே.

௪. என்தேகம் ஆத்துமாவும், - அடுத்திருக்கிற - சனத்தின் கூட்டம்யாவும், - என் சீவன் என்னுடை - இருப்பும் வேலையும் - சுகமும் சீருமாக - இருக்கிறதுக்காக - நீரே ரட்சிக்கவும்.

௫. மகா பொல்லாங்கனை - பிசாசு தனது - விஷமுங் கேடுமான - வினையால் எனக்கு - பொல்லாப்பு ஒன்றையும் - செய்யாதிருப்பதுக்கு, - பரத்தின் தூதருக்கு - நீர் கட்டளையிடும்.

௬. சருவத்துக்கும் வல்ல - பராபரனுடை - குறைவில்லாத நல்ல - விசாரிப்புக்கெல்லா - விசாரங்களையும் - நான் ஒப்புவிப்பேனாக; - அப்போதெல்லாம் நன்றாக - தன் லக்குக்கு வரும்.

௭. இப்போ சந்தேகமற - நான் ஆமேன் என்கிறேன், - நான் வேண்டினதைத் தர - போறீர் என்றறிவேன். - இனி நான் உம்மையே - முன்னிட்டு உண்மையாக - என் வேலை செய்வேனாக, - துணை நீர், கர்த்தரே.

*J. Mathesius*, † 1565.

# சாயங்காலத்துப் பாட்டுகள்.

**௫௱௫௨.** Nun sich der Tag geendet hat. (332.)



இருட்டு வந்ததால் இந்நாள் - முடிந்து போகச்சே, - இளைத்தோ யாவுந் தூக்கத்தால் - குளிரப் பார்க்குதே.

உ. நீரோ, விழித்திருக்கிற - கர்த்தா, நீர் ஒருத்தர் - இருளும் தூக்கமுமில்லா - வெளிச்சமானவர்.

௩. ஆ, சுவாமி, என்னைத் தயவாய் - நீர் இந்த ராவிலும் - நினைத்து, என் தகப்பனாய் - காப்பாற்றியருளும்.

௪. நற்றூதரால் பிசாசுட - சதிகளை எல்லாம் - விலக்குமேன், பயமற - அப்போ நான் தூங்கலாம்.

௫. மெய்தானே, என்னில் பாவத்தால் - மனங் கலங்குது, - ஆனால் என் மீட்பரின் அன்பால் - என் குற்றம் நீங்கிற்று.

௬. நியாயஸ்தலத்தில் அவரே - அடியேனின் பிணை; - மன்னிப்படைவேன் என்பதே - அத்தால் என் நம்பிக்கை.

௭. இத்தோடே தூங்கிப்போக நான் - என் கண்ணை மூடுவேன், - என் காவல்காரர் கர்த்தர் தான் - நான் துக்கமாயிரேன்.

௮. அகன்றுபோய் விலகுங்கள், - வீண் நினைவுகளே; - கர்த்தாவுக்கென்னைப் பிள்ளைபோல் - நான் ஒப்புவித்தேனே.

௯. என் சீவன் இந்தராவிலே - முடிந்துபோகியும், - என் ஆவியை உம்மண்டையே - அன்பாய்ச் சேர்த்தருளும்.

௰. பிழைத்துஞ் செத்தும், கர்த்தரே, - நான் உம்முடையவன். - இந்தடவாய்க் கேடில்லையே, - நீர் என் பராபரன்.

*J. F. Hertzog, † 1699.*

## ௩௱௩௪. Werde munter, mein Gemüthe. (334.)



நல்ல யோசிப்பாய் விழித்து, - தெளிவாகென் மனதே; - தேவ தயவைச் சிந்தித்து - தோத்திரி, என் உள்ளமே. - என்னை இந்த நாளிலும் - பேய்க்கும் பல வாதைக்கும் - தப்பக்காத்த என் கண்காணி - கர்த்தா என்பதைத் தியானி.

௨. ஆ. பிதாவே, தயவுள்ள - சுவாமி, நீர் என் வேலையை - வாய்க்கப்பண்ணி, துக்கமுள்ள - சகல இடர்களை - சத்துருக்களால் வரும் - பாரமோசங்களையும் - தூரமாக்கினதுக்காக - உமக்குத் துதியுண்டாக.

௩. உமது தயைகள் யாவும் - எண்ணி முடியாதது, - எந்தச் சாதுரிய நாவும் - உம்முடைய அன்புக்கு - தக்க தோத்திரங்களை - சொல்வதற்குப் பலத்தை - பெற்றதில்லை, மா விஸ்தாரம் - உம்முடைய உபகாரம்.

௪. இன்றையதினம் கழிந்து - ராவிருட்டு வந்தது. - சூரிய விளக்கவிந்து, - அதின் சோதி நீங்கிற்று. - கர்த்தரே, என் மனதில் - இந்த அந்தகாரத்தில் - உமது விளக்கை ஏற்றும், - அத்தால் என்னை ஆற்றித் தேற்றும்.

௫. ஆ. என் கெட்ட சுபாவத்தாலே - நெஞ்சில் ஊறி, என்னிலே - கண்ட பாவத்தை அன்பாலே - நீர் மன்னியும், கர்த்தரே. - தண்டிக்காமல், ரட்சியும்; - என்னை எவ்விதத்திலும் - விழப்பண்ணப் பேய் திரியும், - அதுக்கென்னைத் தப்புவியும்.

௬. உம்மைவிட்டுப்போய் அலைந்த - நான் திரும்ப வாறேனே, - உமது சுதன் அடைந்த சாவால் சேர்த்திக்கையுண்டே. - நான் என் குற்றங்களுக்கு - போக்குச் சொல்லேன், உமது - அன்போ அதின பாரத்துக்கும் - மா அதிகமாயிருக்கும்.

௭. கிருபையின் பொழுதான - சுவாமி, இந்த ராவிலும் - என்மேல் தேவரீர் அன்பான - சோதியாய்ப் பிரகாசியும். - என்னை நீர் இருட்டிலே - கைவிடாமல். அண்டையே - தங்கி, என்னை நேசமாக - பராமரித்துக்கொள்வீராக.

௮. எனக்குச் சதிநினைக்கும் - அந்தகாரப் பிரபு - வைக்குங் கண்ணிக்கும் வலைக்கும் - தப்ப, தேவரீருக்கு - என்னை ஒப்பு விக்கிறேன். - சுவாமி, உம்மைப் பற்றினேன், - நெஞ்சிலே நீர் ஒளிவீயும், - அப்போ மோசங்கள் தணியும்.

௯. என் நிமைகள் தூக்கத்தாலே - மூடிக்கொண்டு போகியும், - என் மனம் தன் வாஞ்சையாலே - உம்மை அண்டிக் கொள்ளவும். - தூங்கியும், உம்மோடே தான் - ஐக்கப்பட்டிருக்க, நான் - தேவரீர்மேல் சிந்திப்பாக - சொப்பனத்தைக் காண்பேனாக.

௰. ஆசீர்வாதந் தந்து காரும், - எனக்கிந்த ராவிலே - சுக நித்திரையைத் தாரும்; - உமதாதரிப்புக்கே - வீட்டார் இனத்தார்களும் - நேசரும் பகைஞரும் - ஆவி தேகம் எல்லாமாக - ஒப்புவித்திருப்பதாக.

௰௧. அமளி, திகில், வியாதி, - சண்டை, யுத்தம், கலகம், - தீயின் வெள்ளத்தின் உபாதி, - பெருவாரி விக்கினம், - அசுப்பான அழிவும் - அணுக ஒட்டாதேயும். - கர்த்தரே, நான் பாவியாக - செத்துக் கெட்டுப் போகேனாக.

௰௨. அப்பா, என் விண்ணப்பத்துக்கு - தயவாய்ச் செவி கொடும். - இயேசுவே, என் மனதுக்கு - நித்த ஒளிவாயிரும். - பரிசுத்த ஆவியே, - நேச அனுகூலரே, - வேண்டினேன்மேல் தயவாகும். - ஆமென், உம்மால் யாவும் ஆகும்.

*Joh. Rist*, † 1667.

௩௱௩௬. Christe, der du bist Tag und Licht. (336.)



மெய்ப்பொழுதான கிறிஸ்துவே, - நீர் பூந்துபோறதில்லையே. - ஆ, எங்களுக்கெந்நேரமும் - வெளிச்சங் காண்பித்தருளும்.

௨. பொல்லாத விக்கினங்களை - விலக்கிப்போட்டடியாரை - நீர் இந்தராத்திரியிலே - அன்பாய்க் காப்பாற்றும், கர்த்தரே.

௩. ஆகாத பாவத்தூக்கமும் - பிசாசின் சர்ப்பனைகளும் - விலகப்பண்ணி, உள்ளிலே - சுத்தாங்கம் தாரும், இயேசுவே.

௪. அடியார் தூங்கக் கொள்ளவே, - அடியார் நெஞ்சும்முடனே - சஞ்சாரம்பண்ண அதை நீர் - எழுப்பிவரக்கடவீர்.

௫. ஆ, உமது சபையையும் - இரக்கமாய்க் காத்தருளும், - நீர் பட்ட வாதையைப் பார்த்தே - அதற்குதவும், கர்த்தரே.

௬. நோவால் தவிப்பவருக்கு - அனுக்கிரகத்தைக்காண்பித்து, - நொறுங்கிய எல்லாரையும் - அன்பாகத் தேற்றியருளும்.

௭. பிதா குமாரன் ஆவிக்கும் - துதியும் தோத்திரங்களும் - அனந்த காலங்களுக்கு - உண்டாகவே கடவது.

௩௱௩௭. Christ, der du bist der helle Tag. (337.)



வெளிச்சமான இயேசுவே, - இருளை நீக்கும்பொழுதே, - அடியாருக்குதித்த நீர் - வெளிச்சத்துக்கழைக்கிறீர்.

௨. பேய் இந்தராவில் எங்களை - தொடாப்படிக்கடியாரை - காப்பாற்றி, உம்மண்டையிலே - சேர்த்தாதரியும், கர்த்தரே.

௩. கண் தூங்கக்கொள்ள, நெஞ்சை நீர் - தூங்காதே காக்கக் கடவீர்; - அடியார் பாவமின்றியே - இருக்கப்பண்ணும், இயேசுவே.

௪. கெர்ச்சிக்குஞ் சிங்கம் போலே பேய் - பொல்லாப்புச் செய்யப் பார்க்குதே, - அதின் சதி அனைத்தையும் - நீரே வீணாக்கியருளும்.

௫. அடியார் நீரே உம்முட - இரத்தத்தால் சம்பாதித்த - சனமும் உமக்கென்றைக்கும் - பிதா கொடுத்த சொந்தமும்.

௬. நற்றூதர் எங்களை அன்பாய் - பிசாசுக்கு விலக்கமாய் - காத்தெங்கள் கிட்ட சுற்றிலும் - இறங்கக் கட்டளையிடும்.

௭. அந்தடவாய்ப் பயப்படோம், - நற்சுகமாகத் தூங்கிறோம்; - திரியேகரான உமக்கு - இஸ்தோத்திரம் உண்டாவது.

*Erasmus Alberus*, † 1553.

## ௩௱௩௮. Nun ruhen alle Wälder. (338.)



வெளியில் ஊரில் யாவும் - எல்லாச் சீவாத்துமாவும் - இப்போதமையுது; - என் மனதே, நீ பாடி, - உன் கர்த்தரைக் கொண்டாடி,.- செபத்தியானமாயிரு.

௨. பகலோன் அஸ்தமித்து, - ரா வந்ததால் ஒளித்து, - காணாமல் போச்சுது; - போகட்டும், இயேசுவான - பகலோன் என்ற ஞான - வெளிச்சமே என் பூரிப்பு.

௩. பகல் முகிந்த பின்னும் - நட்சத்திரங்கள் மின்னும் - விண் மண்டலத்திலே; - என் நாளின் வேலையான - பிற்பாடவ் வண்ணமான - சிங்காரந் தாரும், கர்த்தரே.

௪. என் சிறுமையிருப்பை - காண்பிக்கிற உடுப்பை - இப்போ களைகிறேன்; - அதற்குப் பதிலாக - அந்நாளிலே நன்றாக - அலங்கரிக்கப்படுவேன்.

௫. இந்நாளின் வேலையாலும் - தலையுங் கையுங் காலும் - சலித்துப் போச்சுது. - ஆனால் இனி எப்பாடும் - எப்பாவக்கேடும் மாறும், - என் மனதே, மகிழ்ந்திரு.

௬. இப்போதுஞ் சுகமாக - படுத்துக்கொள்வாயாக, - இளைத்த தேகமே; - ஆயாசமெல்லாம் ஆற, - இனி படுக்கை தாழ - அகப்படும். குழியிலே.

௭. உறக்கத்தால் கண் மூடும், - இருட்டும் என்னைச் சூழும்; - ஆனால், என் சுவாமியே, - என் ஆவிதேகத்துக்கும் - சதிவராதிருக்கும் - படிக்குக் காப்பவர் நீரே.

௮. இக்குஞ்சைப் பட்சமாக - அரவணைப்பீராக, - அன்புள்ள இயேசுவே; - பேய்தந்திரம் வீணாக, - நற்றூதர் காவலாக - இருக்கப்பண்ணும், கர்த்தரே.

௯. அடுத்தவர்கள் மீதும் - இராவில் கேடுந் தீதும் - வராமல், யாவரும் - அருள் நிழலின் கீழே - சுகித்துத் தூங்க, நீரே - அன்பாகக் கட்டளையிடும். *P. Gerhardt*, † 1676.



# சமுதாய அவதியிலே பாடுகிற பாட்டு.

## ௩௱௪௰௩. LITANEY. (343.)

குரு:



சுவாமி,
கிறிஸ்துவே,
சுவாமி,



பரமண்டலங்களிலிருக்கிற பிதாவாகிய பராபரனே,
லோகத்தின் இரட்சகராயிருக்கிற சுதனாகிய பராபரனே,
பரிசுத்த ஆவியாகிய பராபரனே,
பரிசுத்த திரியேக பராபரனே,
தயாபரராகிய கர்த்தாவே,
தயாபரராகிய கர்த்தாவே,



சகல பாவங்களுக்கும்,
சகல மோசங்களுக்கும்,
பிசாசின் சர்ப்பனைகளுக்கும், கண்ணிகளுக்கும்,

அசுப்பான துன்மரணத்துக்கும்,
பெருவாரிக்காய்ச்சலுக்கும், பஞ்சத்துக்கும்,
யுத்தத்துக்கும், கொலைகளுக்கும்,

கலகத்துக்கும், பிரிவினைகளுக்கும்,
இடிச் சேதத்துக்கும், பெருங்காற்றுக்கும்,
அக்கினிச் சேதத்துக்கும், பெரு வெள்ளத்துக்கும்,

நித்திய மரணத்துக்கும்,

# சமுதாய அவதியிலே பாடுகிற பாட்டு.

## ௩௪௩. LITANEY. (343.)

சபை:



கிருபையாயிரும்.
கிருபையாயிரும்.
கிருபையாயிரும்.



எங்கள் மேல் இரங்கும்.
எங்கள் மேல் இரங்கும்.
எங்கள் மேல் இரங்கும்.
எங்கள்மேல் கிருபைகூரும்.
எங்களைத் தப்புவியும்.
எங்களை ரட்சியும்.



எங்களை விலக்கமாய்க் காரும், கிருபையுள்ள பராபரனே.

குரு:



உம்முட பரிசுத்த மனித அவதாரத்தினாலும்,
உம்முட உபவாசத்தினாலும், சோதனையினாலும்,
உம்முட மரணஅவஸ்தையினாலும், இரத்தவேர்வையினாலும்,

தேவரீர் சிலுவையில்அறையுண்டடைந்தமரணத்தினாலும்.
தேவரீர் மகிமையாய் உயிர்த்தெழுந்து, பரமண்டலத்துச் சேறினதினாலும்,
எங்கள் மரணவேளையிலும் நியாயத்தீர்ப்பின் நாளிலும்,



தேவரீர் உமது பரிசுத்த சபையை ஆண்டு காப்பாற்றவும்.
சபையின்போதகராகிய உம்முட ஊழியக்காரரை ஆரோக்கியமான வசனத்திலும் பரிசுத்த நடக்கையிலும் நிலைப்படுத்தவும்,

சகலவேதப்புரட்டுகளையும் இடறல்களையும் மறுத்துத் தடுக்கவும்.
வழிதப்பி மோசம்போனவர்களை எல்லாந் திருப்பவும்,
சாத்தானை எங்கள் பாதத்தின்கீழ் நசுக்கிப்போடவும்,

உமதறுப்புக்கு உண்மையானவேலையாட்களை 'அனுப்பவும்,
தெய்வவசனம் பலிக்கும்படிக்கு, உம்முடைய ஆவியையும் பலத்தையுங்கூடக் கட்டளையிடவும்,
துக்கப்பட்டுத் திடனற்றிருக்கிற அனைவரையும் ஆதரித்துத் தேற்றவும்,

சபை:



எங்களை ரட்சியும், கிருபையுள்ள கர்த்தரே.



ஏழைப்பாவிகளாகிய அடியார் வேண்டிக்கொள்ளுகிறோம்.

குரு:



கிறிஸ்தவர்களாகிய சகல ராசாக்களுக்கும் பிரபுக்களுக்கும் உமக்குள் சமாதானத்தையும் ஒருமையையுந் தரவும்,
எங்கள் { ராசாவுக்கு / ராசாத்திக்கு }ச் சமாதானத்தையும் சுகராசரிக்கதனையுங் கட்டளையிடவும்,
எங்கள் குருக்களையும் மூப்பரையும் பள்ளிக்கூடங்களையும் சபையையும் ஆசீர்வதித்துத் தற்காக்கவும,

எங்களை உம்முடைய பரிசுத்த ஊழியத்தில் நிலைப்படுத்திப் பலக்கப்பண்ணவும்,
உம்முடைய பரிசுத்த சுவிசேஷம் பிரசித்தம் பண்ணப்பட, யூதரையுஞ் சகல பொய்மதக்காரரையும் அக்கியானிகளையுந் திருப்பும்வேலையை நடந்தேறப்பண்ணவும்,

அவதியையும் இக்கட்டையும் அனுபவிக்கிற யாவருக்கும் சகாயராய்த் தென்படவும்,
யாத்திரையும் பயணமும்பண்ணுகிற யாவரையும் காப்பாற்றவும்,
கெர்ப்பவதிகளுக்குச் சந்தோஷமான பேறைக் கட்டளையிடவும்,
சகலபிள்ளைகளையும் வியாதிக்காரரையும் பார்த்துக்கொண்டு பராமரிக்கவும்,
குற்றமில்லாமல் காவற்பண்ணப்பட்டவர்களை நீங்கலும் விடுதலையுமாக்கவும்,
சகல கைம்பெண்சாதிகளையும் தாய்தகப்பனில்லாத பிள்ளைகளையும் ஆதரிக்கவும்,

சபை:



ஏழைப்பாவிகளாகிய அடியார் வேண்டிக்கொள்ளுகிறோம்.

குரு:



சகல மனிதருக்கும் இரங்கவும்,
எங்கள் உபகாரிகளுக்கெல்லாங் கிருபையுள்ள நித்திய பலன்களைக் கொடுக்கவும்,
எங்களைப் பகைக்கிறவர்களுக்கும் துன்பப்படுத்துகிறவர்களுக்கும் தூஷணிக்கிறவர்களுக்கும் மன்னித்து, அவர்கள் மனதைத் திருப்பவும்,
நிலத்தின் பயிரைக் கட்டளையிட்டுக் காப்பாற்றவும்,
எங்கள் விண்ணப்பங்களைக் கேட்டருளவும்,



பராபரனுடைய குமாரனாகிய இயேசு கிறிஸ்துவே, இரக்கமுள்ள கர்த்தரே,



லோகத்தின் பாவத்தைச் சுமந்துதீர்க்கிற தேவ ஆட்டுக்குட்டியே,
லோகத்தின் பாவத்தைச் சுமந்துதீர்க்கிற தேவ ஆட்டுக்குட்டியே,
லோகத்தின் பாவத்தைச் சுமந்துதீர்க்கிற தேவ ஆட்டுக்குட்டியே,



ஆ, கிறிஸ்துவே,
சுவாமி,
கிறிஸ்துவே,
சுவாமி,



சபை:



ஏழைப்பாவிகளாகிய அடியார் வேண்டிக்கொள்ளுகிறோம்.



அடியாரைக் கேட்டருளும்.

எங்களுக்கிரங்கும்.
எங்களுக்கிரங்கும்.
உம்முடைய சமாதானத்தை எங்களுக்குக் கட்டளையிடும்.



எங்களைக் கேட்டருளும.
கிருபையாயிரும்.
கிருபையாயிரும்.
கிருபையாயிரும்.



ஆ - மேன்.



# தேவஸ்துதி.

## ௩௱௬௰. Laudamus te. (360.)



உம்மைத் துதிக்கிறோம், யாவுக்கும் வல்ல பிதாவே; — உம்
மைப் பணிகிறோம், சுவாமி, ராசாதி ராசாவே. - உமது மா -
மகிமைக்காக, கர்த்தா, - ஸ்தோத்திரஞ் சொல்லுகிறோமே.

௨. கிறிஸ்தே, இரங்கும்; குமாரனே, கடன் செலுத்தி, —
லோகத்தின் பாவத்தை நீக்கிற தேவாட்டுக்குட்டி, — எங்கள்
மனு - கேளும், பிதாவினது - ஆசனத்தோழா, இரங்கும்.

௩. நித்தபிதாவின் மகிமையில், இயேசுவே, நீரே — பரிசுத்
தாவியோடேகமாய் ஆளுகிறீரே. - ஏகமாய் நீர் - அர்ச்சிக்கப்
படுகிறீர், - உன்னத கர்த்தரே. ஆமென்.

*H. Cordes*, † 1892.

---

# பல சமயங்களில் பாடுகிற பாட்டுகள்.

## ௩௱௬௰௧. Ach bleib mit deiner Gnade. (361.)



ஆ, எங்கள்மேல் இரக்கம் - வைத்திரும், இயேசுவே; - பேய்
சூதுக்கு விலக்கம் - அப்போதுண்டாகுமே.

௨. இரட்சிப்பிங்கும் அங்கும் - கிடைக்க, மீட்பரே, - மெய்
வேதம் காத்து, தங்கும் - அடியாரிடமே.

௩. மெய்ப்பொழுதே பிரகாசம் - தந்தெங்களோடிரும். - தப்பற்ற விசுவாசம் - எங்களைக் காக்கவும்.

௪. ஆ, சுவாமி. ஆசீர்வாதம் - புரிந்து தங்குமேன்; - எல்லா வரப்பிரசாதம் - பெருகப்பண்ணுமேன்.

௫. ஆ, வேந்தரே, ஒதுக்கு - அளித்துத் தங்குமேன்; - பொல்லாரின் வற்மத்துக்கு - விலக்கிக் காருமேன்.

௬. ஆ, உமதுண்மையோடு, - கர்த்தாவே, இங்கிரும்; - உறுதி தந்தத்தோடு - முடிய ரட்சியும்

*Josua Stegmann*, **1632.**

## ௩௱௬௨. Lass mich dein sein und bleiben. (362.)



நான் என்றும், உண்மையுற்ற - சுவாமி, உம்மிடத்தில் - விடாமல் நிற்க, சுத்த - மெய் உபதேசத்தில் - நீர் என்னைக் காத்திரங்கும், - நிலைவரங் கொடும்; - அதற்கு இங்கும் அங்கும் - நான் உம்மைப் போற்றவும்.

*Nic. Selnecker*, **† 1592.**

## ௩௱௬௩. Liebster Jesu, wir sind hier, deinem. (363.)



இயேசு சுவாமி, உம்மண்டை - சிறு பிள்ளைகளும் வர - வேண்டுமென்றீர், மோட்சத்தை - இச்சிறியருக்குந் தர - சித்தமானதால் இப்பிள்ளை - தாமதிக்க ஞாயம் இல்லை.

௨. நீர் தாம்: மீண்டும் ஒருவன் - தண்ணீராலும் ஆவியாலும் - பிறவாவிட்டால், அவன் - மோட்சத்தில் எவ்விதத்தாலும் - உட்பிரவேசிக்கக் கூடாது - என்றுரைத்ததுந் தப்பாது.

௩. ஆகையாலே, உமது - கட்டளைக்குக் கீழடங்கி – வந்தோம், இந்தப் பிள்ளைக்கு - தயவைக் காண்பித்திரங்கி: - நாம் உன் நேசரென்று சொல்லும்; - இதை அன்பாய் எற்றுக் கொள்ளும்.

௪. சென்மபாவியாகிய – இதைக் கழுவி, மன்னியும், – நீர் இதற்குப் புதிய – வஸ்திரத்தைத் தரிப்பியும். - கர்த்தரே, நீர் இதை முற்றும் - நலமாய் உமக்குட்படுத்தும்.

௫. தெய்வநாமங் கூடிய - இம்முழுக்கின் பலத்தாலே - பேயின் விஷமாகிய - பாவரோகமும அத்தாலே - வந்த சாவும் நீங்கலாக - இது குணமாவதாக.

௬. கூட்டிக்கொள்ளும், சிரசே; - மேய்ப்பரே, இவ் வாட்டைச் சேரும்; - உயிர்ப்பியும். சீவனே; - சுவாமி, பேயின் நாற்றைப் பேரும்; - நேசரே, நற்கொடியாக - இதும்மில். தரிப்பதாக.

௭. எங்கள் அன்பின் வேண்டலை, - சுவாமி, அன்பாய்க் கேட்பீராக. - நாங்கள் வேண்டிக்கொள்வதை - இப்பிள்ளைக்குச் செய்வீராக. - நீரே இதின் நாமத்தையும் – மீட்புக்கென்றெழுதி வையும்.

*Benj. Schmolck,* † 1737.

## ௩௱௯௪. Cor mundum crea in me. (364.)



சுத்த இருதயத்தை நீர், - கர்த்தாவே, என்னில் சிஷ்டியும்; - திட ஆவியைத் தேவரீர் - என்னுள்ளத்தில் புதுப்பியும்.

௨. ஆ, உம்முடைய முகத்தை - விட்டென்னை நீர் தள்ளாமலும், - என்னிடத்தில் தேவாவியை - பேர்த்தெடுக்காமலுமிரும்.

௩. மீண்டும் உமதிரட்சிப்பின் - சந்தோஷத்தைத் தந்தருளும். - இனிப்புதிய ஆவியின் - உற்சாகம் என்னைத் தாங்கவும்.

*H. Cordes,* † 1892.

## ௩௱௯௭. Jehova, Jehova, Jehova! (367.)



எகோவா, எகோவா, எகோவா, - உமக்கென்றும் துதி இஸ்தோத்திரம். - ஆமேன். ஆமேன். - நீர் சொல்ல முழு லோகமும் - தூளாய்ப் போம் அம்மட்டுக்கும் - இங்கொலிக்கும் பாடல் - நீர் சுத்தர் சுத்தர் சுத்தரென்றுடல். - அல்லேலூயா, அல்லேலூயா.

## ௩௱௭௨. Wach auf, mein Herz. und singe. (372.)



௧ நெஞ்சே விழித்துப்பாடு, - உன் கர்த்தரைக் கொண்டாடு; - நல்லீவு யாவுந தாருர், - நரரைக் காத்துவாருர்.

௨. இருளின் திகிலுக்கும் - பிசாசின் மோசத்துக்கும் - இராவில் அவர்தாமே - என்னைத் சற்காத்தோராமே.

௩. அஞ்சாமல் சுகமாக - படுத்துக்கொள்வாயாக, - நாமே மறைப்போம் என்றீர். - ரட்சிக்க வாக்கு தந்தீர்.

௪. நீர் சொன்ன வண்ணமாக - இப்போ நான் சுகமாக - புதுப்பகலைக் கண்டேன், - பலி செலுத்த வந்தேன்.

௫. ஆ, உமக்கென்ன தாறேன்; - எதைச் செலுத்த வாறேன். - நான் பணிவோடு சொல்லும் - துதியை ஏற்றுக்கொள்ளும்.

௬. நீர் அதைத் தள்ளீராக; - உமக்குப் பலியாக - பின் எதுவும் இராது, - வேறேதும் கிடையாது.

௭. இந்நாளும் சேதத்துக்கு - என்னைத் தற்காப்பதுக்கு - நற்றூதரை அன்பாக - துணைக்கு வைப்பீராக.

௮. நான் என்ன யோசித்தாலும், - எதைத் துவக்கினாலும், - நீர் வாய்க்கப்பண்ணிவாரும், - நல் முடிவையும் தாரும்.

௯. என் நெஞ்சிலே தரித்து, - என்னை ஆசீர்வதித்து, - நீர் சீவ வார்த்தை சொல்லும், - மோட்சத்தில் சேர்த்துக் கொள்ளும்.

*P. Gerhardt*, † 1676.

## ௧௱௭௫. Bis hieher hat mich Gott gebracht. (375.)



இம்மட்டும் தேவ கிருபை - அடியேனை ரட்சித்து, - இக்கட்டிலும் என் சீவனை - அன்பாய்ப் பராமரித்து - மா தயவாய் நடத்திற்று. - இம்மட்டும் சுவாமி எனக்கு - சகாயம் செய்து வாரார்.

௨. என் சீவனுள்ள நாள் எல்லாம் - நான் கண்ட உண்மைக்காக - கர்த்தாவுக்கெனதுண்மையாம் - துதி உண்டாவதாக. - அதிசய அன்புடனே - சகாயம் செய்தீர் என்பதே - என் மனமும் என் வாக்கும்.

௩. இனியும் உமதுண்மையில் - சகாயம் செய்து வாரும். - என் இயேசுவின் காயங்களில் - முடிய என்னைக் காரும். - கிறிஸ்தின் இரத்தம் நீதியும் - எக்காலமும் எவ்விடமும் - என்னை ரட்சிக்க. ஆமேன்.

*Aemilia Juliana Gräfin zu Rudolstadt*, † 1706.

## ௩௱௭௬. Macht hoch die Thür. (376.)

சங்கீதம் ௨௪, ௭ - ௰.



வாசல்களை உயர்த்துங்கள், - மகா கர்த்தாவை வாழ்த்துங்கள். — ராசாதி ராசா வருவார், - பெரிய தேவமைந்தனார். - உலகத்தைச் சிருஷ்டித்து - ரட்சித்த தேவரீருக்கு - துதி, தயாபரா, - ஆலோசனை கர்த்தா.

௨. அவர் மா சாந்தமானவர், - சகாயர் நீதியுற்றவர். — ராசாவின் முடி சுத்தமே, - அவர் செங்கோல் இரக்கமே. - அவர் இக்கட்டை நீக்கினோர், - அத்தாலே பாடுங்கள் எல்லோர்: - துதி மா தேவனே, - பலத்த மீட்பரே.

௩. இக்கர்த்தர் உட்பிரவேசிக்கும் - போதெந்த ஊரும் தேசமும் — களிக்கும், எங்கள் இதயம் — அடைவதும் மெய்ப்பாக்கியம் - அவர் சந்தோஷப் பொழுதே, - மகிழ்ச்சியை அளிப்பாரே. - ஆ, தேற்றும் உமக்கே - புகழ்ச்சி, கர்த்தரே.

௪. வாசல்களை உயர்த்துங்கள். - நெஞ்சை அலங்கரியுங்கள். - பத்தியின் குருத்தோலையும் — மகிழ்ச்சியின் கிளைகளும் - தெளியுங்கள், ராசா வாறார். - உங்களையும் இரட்சிப்பார். - கர்த்தாவுக் கென்றைக்கும் - புகழ்ச்சி துதியும்.

௫. என்னண்டை, இயேசு, வாருமேன்; - என் வாசலைத் திறக்கிறேன். - அருள்புரியும் தேவரீர் - என் நெஞ்சில் தங்கக் கடவீர். - மோட்ச வழியைக் காண்பிக்கும் - நல் ஆவியைத் தந்தருளும். - என்றைக்கும் உமக்கே — புகழ்ச்சி, கர்த்தரே.

*Georg Weissel, † 1635.*

## ௩௱௭௭. Thut mir auf die schöne Pforte. (377.)

சங்கீதம் உ௬, அ.



அலங்கார வாசலாலே - கோவிலுக்குட் போகிறேன்; - தேவவீட்டின் நன்மையாலே - ஆத்துமத்தில் பூரிப்பேன்: - இங்கே தேவசமுகம், - மெய் வெளிச்சம், பாக்கியம்.

உ. கர்த்தரே, உம்மண்டை வந்த - என்னண்டைக்கும் வாருமேன். - நீர் இறங்கும் போதனந்த - இன்பத்தால் மகிழுவேன். - என்னுட இதயமும் - தேவ ஸ்தலமாகவும்.

௩. பயத்தில் உம்மண்டை சேர, - என் செபம் புகழ்ச்சியும் - நல்ல பலியாக ஏற - உமதாவியைக் கொடும். - தேகம் ஆவி யாவையும் - சுத்தமாக்கியருளும்.

௪. நல்ல நிலத்தில் விழுந்த - விதை பயிராகுமே. - அந்தப்படி நான் மிகுந்த - கனிகளைத் தரவே - வசனத்தைக் காக்க நீர் - சுவளிக்கக் கடவீர்.

௫. விசுவாசத்தை விடாமல், - அதில் பலப்படவும், - ஒருக்காலும் தவறுமல், - உம்மை நான் பின்செல்லவும் - மெய் வெளிச்சத்தை நீரே - என்னில் வீசும், கர்த்தரே.

௬. சொல்லும், கர்த்தரே, நான் கேட்பேன்; - நீர் இப்பாழ் நிலத்திலே - பெய்யும் மன்னுவை நான் சேர்ப்பேன் - நல் தியானத்துடனே. - தாரும் சீவ பானத்தை; - தீரும் பசி தாகத்தை.

*Benjamin Schmolck*, † 1737.

## ௩௱௭௮. Rede, liebster Jesu, rede. (378.)



இயேசு சுவாமியே, நீர் சொல்லும், - நானே கவனிக்கி றேன். - நீர் உரைக்கக் கேட்டுக்கொள்ளும் - வசனத்தை அடி யேன் - நல் இருதயத்திலே - ஏற்றுக்கொண்டு, உமக்கே - நான் பிழைக்கிறதற்காக - பெலனை அளிப்பீராக.

உ. நேசரே, நீர் போதிவிக்கும் - மொழி யாவும் எனக்கு - ரட்சிப்புக்கென்றே பலிக்கும்; - அத்தால் துக்கம் நீங்குது; - அது ஒப்பில்லாதது, - தேனிலும் மா தித்திப்பு. - அதை நான் சந்தோஷமாக - கேட்டுக் கவனிப்பேனாக.

௩. பேயால் நான் நெருக்கமான - வழியில் கலங்கச்சே, - இந்தக் கோல் அல்லோ மெய்யான - திடனைக் கொடுக்கு மே. - அதில் ஊன்றி அடியேன் - சிலுவை சுமக்கிறேன். - சாவில் தேவ சொல் செயிக்கும் - பெலனை எனக்களிக்கும்.

௪. உமதுபதேசத்தாலே - என்றும் முசிப்பாறுவேன்; - அதை நான் மா வாஞ்சையாலே - நெஞ்சில் வைத்துக் காக்கி றேன். - உம்மை அங்கே நேரிலே - கேட்குமட்டும், இயேசு வே, - அதை என்றைக்கும் அன்பாக - என்னிடத்தில் காப் பீராக.

௫. என் செபத்தைக் கவனியும், - நேசமுள்ள இயேசுவே, - நிலைநிற்க ஈவளியும், - அப்போதும்மை நித்தமே - எந்த நிமிஷத்திலும் - வாய் இதயத்தாலேயும் - தாழ்மையாக நான் துதிப்பேனா, - போற்றிப்பாடி ஸ்தோத்திரிப்பேன்.

*Anna Sophia Landgräfin zu Hessen Darmstadt*, † 1683.

## ௩௱௭௧. Gott sei gelobet und gebenedeiet. (379.)



கர்த்தர் தம் திருமேனி ரத்தத்தாலே - நம்மைப் போஷித்ததினாலே - நம் அவரை மகா சந்தோஷமாக - போற்றி ஸ்தோத்திரிப்போமாக. - சுவாமி, இரங்கும். - கன்னி பெற்ற திருமேனியும் - விலையேறப்பெற்ற ரத்தமும் - நம்மிலே யாவர்க்கும் - நன்மையாய்ப் பலிக்கவும். - சுவாமி, இரங்கும்.

௨. திருச்சரீரம் சாவுக்கிரையாக - நம்மனைவருக்குமாக - கொடுக்கப்பட்டதால் இனி பிழைப்போம்; - இந்த நேசத்தை நினைப்போம் - சுவாமி. இரங்கும். - ஆ, கர்த்தாவே, மா அதிசயம், - தேவரீர் இறைத்த உதிரம் - கடனைத் தீர்த்தது, - தேவகோபம் நீங்கிற்று. - சுவாமி, இரங்கும்.

௩. கர்த்தாவின் ஆசீர்வாதத்தால் எப்போதும் - மெய்ச்சிநேகம் உண்மையோடும் - நடக்க நம்மனைவருக்குமாக - இந்த ஊண் பலிப்பதாக. - சுவாமி, இரங்கும். - உமதாவியைத் தந்தருளும். - இவர் எங்களைத் தற்காக்கவும். - உமது சபைக்கும் - சமாதானம் அருளும். - சுவாமி. இரங்கும்.

*Dr. Martin Luther*, † 1546.

## ௩௱௮௧. Jesus nimmt die Sünder an. (381.)



இயேசு பாவி நேசர் தாம்; - வழி தப்பிப்போன யாரும் — அவரால் திரும்பலாம், - அவரால் எக்கேடும் மாறும், - அவரால் ரட்சிப்புண்டாம்; - இயேசு பாவி நேசர் தாம்.

உ. நாம் மகா அபாத்திரர், - அவர் கிருபை புரிந்தோர். - ரட்சிப்போம் என்றுண்டவர் — சத்தியமிட்டே மொழிந்தோர்; - அவர் கிருபாசனம்; - இயேசு பாவி நேசர் தாம்.

ங. மந்தையைப் பிரிந்ததை — மேய்ப்பன் கவலை திருப்பும்; - பாவத்தில் விழுந்ததை - அவர் கரமே எழுப்பும். — கெட்டழியமாட்டோம் நாம்; — இயேசு பாவி நேசர் தாம்.

ச. அழும் பாவிகளையே - தம்மண்டைக் கழைக்கிறரே, — வரும் பாவியைத் தாமே - தேவ பிள்ளையாக்கிறரே. - அதை நம்பி வரலாம்; - இயேசு பாவி நேசர் தாம்.

ரு. துக்கப்பட்டென் பாவத்தை - நான் அறிக்கை பண்ண வந்தேன். - மீட்பரே, நீர் கிருபை - செய்யும், அப்போ மீட்பைக் கண்டேன். - போயிற்றென் வியாகுலம்; - இயேசு பாவி நேசர் தாம்.

சு. பாவம் சிவப்பாகிலும் - பஞ்சைப் போலாம்; எக்கறையும் - அவர் ரத்தம் கழுவும்; - நீங்கியின் வெள்ளங்கியையும் - தாருர், அது நிச்சயம்; - இயேசு பாவி நேசர் தாம்.

எ. மனச்சாட்சி குத்திறல், - பாவம தீர்ந்ததென்று சொல்வார். - மோசே குற்றஞ் சாற்றிறல், - அவர் பிணை நின்று கொள்வார். - நீங்கிற்றுகளினை எல்லாம்; - இயேசு பாவி நேசர் தாம்.

அ. இயேசு பாவி நேசர் தாம்; - அவர் என்னையும் நேசித்தார். - நானும் வந்து சேரலாம்; - எனக்கும் மன்னிப்பளித்தார். - சாவிப்போதாதாயமாம்; - இயேசு பாவி நேசர் தாம்.

*Erdm. Neumeister*, † 1756.

## நஙஅ/உ. Jesu geh voran. (382.)



இயேசுவே, நீர் தாம் - ஜீவ நாள் எல்லாம் - மோட்சத்துக்

குச் சேருமட்டும் - கை தந்தெங்களை நடத்தும். - நீர் முன்னாலே போம், - உம்மோடேகுவோம்.

உ. நீங்கு மிஞ்சினால், - எங்களை அன்பால் - கலங்காப்படிக்குக் காரும், - நிலை நிற்கும் வரந் தாரும். - இங்கே சிலுவை. - அங்கே மகிமை.

ங. சொந்தக் கிலேசமும் - நேசர் துன்பமும் - நெஞ்சை வாதித்தால், அன்பாக - பொறுமை அளிப்பீராக. - சீவ கிரீடத்தை - நோக்க நீர் துணை.

ச. நீர் இவ்வுலகில் - கஷ்ட வழியில் - எங்களை நடத்தினாலும், - ஆதரியும்; நாங்கள் மாளும் - போதும்மிடமே - சேரும், நேசரே.

*Nic. Ludw. Graf v. Zinzendorf.* † 1760.

## ௩௱அ௩. Nun preiset alle. (383.)



களித்துப் பாடு, - தேவ இரக்கத்தை - நன்றாய்க் கொண்டாடு, - மெய்ச்சபையே; உன்னை - வரவழைத்துத் தயவாக - தேடினோர் அன்பைத் துதிப்பாயாக : :

உ. கர்த்தர் பலத்த - கையினால் ஆளுவர், - புகழ்ப்பட - அவரே தக்கவர். - விண் சேனை பத்திப் பணிவோடும் - அவரைச் சூழ்ந்து துதித்துப்பாடும் :.:

ங. நிர்ப்பந்தமான - அஞ்ஞானக் கூட்டமே, - வெளிச்சம் காண - விழிக்கவேண்டுமே. - உன் மீட்பராலே எந்தத் தீங்கும் - பாவத்தின் தோஷமும் எல்லாம் நீங்கும் :.:

ச. ஆகாரம் தாறார், - தகப்பன் வண்ணமாய் - காப்பாற்றி வாறார், - தினமும் திரளாய் - அவர் கை எவ்விடத்திலேயும் - பூரணமான இரக்கம் செய்யும் :.:

ரு. மெய்க்கூட்டத்தாரே, - கர்த்தரைப் பாடுங்கள். - பூலோகத்தாரே, - துதிக்க வாருங்கள். - இங்கினி பயமே இராது. - கிறிஸ்துவின் சபையே, போற்றிப்பாடு :.:

*Math. Apelles v. Löwenstern,* † 1648.

## ௩௱௮௪. Lobe den Herrn, o meine. (384.)



கர்த்தரைப் போற்று, என் ஆத்துமாவே, - நான் சாகுமட்டும் போற்றுவேன். - சீவனின் நாட்கள் எல்லாம், கர்த்தாவே, - உம்மைப் புகழ்ந்து பாடுவேன். - சரீரம் சீவன் தந்தவர் - என்றும் துதிக்கப்பட்டவர். - அல்லேலூயா :,:

உ. அரசர் ஸ்திரிகளினால் பிறந்த - நரர்தான், மண் ஆவார்களே. - அவர்கள் யோசனையோ இறந்த - தினத்தில் வீணாய்ப் போகுமே. - நரர் ஒத்தாசை விருதா, - எங்கள் சகாயர் நீர் கர்த்தா. - அல்லேலூயா :,:

௩. இயேசுவின் ஐக்கத்தில் நிலைநின்று, - யாக்கோபின் தேவனைத் தானே - தனக்கடைக்கலமாய்த் தெரிந்து - கொண்டோன் மெய்ப்பாக்கியன் ஆமே. - இக்கர்த்தர் பேரில் நம்பினேன் - ஞானமும் பெலனும் பெற்றேன். - அல்லேலூயா : :

௪. பூமி சமுத்திரம் வானத்தையும் - எவ்வஸ்துவையும் சிஷ்டித்தார். - தாம் வாக்களித்த எல்லாவற்றையும் - மெய்யாக நிறைவேற்றுவார். - எல்லாவற்றிற்கும் ஆண்டவர் - நமக்கும் உண்மையுள்ளவர். - அல்லேலூயா : ;

௫. துன்பங்கள் அவநியாயத்தையும் - சகிப்போரைத் தற்காக்கிறார். - எளியவர்களின் பசிதாகத்தையும் - குறைவில்லாமல் தீர்க்கிறார். - கட்டுண்டோரை அவிழ்க்கிறார்; - பல இரக்கம் காட்டுவார். - அல்லேலூயா :,:

௬. குருடர் கண்களைத் தாம் திறந்து, - செவிடர் கேட்கப் பண்ணுவார். - பெலனற்றோருக்குக் கையைத் தந்து, - எல்லாரையும் சிநேகிப்பார். - திக்கற்ற பிள்ளை விதவை - யாவர்க்கும் அவரே துணை. - அல்லேலூயா :,:

௭. அக்கிரமக்காரர் பின்வாங்குவார்கள், - அவர்களைக் கவிழ்க்கிறார். - சொந்த வலைகளில் சிக்குவார்கள், - கர்த்தர்

கலங்கடிக்கிறார். - சீயோனின் ராசா தேவரீர் - எங்களை என்றும் காக்கிறீர். - அல்லேலூயா :,:

அ. ஆண்டவர் அற்புதம் செய்வதற்கு - சமர்த்தர், அவர் என்றைக்கும் - புகழப்பட்டவர் என்பதற்கு — எல்லாரும் ஆமேன் என்கவும். — பிதா குமாரன் ஆவிக்கும் — இஸ்தோத்திரம் உண்டாகவும். — அல்லேலூயா :,:

*J. D. Herrnschmidt*, † 1723.

## ௩௱அ௫. Ich bin ein kleines Kindelein. (385.)

கர்த்தாவே, சின்ன பிள்ளை நான், — என் பெலன் கொஞ்சமே, — ரட்சிப்படைய ஆசைதான், - வகை அறியேனே.

உ. எனக்கொப்பாய், என் மீட்பரே, - ஓர் பிள்ளையாகி, நீர் - என் பாவம் சாவும் நீங்கவே - இரத்தம் சிந்தினீர்.

௩. இவ்வன்புக்காய் நான் நன்றியை - செலுத்த உதவும், - உமக்குப் பிரீதியானதை - எனக்குக் கற்பியும்.

ச. எனக்குண்டான யாவையும் — நான் பலியாய்த் தாறேன்; — இரக்கமாய் என் நெஞ்சையும் — நீர் ஏற்றுக்கொள்ளுமேன்.

௫. உமக்கு ஞானஸ்நானத்தில் - நான் புத்திரன் ஆனேன்; - குழந்தையாக மோட்சத்தில் - சுதந்தரம் பெறறேன்.

௬. நீர் என்னைச் சுத்தமாக்கினீர், — பேய் என்னை மீளவும் - தீண்டாப்படிக்குத் தேவரீர் - சகாயமாயிரும்.

# அநுபந்தம்.

## ௬. Warum willt du draussen stehen. (6.)



நீர் வெளியே நில்லீராக, - ஆசீர்வாதக் கர்த்தரே, - கடாட்சங் கூர்ந்தென்னிடமாக - வந்திறங்கும், இயேசுவே. — என் மகிழ்ச்சி தேவரீர், - சமய சகாயர் நீர். - ஆ, என் உள்ளத்தில் எரியும் — காய நோவை ஆற்றுவியும்.

உ. தெய்வ ஞாயமென்ற சுத்தி - உள்ளத்தை நொறுக்குது; - அதின் பயமான புத்தி - கத்திபோல் அறுக்குது; - தம்பிரானின் கோபமும் — சாபக் குமுறல்களும் — சத்தமாய் என்மேல் முழங்கும், - என் மனமெல்லாங் கலங்கும்.

௩. கிருபைக்குக் காத்திராதே, — நரக நெருப்புக்கு — உள்ளாவாய் என்றோய்வில்லாதே - பேயுங் கூப்பிடுகுது. - ஆனால் இதல்லாமலும் — சுய மனச்சாட்சியும் — என்னைக் குத்தின் மேலே குத்தும் — கூட்டி, வேதனைப்படுத்தும்.

௪. நோவை லோகத்தாரிடத்தில் — ஆற்றப்போனேனேயாகில், — கேடு பெருகுந் தலத்தில் — சேர்ந்தேன்; அங்கே ஏதெனில் — மோசம் போக்கும் ஆறுதல், — துக்கமாஞ் சந்தோஷங்கள், — எத்தரான அனுசாரர், — பரிகாச நேசக்காரர்.

௫. உலகத்தில் யாவுங் குப்பை, — யாவுஞ் சாரமற்றது; — எந்தப் பெருமையிருப்பை — பெற்றும், என்ன, வாடும் பூ. — உலக ஐசுவரியம் — அன்றன்றுள்ள சஞ்சலம்; — இன்பங் கண்டால் இன்று வாழ்வு. — நாளை துக்கமான தாழ்வு.

௬. உம்மிலே சந்தோஷம் யாவும் — இயேசுவே, இருக்குது. — நீரே என் குடாவுந் தாவும். — நீர் நீரே என் பூரிப்பு. - என் மகா இக்கட்டிலே — என்னைத் தேற்றும், இயேசுவே. — சுவாமி, என்னை ஆதரியும். - ஒளியே, எனக்குதியும்.

எ. மனதே, சந்தோஷமாகு, — உன் மனுக்கிரங்கிறார். — திறவுண்டு விரிவாகு, — உன்னில் வாசம் பண்ணுவார். — அவர்க்காயத்தப்படு, — அவரை உன் வீட்டுக்கு — எசமானாய் ஏற்றுக்கொள்ளு, — அவர்க்குன் குறையைச் சொல்லு.

அ. பார், உன் நோவை என்னமாக — நீங்கிப்போகப் பண்ணினார்; — எத்தனை இரக்கமாக — உன்னை உயிர்ப்பிக்கிறார். — சாத்தான் செய்யுந் தூருசு — என்னமாய் அடங்கிற்று, — திகிலாய்த் தன் ராணுவோடும் — உன்னை விட்டு நீங்கி ஓடும்.

௯. உனக்கு நல் வாழ்விருக்கும், — இயேசு உன்னை ரப்புவார், — எந்தப் பாக்கியங்களுக்கும் — அவர் தாமே காரணர். — அவர் தயை உன் முடி, — அவர் தங்கும் கோட்டை நீ, — நீ உன் சகல நாளாக — அவரில் நிலைப்பாயாக.

௰. சத்துராதியின் ஆங்காரம் — அவமாகிறதுக்கு — அவர் வானத்தின் கூடாரம் — சுற்றும் உன்னை மூடுது. — தேவதூதர் நேசராய் — ராப்பகல் உன் பக்கமாய் — நின்று, உன்னைக் காத்திருந்து, — கையிலுஞ் சுமப்பதுண்டு.

௰௧. உன்னால் நடப்பிக்கப்பட்ட - பாவம் யாவும் அற்றது, - சுவாமியின் மகா பலத்த — நேசம் அதை நீக்கிற்று — கிறிஸ்தின் வெற்றி வெற்றியே, — உன்மேல் உலகத்திலே — எந்தக் கேடெழும்பினாலும், - அவர் ஆசீர்வாதம் ஆளும்.

௰௨. கிறிஸ்து உன்னைப் பட்சமாக — ஏற்றுக்கொண்டிருக்கச்சே, - எந்தத் தீங்கும் நன்மையாக - உனக்குப் பலிக்குமே. நீ திரும்ப அவருக்கு - மாறா உண்மையாயிரு, - அப்போதுனக்கென்றென்றைக்கும் - போர்ந்த ஆறுதல் கிடைக்கும்.

*P. Gerhardt.* † 1676.

## ௩௫. Jesu, rufe mich. (35.)



என்னை, இயேசுவே, - உம்மிடத்திலே - வரச் சொல்லும், சேர்த்துக்கொள்ளும். - சுவாமி இயேசுவே.

உ. தாழ்வில் சென்மித்திர், - பெத்லகேமில் நீர் - ஏழைக்காக ஏழையாக - வந்து சென்மித்திர்.
௩. நல்ல தானமே, - பெத்லகேம் ஊரே, - நீ அனந்த வாழ்வைத் தந்த - நல்ல தானமே.
௪. நீ சிறியது, - ஆனால் பூமிக்கு - சோதி காண மூலமான - நீ பெரியது.
௫. தெய்வவசனம் - என் நட்சத்திரம், - கிறிஸ்தைக் காட்டித் தாற வாத்தி - தெய்வவசனம்.
௬. உமக்கேங்கிறேன், - காட்சி தாருமேன், - ஆவலோடும் பத்தியோடும் - உமக்கேங்கிறேன்.
௭. உம்மைக் காண்பியும், - மறையாதிரும், - தெளிவாக அன்புமாக - உம்மைக் காண்பியும்.
௮. தேவ பிள்ளையே, - வல்ல மீட்பரே, - உம்மை நாடும் நெஞ்சு வாழும், - தேவ பிள்ளையே.
௯. இன்ப நேசரே, - தேவரீரையே - என்றும் பாடும் பேறைத் தாரும், - இன்ப நேசரே.

*A. Drese,* † 1718.

## ௲௯. Auf, auf, mein Herz mit Freuden. (61.)



ஓய் துக்கத்தின் பிற்பாடு - இன்றே விளங்கிய - வெளிச்சத்தைக் கொண்டாடு, - என் நெஞ்சே, நீ மகா - மகிழ்ச்சியாயிரு. - பார், மாண்டபிறகு - குழியில் ரட்சகர் - கிடந்திருந்தவர்.
உ. அப்போதகந்தையாக - பேய்க்கூட்டந் தள்ளிற்று, - இப்போதோ திகிலாக - முறிந்திருந்து. - எழுந்த ரட்சகர் - செயம் அடைந்தவர், - கொடியை ஏற்றினார்; - எதிர்ப்பவர்கள் ஆர்.

௩. மண்மீதில் அவர் நின்று — தெய்வீக மைந்தனாய் — விளங்கையாலே இன்று — பிசாசு பயமாய் — தெறித்துப் போகுது. — தன் கோட்டைகளுக்கு — இடிப்பும் அழிவும் — வருமென்றுணரும்.

௪. இதே என் கண்ணுக்கான — சந்தோஷ வேடிக்கை,— என் மனதில் உண்டான — சலிப்பின் பாரத்தை — என் இயேசு நீக்கினார், — கதி அளிக்கிறார்; — நான் அதைப் பற்றினேன், — இனிப் பயப்படேன்.

௫. பேய் என்னைப் பற்கடித்தும், — வீணான கோபமே, — பாதாளஞ் சுவாலை விட்டும், — அதென்னைச் சேராதே. - இனி நான் சாவுக்கேன் - நடுநடுங்குவேன், - அதை என் ரட்சகர் - விழுங்கிப்போட்டவர்.

௬. என்பேரில் லோகத்தாரும் — சினத்துஞ் சீறியும், — அப்பெத்தரிக்கம் வாடும், — அம்மூர்க்கம் உலரும். — என்மேல் உபத்திரம் — வந்தாலும் பாக்கியம்; — இக்கட்டின் பிறகு — மெய்வாழ்வுண்டாகுது.

௭. உறுப்பு சிரசோடே — எல்லா இடத்திலும் — போ மாப்போல், கிறிஸ்துவோடே — இக்கட்டைச் சாவையும் — பாதாளத்தையுமே — பிரிதலன்றியே — நல் நம்பிக்கையுடன் — நான் தாண்டிப்போறவன்.

௮. உயர்ந்த மகிமைக்கு — போறார் பங்காளன் நான், — ஆர் என்னை என் தலைக்கு — விலக்கிப்போடுவான்; — பகைஞர் மிகவும் — வற்மித்துப் போரிட்டும், — அவத்த உயுத்தம், அவர் என் கேடகம்.

௯. நான் இயேசுகிறிஸ்துவோடே — பரத்தின் வாசலில்— உட்போறேன் அவரோடே, — சகித்தோனே இதில் — பிரவேசம் பண்ணுவான். - இவ்வார்த்தை அதில் தான் - பொன்னும் மொழியைப்போல் — பதிந்த தெய்வ சொல்.

*P. Gerhardt*, 1676. †

## ௬௭. Triumph! Triumph! es kommt mit Pracht. (67.)



நல்ல செயம், போர் செய்தின்றே — கெலிப்பாய் ராசா வாருரே; — அவரைச் சேர்ந்தோர் யாவரும் — இந்தச் செயத்தைப் பாடவும். — நல்ல செயம், நல்ல செயம், முடிவில்லா — பூரிப்புமாம், அல்லேலூயா.

உ. மீட்பர் அடைந்த வெற்றிக்கு — எச்சிஷ்டியுங் களிக்குது; — சீர்கெட்ட பூமிக்குள்ளதாம் — சாபம் அத்தால் நிவிர்த்தியாம். — நல்ல ஜ

௩. கர்த்தர் மரிக்கும் நாளிலே — இருண்ட சூரியன் இன்றே — அவர் உயிர்த்த வெற்றிக்கு — மகிமையாய் விளங்குது. — நல்ல ஜ

௪. சாந்தமாம் ஆட்டுக்குட்டியாய் — இருந்தோர் வல்ல சிங்கமாய் - வாருர், பகைஞரினுட - பத்திரக்காவல் விருதா. — நல்ல ஜ

௫. ரண்டாம் ஆதாமின் தூக்கமாம் — இறப்பிலே திறந்ததாம் — அவருடைய பக்கத்தால் — அவர் மனைவி தோன்றினாள் நல்ல ஜ

௬. ஆரோனின் கோல் ராப்போனபின் — துளிர்த்துப் பூத்துக்காய்த்ததின் — சாயலாய்க் கிறிஸ்தின் மேனியும் — ஜீவனுண்டாய்க் கனிதரும். — நல்ல ஜ

௭. பாவ விஷத்தின் தோஷமும் — அத்தால் இருந்த தீமையும் — ரட்சகராலே நீங்கிற்று. — மகிமை தேடப்பட்டது. — நல்ல ஜ

அ. உத்தரவாதமாச்சுது, — சபிக்கப்பட்ட ஆவிக்கு — நம்மில் பலமில்லாதே போம், — சாவுக்கினிப் பயந்திரோம். — நல்ல ஜ

௯. மேட்டிமையான பேலியாள் — தள்ளுண்டு போய் விழுந்ததால் - அதின் அரண்கள் யாவுக்கும் - நிர்மூலமாகுதல் வரும். - நல்ல ஜூ
௰. சீஷரின் ஆக்கிரமங்களை — நீர் தேற்றி, சமாதானத்தை - தந்தது போலே, இயேசுவே, — எங்களுக்கும் நீர் தாரீரே. — நல்ல ஜூ
௰௧. நாங்கள் உடந்தையாய் உம்மால் - செயித்து, மோட்ச வாசலால் — உட்பிரவேசித்தென்றைக்கும் — உம்முட ஆ... யைப் பாடவும். - நல்ல ஜூ

*H. Ammersbach*, † 1691.

## ௱௩. Mein Heiland nimmt die Sünder an (103.)



கெட்டோரை இயேசு சேர்க்கிறார்; — மா பாவக்கேடுழுந் தப்பட்டு, — பூலோகமெங்கும் ஆற்றுவார், — ரட்சிப்பார், தேற்றுவாருமற்று — துர்ச்செயல்கள் திகிலினால் — நிறைந்து, மோசே நியாயத்தால் — திக்கந்தகப் பாதாளத்துக்கு — தள்ளுண்கத் தீர்ந்தவர்களுக்கு — துணையாய் அவர் ஏற்பட்டார்; - கெட்டோரை இயேசு சேர்க்கிறார்:.:

௨. மட்டற்ற தாய் அன்பாய் அவர் — வானாசனம் விட்டிங்கே வந்து, — சீர் கெட்ட பாவியின் இடர் — இக்கட்டையும் எல்லாஞ் சுமந்து, — சபிக்கப்பட்ட நமக்காய் — தாமே

மரத்தில் சாபமாய் - அறையப்பட்டிரக்கத்தாலே - உயிரைத் தந்தபடியாலே — இனி அஞ்சாதிரு என்பார். — கெட்டோரை இயேசு சேர்க்கிறார்.:

௩. திக்கற்ற ஆத்துமங்களை — அவர் இப்போதரவணைத்து — அவர்களுக்கு வேதனை — இல்லாமல் குற்றத்தைக் குலைத்து: — நான் சிந்தின இரத்தத்தை — நினை, உன பாவச் சேனையை — கடலின் ஆழத்தில் புதைத்தேன், — நீ வாழ மோட்சந்தேடி வைத்தேன், — மகிழென்றுற்றித் தேற்றுவார். — கெட்டோரை இயேசு சேர்க்கிறார்.:

௪. பிதாவண்டைக்கவர்களை - தாமே கையேந்திக்கொண்டு வாரார், — அத்தால் இவர்க்குக் கிருபை — பிறக்கும், இனிப் பாவம் பாரார் — மிகுந்த பட்சமாய்ப் பிதா — அவர்களுக்குத் தம்முட — பிள்ளைகளோடே பங்கு தந்து, — பரத்தின வாசலைத் திறந்து, — மகா இரக்கங் காண்பிப்பார். — கெட்டோரை இயேசு சேர்க்கிறார்.:

௫. கண்ணீர் சொரிந்தோர் பேரிலும், — ஆம், இன்னங் கெட்டலைந்தோர்மேலும் — இவர்க்கு மனதுருகும், — இம் மேய்ப்பரும் இம்மானுவேலும் — நிட்பாயக்காரர் கிட்டவும் - அல்லோ சகேயு வீட்டிலும் — குணம் அளிக்க வந்து தங்கி, — மா பாவி மீதிலும் இரங்கி, — அவள் துக்கிப்பை ஆற்றினார். — கெட்டோரை இயேசு சேர்க்கிறார்.:

௬. மறுதலித்த பேதுருவை — திரும்பவுந் தாம் கைவிடாமல் - கண்ணோக்கினார், ஆனால் அதை — அப்போதுமாத்திரஞ் செய்யாமல், - எப்போதும் அவர் சற்குணர், - இரக்கம் அன்புமுள்ளவர். — முன் பாவிக்கிங்கே தாழ்விடத்தில் — இரக்கஞ் செய்தோர் உன்னதத்தில் - உயர்ந்தபின் வேறுயிரார். — கெட்டோரை இயேசு சேர்க்கிறார்.:

௭. வா, பாவி, நீ ஆராகிலும், — வா, உன் பொல்லா வழியை விட்டு. - குனிந்து சேர்ந்த யாரையும் - தள்ளாத ரட்சகரைக் கிட்டு; - ஓ, மோட்ச வாழ்வு வேண்டாமோ, - வீணாய் நீ சாக மனதோ, — மீட்டோரிருக்க, பேய்களுக்கு — கீழ்ப்பட்டிருப்பதென்னத்துக்கு, — வேண்டாம், தப்பித்துக்கொள்ளப் பார்; — கெட்டோரை இயேசு சேர்க்கிறார்.:

௮. கன சுமை சுமந்தோனே, — வா, வா, உன் அங்கலாய்ப்பைக் கேட்பார். — நீ பாரத்தால் தரையிலே — நகர்ந்து வந்

தும். உன்னைச் சேர்ப்பார். - அடைக்கலம் அவர் மனம், - வா, வா என்றெத்தனை தரம் - நின்றுன்னை நோக்கிச் சத்தமிட்டார்,- வாவேன், எல்லாத்தையும் மன்னித்தார், — வா, ஏழைப்பூச்சி, தண்டியார். — கெட்டோரை இயேசு சேர்க்கிறார்: :

௩. நான் மா பெரிய பாவியே. — நான் மட்டுத்திட்டமு மில்லாதே — தெய்வன்பைப் போக்கடித்தேனே, — இனி மன்னிப்புண்டோ என்காதே. — நீ கபடற்ற உண்மையால் — பணிந்து கிறிஸ்தை அண்டினால் — பலத்த கையினால் ரட்சிப்பார், — ஆம், இன்னங் கிருபை அளிப்பார். — நீங்காத கேட்டை நீக்குவார். — கெட்டோரை இயேசு சேர்க்கிறார்: :

௰. ஆனால் ஆகட்டும், இன்றுதான் — அவர் இரக்கம் முடியாதே; — இன்னின்ன இன்பம் முந்தி நான் — ருசிக்கலாம் என்றுஞ் சொல்லாதே. — அவர் அழைக்கையில் பணி, — அவர் கை நீட்டுகில் பிடி. — ரட்சிப்பின் நாளில் தூங்கினோர்கள் — மோட்சானந்தத்தில் பங்கற்றோர்கள். — பிற்பாடு கூப்பிட்டால், கேளார்; — இன்றே வா, இன்று சேர்க்கிறார்:.:

௰௧. கெட்டோரைத் தேடும் நேசரே, — ஆ, என்னைச் சேர்த்துக்கொண்டணையும்; — எல்லாரையும் ரட்சிப்பையே — பிடிக்கப் பலமாய் அசையும். — தவிப்பவர்க்கு உமது — அன்புள்ள நெஞ்சைக் காண்பித்து, — அவனவன் உம்மண்டை, சென்று: — இப்பாவியையுஞ் சேர்த்தாரென்று — மகிழ்ந்து தேறுமட்டுக்கும் — கெட்டோரைச் சேர்த்துக்கொண்டிரும்:.:

*L. F. F. Lehr*, † 1744.

## ௱௲. Himmel, Erde, Luft und Meer. (108.)



கர்த்தரை விண் மண் கடல் — தோத்திரிக்கிறதுகள். — என தாத்துமாவே, நீ - கூடவும் இஸ்தோத்திரி.

௨. விண்ணில் சூரியன் நிலா — இத்தனை நட்சத்திர — சேனையுங் கர்த்தாவுக்கு — சாட்சியாய் விளங்குது.

௩. பூமியின் சிங்காரிப்பு – வெகு நேர்த்தியானது, – நாட்டில் காட்டில் கர்த்தரை – நோக்குஞ் சீவன் எத்தனை.

௪. கர்த்தரின் புகழ்ச்சிக்கு – குருவிகள் கூவுது; – காற்று மாரி மின்னலும் – ஏசமானைச் சேவிக்கும்.

௫. மா கடலின் அகலம் - ஆழம் ஓட்டம் முழக்கம் - ஏற்றம் வற்றம்: கர்த்தரே, – நீர் பெரியோரென்குதே.

௬.* நீர் உண்டாக்கினதெல்லாம் – வெகு ஆச்சரியமாம், – அதைச் சொல்ல மனிதர் – யாவரும் போதாதவர்.

*Joachim Neander*, † 1680.

## ௱௫௪. Jesu, Kraft der blöden Herzen. (154.)



பெலவீனரின் பெலனும் – துக்கப்பட்டிருக்கிற – பாவிகளுடைய திடனும் – வைத்தியருமாகிய – இயேசுவே, என் ஏசமானே, – கேட்டை நீக்கும் பலவானே.

௨. என் இதயஞ் சென்மபாவம் – ஊறிய ஊற்றுனது, – என்னுடைய முழுச்சுபாவம் – நன்மைக்கு விரோதித்து, – பாவத்தின் விஷத்தினாலும் – ரம்பும், கெட்ட இச்சையாலும்.

௩. ஆத்துமப் பகைஞராலே – காயப்பட்டுப் போன நான் – உம்மண்டைக்கு ஆசையாலே – ஓடிச் சேருமுன்னே*தான் – பேய் தன் கூட்டத்துடனேயும் – என்னில் மீளவும் அம்பெய்யும்.

௪. பண்ண வேண்டிய செபத்தை – அசதி மறிக்குது, – உமதாவி ஆத்துமத்தை – நன்மைக் கேவுவதற்கு – வாறபோதெதிர்த்திருக்கும் – மாம்சம் அதைத் தடுக்கும்.

௫. நோயாம் பாவிகளுக்கான – பரிகாரி, இயேசுவே, – அப்புறம் இவ்வாதையான – கேட்டைத் தாங்க மாட்டேனே. – ஆ, என் பேரிலே இரங்கும், – உம்மால் கேடெல்லாம் அடங்கும.

௬. உம்முடைய இரத்தத்தாலே - குற்றம் நீக்கி ரட்சியும்; - எனக்குமதாவியாலே - நற்குணத்தை அருளும். - கர்த்தரே, இந்தடவாக - சொஸ்தத்தை அளிப்பீராக.

௭. என் இருதயத்தில் வந்து - தங்கும், என் சகாயரே; - அப்போ துக்கத்தை மறந்து - வெற்றியை அடைவேனே. - உமக்குத் துதி உண்டாக - என் செபத்தைக் கேட்பீராக.

*Ch. Knorr v. Rosenroth*, † 1689.

## ௱௬௪. So wahr ich lebe, spricht dein Gott. (161.)



௧. பாதகனின் சாவை நாம் - விரும்போம், அவன் பாவமாம் - வழியை விட்டு நம்மண்டை - மனந்திருப்பி வாழ்வதை - விரும்புவோம் என்றுண்டவர் - மா ஆணையோடே சொன்னவர்

௨. மனிதனே, இவ்வார்த்தையை - உன் மனஸ்தாபத்தில் நினை; - அடிமாதே, இங்குனக்கு - நல்லாறுதல் கிடைக்குது; - நொறுங்குண்டோரைச் சுவாமியார் - அன்பாகப் பார்ப்போம் என்கிறார்.

௩. ஆனாலும் உன் நினைவிலே - நீ நிர்விசாரனாகாதே; - நெடுநாள் வைத்திருக்குது, - நான் இங்கே நன்றாய்ப பூரித்து - இருந்தும், கடைசியிலே - மன்னிப்படைவேன் என்காதே.

௪. மெய்தான், கர்த்தாவின் தயவு - பெரியதாயிருக்குது; - ஆனால் விசாரமன்றியே - அதின் கணக்கின் பேரிலே - பொல்லாப்பு செய்யும் மனிதன் - கோபாக்கினைக்குள்ளாபவன்.

௫. சுதனுக்காகத் தயவு - நாம் செய்வோம் என்றோர் உனக்கு: - நீ நாளை உயிருடனே - இருப்பாய் என்றதில்லையே; - நீ சாவாய் என்று அறிவாய், - எப்போது என்றறிந்திராய்.

௬. இப்போ குணப்படு, இப்போ — ஆங்காலம், நாளை என் னமோ; — இப்போ சுகித்தோரில் சிலர் — ஓர் வாரம் போனால் போனவர். — ஆனால் குணப்படாதோனாய் - நீ செத்தால், வாதைக்குள்ளாவாய்.

௭. ஆ, இயேசு சுவாமி, மரணம் — அணுகுமுன்னே சீக் கிரம் — நான் உம்மண்டைக்குச் சேர நீர - சகாயம் பண் ணக்கடவீர். - நான் சாவுகின்றும் என்றைக்கும் - ஆயத்த மாயிருக்கவும்.

*Joh. Heermann*, † 1647.

## ௱௭௨. Herr, ich habe missgehandelt. (172.)



௧ மா பொல்லாப்பை நடப்பித்தேன், - பாவக்கேடு மிஞ்சிற்று, - நல்வழியை விட்டுவிட்டேன், - அத்தால் இப்போதுமது - கோபத்துக்குப் பயமாக - நிற்கிறேன், திகைப்புமாக.

௨. நான் கடலைத்தான் கடந்தும், - ஆழத்தில் இறங்கியும், - காற்றின் வேகமாய்ப் பறந்தும், - எவ்விடத்திலாகிலும் - தப் பேன், என்னை எந்தத் திக்கும் - தேவரீரின் கை பிடிக்கும்.

௩. ஆகையால் என் துரோகங் கண்ட — உம்மைநத்தான் பணிகிறேன்; - பிள்ளைப்பாக்கியம் இழந்த - பாவிக்கு இரங்கு மேன்; - என் திரள் பொல்லாப்புக்காக - அப்புறம் எறியீராக.

௪. மா சமுத்ரமணலை — எண்ணத் தக்கதாகியும், — என் பிழைகளின் திரளை — எண்ணி. என்மேல் சுமரும் — குற்றங்க ளினால் உண்டாகும் — தீங்கைச்சொல்ல ஆரால் ஆகும்.

௫ அழுங்கள், பொங்காரமாக, - என் இரண்டு கண்களே, - மிகவும் என் லச்சைக்காக — அழ என் தலையிலே — கண்ணீர் ஊற்று திறவுண்டு — ஓட எனக்காசை உண்டு.

௬. கல்நெஞ்செனக்குள் பிளந்து, — கண்ணீர் என் முகத் திலே — வெள்ளம் வெள்ளமாய்ப் புரண்டு — பாய்ச்சலானால் வாசியே; — ஆனால் இப்படி காணாத, — ரத்தம் ஓடியும் போ தாது.

எ. நீரோ, தேவ ஆட்டுக்குட்டி, — சிந்தின இரத்தமே - பாவியைக் குணப்படுத்தி, — ஆக்கினையை நீக்குதே; — ஆ, என் மேல் ஒரே துளியும் - படக் கிருபை புரியும்.

அ. என் சுமையை நீர் ஒழித்து — ஆழமாய்க் கடலிலே — தள்ளி, என்னை ஆதரித்து. - சுத்தமாக்கும், இயேசுவே, — என்னை உம்மில் துக்கமாற்றும் — உமதாவியால் காப்பாற்றும்.

*J. Franck*, † 1677.

## ௨௱௨௯. Jesu, hilf siegen, du Fürste des Lebens. (226.)



இயேசுவே, பேயின் சதிகளைப் பாரும், - அது இருளின் பலத்துடனே - வந்தென்னை எத்திக் கெடுப்பதை நாடும்; — வெல்ல உதவும், என் ரட்சகரே. - என்னை அச்சத்துரு எத்தப்படியும் - சல்லி அரித்துப் பாழாக்கத்திரியும்.

உ. இயேசுவே, பேயுடன் லோகமுங் கூடும், - துஷ்டமாய் அல்லது தந்திரமாய் - வந்து, என் ஆத்துமக் கோட்டையைச் சூழும்; - வெவ்ல உதவும், நீர் வல்லமையாய் - உமதடியானுக் காதரவாக - மோசம் அனைத்தையும் நீக்குவீராக.

ங. இயேசுவே, என்னிலுந் தீங்குகள் ஊறும். — என்னுட வாலிபப் பாவங்களின் - நினைவால் வெட்கம் என் கண்களை மூடும்; - வெல்ல உதவும், என் ஆத்துமத்தின் - புண்கள் ஆறட்டும், நான் மிகுதியாக - நாணிச் சுத்தாங்கம் அடைந்தவனாக.

ச. இயேசுவே, நெஞ்சிலும் மனதிலேயும் - கோபம் பொருமையும் பெருமையும் - தோன்றிய போது அனுக்கிரகஞ் செய்யும், - வெல்ல உதவும், துணையாயிரும். - சுவாமி, நான் தாழ்மையைக் கற்றுக்முடைய - சிலுவையில் என் இடும்பை அறைய.

ரு. இயேசுவே, இச்சையை என்னில் அகற்றும் - மாமிசஞ் சாக என் ஆவி உம்மால் - பரம வாஞ்சைக் கெழுப்பப்படட்டும், - வெல்ல உதவும்; நான் தேவரீரால் - நல்ல ஆரோக்கிய மாவதற்காக - உம்மை எப்போதைக்கும் நாடுவேனாக.

சு. இயேசுவே, என்னிலே உம்முடைய சித்தம் - மாசறச் செய்யப்படுவதற்கே - என் முறட்டாட்டக் குணங்களை நித்தம் - வெல்ல உதவும், என் ஆண்டவரே. - எனக்கும் என்னுடைய இச்சைக்குஞ் சாவேன், - முழுதும் உம்முடைய அடிமையாவேன்.

எ. இயேசுவே, என்னை எந்நேரமுங் காரும், - உம்மை அடியேன இழப்பதற்கே - பேய் என்னைச் சோதித்தால், ஆயுதந்தாரும். - வெல்ல உதவும், என் ஆதரவே. - நீரே என பொக்கிஷம், என்னில் தரியும், - பேயைத் துரத்தப் பலத்தை அளியும்.

அ. இயேசுவே, எத்தனாய்ச் சாத்தான் புகுந்து, - சூராய் வெளிச்சத்தின் தூதனுடை - வேஷம் எடுத்து வருகிறதுண்டு, - வெல்ல உதவும், பலத்த கர்த்தா. - சர்ப்ப வினைகள் மயக்கிக் கலக்கும், - நீர் என்னை விட்டால், மீட்பெங்கே கிடைக்கும்.

கூ. இயேசுவே, பொய்கள் பொய்யென்று காணாமல், - மெய்யென்றாக எழும்புகிற - வேளையில் என்னை அமிழ ஒட்டாமல், - வெல்ல உதவும், கவட்டினுடை - ஆவிகளை நான் ஆராய்வதற்காக - சீக்கிரந் தெளிவுண்டாக்குவீராக.

ய. இயேசுவே, நான் செயம் பண்ணி விழிக்கும், - சத்தியை ரட்சகரான நீரே - தந்து, நான் தூங்கி விழாதபடிக்கும் - வெல்ல உதவும், நான் மோசத்திலே - நெருசி இளைக்கையில் நீர் எனக்காக - வேண்டிக்கொண்டென்னை எழுப்புவீராக.

யக. இயேசுவே, சத்தி எல்லாம் என்னை விட்டு, - நான் மிரண்டோடிய மானைப்போல் - திக்குத்தோன்றாமல் தவித்தால், ரட்சித்து - வெல்ல உதவும்; நீர் கிருபையாய் - சேர்ந்து, பலங்கொடுத்துள்ளுக்குள்ளாக - ஏங்கிற ஆவிக்கிரங்குவீராக.

யஉ. இயேசுவே, உமக்கிஸ்தோத்திரமாக - சகல போரிலும் மோசத்திலும் - தேவரீரால் செயங் கொள்ளுவேனாக, - வெல்ல உதவும், ரட்சித்தருளும். - சௌரியவானே, எக்காலங்களுக்கும் - உமது நாமம் விளங்கியிருக்கும்.

யஙு. இயேசுவே, சீயோனுடைய இக்கட்டும் - நீடிய ஆபத்தும் ஆறி வர, - பாபேல் விழுகிற காலம் வரட்டும், - வெல்ல

உதவும், ரட்சித்தருள. - துயரப்பாட்டைக் கெம்பீரப்பாட்டாக - மாற்றி, பாழானதைக் கட்டுவீராக.

௰௪. இயேசுவே, நீர் மணவாளனாய் வாற - நாளுக்கு நாங்கள் சிங்காரப்பட, - சர்ப்பத்தின் பெருமையோவெனில் தாழ,- வெல்ல உதவும்; உம்மாலே எல்லா - காரியங் கூடும், நீர் சதியவாறும், - கண்ணெல்லாம் உமது வெற்றியைக் காணும்.

*J. H. Schröder*, † 1728.

## உ௱௪௧. Du, o schönes Weltgebäude. (241.)



வெகு பேருக்கின்பமான - லோகமே, நீ எனக்கு - திகிலும் கசப்புமான - பரதேசமானது. - மண்ணை ஆசையாகப் பற்றும் - லோகத்தார் அதால் வாழட்டும்; - தேவரீரின் பேரிலே - வாஞ்சையானேன், இயேசுவே.

உ. வெயிலில் வருந்தமான - வேலை செய்துழைக்கிற - கூலிக்காரர்: சுகமான - தூக்கத்தால் திடப்பட - எப்போபொழுது புகுந்து - போகுமென்று காப்பதுண்டு. - இயேசுவே, நான் உம்மண்டை வந்து சேர்ந்தால், தாவிளை.

௩. நீர் தரிசனை கொடுத்து - என்னைச் சேர்க்கும் நன்மைக்காய் - நான் எல்லாத்தையும் வெறுத்து, - லோக வாழ்வைக் குப்பையாய் - எண்ணுவேனே; நீர் தான் தேடும் - ஆஸ்தியுங் கதியும் பேறும். - இயேசுவே, நான் உம்முடன் - சேர்ந்திருந்தால், பாக்கியன்.

௪. தங்கள் வர்த்தகத்துக்காக - வேறே பேர்கள் கப்பலில் - ஏறி, நாசமோசமாக - தூரமாய்க் கடல்களில் - யாத்திரைகளைப் பண்ணட்டும், - நான் உம்மண்டை சேருமட்டும் - தேவரீருக்கு நேரே - ஓடுவேன், என் இயேசுவே.

௫ இந்த என் சரீரமான - மண்ணை மண் படுக்கைக்கு - கொண்டுபோய்ப் புதைப்பதான - காலம் வந்தால், நல்லது. - பாடுகளெல்லாம் முடிந்த - அந்த நாளிலே பிரிந்த - ஆவி உம்மண்டையிலே - தங்கப்போமே, இயேசுவே.

௬. வா, வா, நித்திரையின் தோழா - சாவே, என்னைக் கொண்டுபோ; - நான் குடாக்கடலில் ஓட - கப்பலைத் திருப் பாயோ. - லோகத்தாரின திகிலாளுய், - எனக்கோ சந்தோஷ மாளுய்; - உன்ளுல் இயேசுவண்டைக்கு - உட்பிரவேசமாகுறு.

௭. ஆ, நான் சாவல் வீடாம் இந்த - அங்கத்தை இந்நேர மே - விட்டு, செல்வங்கள் பொழிந்த - பரமண்டலத்திலே - சேர்ந்து, பரிசுத்தமுள்ள - மோட்சவான்களோடன்புள்ள - இயேசுவான உம்மையே - போற்ற ஆசையாயேனே.

௮. ஆளுல் பரதேசியாக - இன்னம் நான் இப்பள்ளத்தில் - அக்கதிக்குத் தூரமாக - பாடுபட்டுத் தங்கையில், - இதற்குள் ளே நான் நாடோறும் - சிந்தையோடும் வாஞ்சையோடும் - தேவரீரண்டையிலே - சேர்ந்திருப்பேன், இயேசுவே.

*J. Franck*, † 1677.

## ௨௱௫௯. Glück zu, Kreuz, von ganzem Herzen. (253 )



வாழ, சிலுவையே, வாழ, - பாரமற்ற பாரமே, - வாற உன்னை மனதார - தோள்மேல் ஏற்றுக்கொள்வேனே.

௨. இந்த நிந்தை லச்சையல்ல, - இது வெட்கம் அல்லவே; - ஏனெனில் பொல்லாப்புக்கல்ல - நீதிக்காக வருமே.

௩. சத்தியத்தின் சாட்சிக்காக - வரும் இதுக்காகவே - அந்த நாளில் ஸ்தேவான் சாக - கொண்டுபோகப்பட்டானே.

௪. உலகத்தின் பொழுதான - இயேசு தாமும் நிந்தைக்கே - ஏதுவாகி. ஈனமான - சிலுவையில் மாண்டாரே.

௫. சிலுவையின் கீழ்த் தவிக்கும் தம்முடையவர்களை - இப் போதவர் ஆதரிக்கும் - பட்சம் அன்பும் எத்தனை.

௬. ரத்த சாட்சிகளெல்லாரும் - இயேசுவினிமித்தியம் - பாடுபட்டபின் கொண்டாடும் - பூரிப்பு மகா கனம்.

௭. மிகுதியுந் துன்பப்பட்ட - இயேசுவின் அப்போஸ்த லர் - நீதிக்காய் வதைந்த மற்ற - யாவருங் ஜெவித்தவர்.

௮. அக்கியான மார்க்கத்தாரும் - ரத்தத்தால் வெறிக்கிற - பாபேல் மனிதர் எல்லாரும் - செய்த துஷ்டம் விருதா.

௯. சூடு குத்து முதலான - வாதைகள் ஏதேதுண்டோ, - அது இயேசு பத்தியான - நேசத்தை அவித்ததோ.

௰. இல்லை, சீவன் போமட்டாக - திட மனதுடனே - சத்தியத்துக்கு நன்றாக - சாட்சியை இட்டார்களே.

௰௧. வாழ, சிலுவையே, வாழ, - மோட்சத்தின் முன் தூதனே, - நீதிமான்கள் இளைப்பாற - நேர் வழியாம் வாசலே.

௰௨. வா, சன்மார்க்கராம் எல்லாரும் - எண்ணிய சிநேகிதா, - உன்னை என் இதயம் பாடும், - உன்னை விலகேன், நீ வா

௰௩. சிலுவையில் அறையுண்டோர் - இப்போதாண்டிருக்கிறார், - மெத்த நிந்தைப்பட்டிருந்தோர் - யாவுக்குமேல் ஏறினார்.

௰௪. சாட்சிகளின் பேர் பரத்தில் - எழுதியிருக்குது; - கிறிஸ்து நமக்கவ்விடத்தில் - வைத்த செல்வம் பெரிது.

௰௫. ஆகையாலே வாதையாக - சாகுஞ் சாவையும் இப்போ - மனது சந்தோஷமாக - நாம் சகிக்கவேண்டாமோ.

௰௬. நேசர் தயவாய் நம்மோடே - சொல்லும் ஒரு வார்த்தையே - துக்கத்தை எல்லாங் கட்டோடே - தள்ளி, நீக்கிப் போடுமே.

௰௭. அவரைப் பின் செல்வோமாக, - சிலுவையின் தோழரே; - அவரைப் புகழ்ச்சியாக - தோத்திரிப்போம், நோவிலே.

௰௮. குத்தடி விலங்கு காயம் - நமக்கலங்காரமாம், - சகல வித ஈனமும் - நமக்குப் புகழ்ச்சியாம்.

௰௯. லோகம் நம்மைப் பரிகாசம் - பண்ணி, சங்கரிக்கச்சே, - கர்த்தராலே பிரகாசம் - ஆறுதலும் வருமே.

௨௰. சாகும்போது திறவுண்ட - வானத்தையும் அதிலே - மகிமையினால் சூழுண்ட - இயேசுவையுங் காண்போமே.

௨௰௧. பாளையத்துக்கு வெளியே - நமதாண்டவரைப்போல் - அவர் மாதிரிப்படியே - நாமும் போவோம், வாருங்கள்.

*L. A. Gotter*, † 1735.



# சேர்ப்பு.

---

## காலைச் செபம்.

*பிதா குமாரன் பரிசுத்த ஆவியின் நாமம் என்னை ஆசீர்வதித்துக் காக்கக் கடவது. ஆமேன்.*

*பரலோகத்தையும் பூலோகத்தையும் படைத்த மு.*

*சர்வவல்லமையுள்ள நித்திய பராபரனே, பரம பிதாவே, தேவரீர் போன இராத்திரியிலும் கடந்துபோன எல்லா நாட்களிலும் ஆத்துமத்துக்கும் சரீரத்துக்கும் அடுத்த தீமையிலும் மோசத்திலுமிருந்து உமது பரிசுத்த தூதரைக்கொண்டு என்னைக் கிருபையாய்க் காப்பாற்றினதற்காக, நான் உமக்கு முழு இருதயத்தோடும் துதியும் இஸ்தோத்திரமுஞ் செலுத்துகிறேன். நான் தேவரீரைக் கோபப்படுத்தின என் பாவங்களெல்லாவற்றையும் எனக்கு மன்னித்து, நான் உம்மை அறிகிற அறிவிலேயும் சன்மார்க்கத்திலேயும் தினந்தோறும் வளர்ந்து தேறும்படிக்கு, பரிசுத்த ஆவியினால் என்னைப் பிரகாசிப்பித்து, ஆண்டு நடத்தவேண்டுமென்று மனத்தாழ்மையாய் உம்மைக் கெஞ்சி மன்றாடுகிறேன். நான் இந்த நாளிலும் பாவங்களுக்கும் பொல்லாங்குகளுக்கும் விலக்கமாயிருந்து, சகல தீமைகளுக்கும் தப்புவித்துக்கொண்டு, எப்போதும் உம்மையே என் இருதயத்தில் நினைத்திருக்கிறவனாக உம்முடைய திருச்சித்தத்தின்படியே உமது சமுகத்திலே நடந்து சஞ்சரிக்க எனக்குக் கிருபை செய்தருளும். நான் இந்த லோகத்தை விட்டுப்போகும் நேரஞ் சமீபிக்கும்போது, உமது நேச குமாரனாகிய இயேசு கிறிஸ்துவை அறிகிற மெய்யான அறிவிலேயும் விசுவாசத்திலேயும் நித்திய சீவனுக்கென்று பாக்கியமான மரணத்தை அடைய அனுக்கிரகஞ் செய்யும், சுவாமி. ஆமேன்.*

*பரமண்டலங்களிலிருக்கிற எங்கள் பிதாவே, மு.*

*கர்த்தர் என்னை ஆசீர்வதித்துக் காக்கக் கடவார்.*
*கர்த்தர் தம்முடைய முகத்தை என்மேல் பிரகாசிக்கப்பண்ணி, என்மேல் கிருபையாயிருக்கக் கடவார்.*
*கர்த்தர் தம்முடைய முகத்தை என்மேல் ஏறெடுத்து, எனக்குச் சமாதானங் கட்டளையிடக் கடவார். ஆமேன்.*

---

## இராச் சேபம்.

பிதா குமாரன் பரிசுத்த ஆவியின் நாமம் என்னை ஆசீர்வதித்துக் காக்கக் கடவது. ஆமென்.

பரலோகத்தையும் பூலோகத்தையும் படைத்த மு.

இரக்கமுள்ள பராபரனே. கிருபையுள்ள பிதாவே, தேவரீர் என்னை இந்தநாளிலே இந்நேரம்வரையில் ஆத்துமத்துக்குஞ் சரீரத்துக்கும் அடுத்த எல்லாச் சேதங்களிலுமிருந்து கிருபையாய்க் காப்பாற்றினதறகாக நான் முழு இருதயத்தோடும் உமக்கு இஸ்தோத்திரஞ் செலுத்துகிறேன். நான் இந்த நாளிலே நினைவுகளினாலும் வார்த்தைகளினாலும் கிரியைகளினாலும் உமக்கு விரோதமாய்ச் செய்த சகல பாவங்களையும் எனக்கு இரக்கமாய் மன்னித்து, அதுகளை என்றென்றைக்கும் நினையாதிருக்கவேண்டுமென்று உமது நேச குமாரனும் என் இரட்சகருமாகிய இயேசு கிறிஸ்துவின் நிமித்தம் உம்மைக் கெஞ்சிமன்றாடுகிறேன. நான் இந்த இராவிலே பிசாசின் தந்திரத்துக்கும் வல்லமைக்கும் பொல்லாத சொப்பனங்களுக்கும் விலக்கமாய்க் காக்கப்பட்டு, அமைதலாய் இளைப்பாறி நித்திரைசெய்து, காலமே உமது மகிமைக்கென்று சீவனோடுஞ் சுகத்தோடும் எழுந்திருக்கும்படி, தேவரீர் என் ஆத்துமத்துக்குஞ் சரீரத்துக்குமடுத்த எல்லாத் தீமைகளிலுமிருந்து பிதாவடைவாய் என்னைக் காப்பாறறியருளும். என்னை மீட்டுக்கொண்ட சத்தியமுள்ள பராபரனே, உம்முடைய திவ்விய கரங்களிலே என்னை முழுவதும் ஒப்புவிக்கிறேன், சுவாமி. ஆமேன்.

பரமண்டலங்களிலிருக்கிற எங்கள் பிதாவே, மு.

கிறிஸ்துவே, லோகத்தின் பாவத்தைச் சுமந்துதீர்க்கிற தேவ
ஆட்டுக்குட்டியே, என்மேல் இரங்கும்.
கிறிஸ்துவே, லோகத்தின் பாவத்தைச் சுமந்து தீர்க்கிற தேவ
ஆட்டுக்குட்டியே, என்மேல் இரங்கும்.
கிறிஸ்துவே, லோகத்தின் பாவத்தைச் சுமந்து தீர்க்கிற தேவ
ஆட்டுக்குட்டியே, உம்முடைய சமாதானத்தை எனக்குத் தாரும். ஆமேன்.